

## மனநிம்மதியான முதலீடு - பரிபூரண பாதுகாப்பு (TM)

உங்கள் டெபாசிட்டுகள் T. நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால் (டோர் நம்பர் 27சி, பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக்கப்படுகின்றன.

படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரிய நிர்வாகம்

கௌரவமான வருமானம்

மரியாதையான சேவை

வங்கியல்லாத கம்பெனிகள் (ரிசர்வ் பேங்க்) வழிமுறைகள் 1977, பகுதி - 1 விதி - 3 உபவிதி - XIஇன் கீழ் விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

**REGISTERED EDUCATIONAL TRUST NO. 1488.**

**வாடிக்கையாளர் வசதி திட்டம்: (TM)** 30 தினம் 18% PA, 45 தினம் 19% P.A. 60 தினம் 20% PA, 90 தினம் 21% P.A.

எப்போது வேண்டுமானாலும் பணம் எடுத்துக் கொள்ளலாம். புதுப்பிப்பதற்காக வர வேண்டிய அவசியமில்லை.

நமது மாணவர்களின் எண்ணிக்கை மதிப்பீடு: வருடத்திற்கு 1 லட்சம் பேர். 100 பேராசிரியர்கள் சேவை செய்கிறார்கள்.

**வருமானவரி இல்லை**

**மாதப் பென்ஷன் திட்டம் (TM)**

| டெபாசிட் | காலம் | மாதவட்டி ரூ. |
|---|---|---|
| 5000 | 1 வருடம் | 125 |
| 10000 | 1 வருடம் | 250 |
| 10000 | 3 வருடம் | 300 |
| 10000 | 5 வருடம் | 320 |

**சேமிப்பு கணக்கு: 15%P.A. தினசரி புராடக்ட், மாதாமாதம் வரவு.**

நடத்தப்படும் படிப்பு பயிற்சிகள் IAS, IPS, IIT, BE, MBBS, BL, MBA, AIPMD, SSC, AMIE, Chartered Manager Courses, TNPSC, Spoken English/Hindi, BSRB, RBI, SBI, LIC, GIC, Computer courses, GMAT, TOEFL, etc

**சட்ட ஆலோசகர்**

ஸ்ரீ V.S. சந்திரசேகரன், B.A;B.L.
அட்வகேட், உச்சநீதி மன்றம்,
26, ரங்கநாதன் தெரு, சென்னை - 17.

**ஆடிட்டர்**

M/S. வேல் முருகன் அண்ட் கோ
சார்ட்டர்ட் அக்கவுண்ட்டன்ட்ஸ்
30/A 2 பார்டெட் ரோடு, சென்னை - 17.

**ஆல் வேல்டு அக்கவுண்டிங் அட்மினிஸ்ட்ரேடிவ் அண்ட் டெக்னலாஜிகல் அகாடமி(AAAAA) (TM)**

**All-World Accounting Administrative and Technological Academy.**

**தலைமை காரியாலயம்:** "வித்யாலயா", 27சி, ராமேஸ்வரம் ரோடு, மாம்பலம் ரயிலடி சமீபம், Next to DAV School, T. நகர், சென்னை - 17.

கிளை: 7, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை - 47.

கிளை: 5, 2வது மெயின் ரோடு, நியு காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44.

கிளை: 13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 114.

சொத்து பாதுகாப்பு, மாத வட்டிக்கும், அசலுக்கும் முன்கூட்டியே செக்.

**உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025.**
**AAAAA — பாதுகாப்பின் சின்னம்.**

Prof. V. **விவேகானந்த்**
B.Com, (Distn), DOA, MBA (Distn), CAIIB
(All India First), EKSAMD (Germany)
(Distn), B.L.
**Managing Trustee.**

Dr. **பரமேஸ்வரி,** MBBS,
**Managing Trustee.**

**Sunday Working Day**

(TM) :Trade Mark



# பெரியதம்பி

சின்ன வயதில் ஒரு பெண்ணை ஏமாற்றி விட்டு, வேறொருத்தியை மணந்துகொண்டு ஊரை விட்டு ஓடிப் போய் விடுகிறார் ஒரு போலீஸ் ஆபீசர். ஊரும் உறவும் அவரை விலக்கி வைக்கிறது. முப்பது வருடங்கள் கழித்து, அவரது மகன் பழைய, உடைந்த உறவு களைத் தேடிப் போய், தூசி தட்டி, ஃபெவிகால் போடுவது கதை.

நீண்ட நாட்களுக்குப் பின் பிரபுவுக்கு அவரைப் போலவே ஒரு கனமான கேரக்டர். நண்பன் வீட்டு விசேஷத்துக்குப் போய் அவனது உறவினர்களின் அன்பில் திக்குமுக்காடி, தனக்கு இப்படியொரு உறவுப்படை இல்லையே என ஏங்குவதாகட்டும்; கால் நூற்றாண்டுக்கும் மேலாகத் தன் அப்பா மறைத்து வைத்திருந்த பழங்கதை தெரியவருகையில் சிலிர்த்துக் கொண்டு பழைய கிராமம் தேடிப் புறப்படுகிறபோது பொங்குகிற கலவை உணர்விலாகட்டும்- பிரகாசிக்கிறார்!

சொல்லிவைத்தாற்போல எல்லாப் படங்களிலும் கிராமத்துப் பெரிய மனுஷராக வரும் விஜயகுமார், இந்தப் படத்திலும் அங்ஙனமே.

ஒரு பெண்ணை ஏமாற்றி விட்டதற்காகத் தம்பியை ஒதுக்கி வைத்துவிட்டுப் பிறகு மனசுக்குள் மருகுகிற பாத்திரத்தில் அதிகபட்சம் என்ன சாதிக்க முடியுமோ, அதைச் செய்திருக்கிறார்.

'தலைவாசல்' விஜய், சந்திரசேகர், வடிவுக்கரசி என்று ஒவ்வொரு கலைஞரையும் அவரவர் திறமைக்கேற்ப இதுபோலவே 'கனமாக'ப் படைத்திருக்கும் இயக்குநர் சித்ரா, சறுக்குவது 'நக்மாவிடம்.

எந்த கிராமத்துப் பெண் இப்படி அலைந்து அலைந்து காதலிப்பாள்? எந்த கிராமத்துப் பெண் இப்படி நொடிக்கொருதரம் சேலையை அவிழ்த்து அவிழ்த்து விட்டுக் கொள்வாள்? கவர்ச்சி எல்லைகளைத் தாண்டி, அருவருப்பு கொள்ளத்தக்க வகையில் கதாநாயகிகளை கேவலமாய்ப் பயன்படுத்தும் போக்கு யோக்கியமும் இல்லை; ஆரோக்கியமும் இல்லை.

அப்புறம் கவுண்டமணி. அவர் சும்மா நின்றால், நடந்தால், திரும்பினால் கூட தியேட்டரில் சிரிக்கிறார்கள். இதனைப் பயன்படுத்திக்கொண்டு இந்தப் படத்திலிருந்து தனக்கொரு தனி ஹீரோயின், தனி கதை, திரைக்கதை என்று தனி டிராக் போட்டு, தனியாவர்த்தனம் வாசிக்க ஆரம்பித்திருக்கிறார். வாழ்க வளமுடன்.

படத்தின் முதல் பாதியில் காணப்படுகிற நிதானமும் பாத்திர அறிமுகங்களில் இருக்கிற தெளிவும் அழுத்தமும் குறைந்தபட்ச வசனங்களில் கதை நகர்த்துகிற லாகவமும் 'இது தமிழ் சினிமாதானா?' என்று கேட்க வைக்கின்றன. அத்தனை யதார்த்தம்; அழகு.

ஆனால் இடைவேளைக்குப் பிறகு வழக்கம் போல் பாட்டுகளும் சண்டையும் சில்லறை வியாபார உத்திகளும் அபத்தக்களஞ்சியமான கிளைமாக்ஸும், 'ஆமாம்; இது தமிழ் சினிமாவேதான்!' என்று அடித்துச் சொல்கின்றன. அத்தனை ஜவ்வு; விளைவாக, எரிச்சல்.

- ஆர்.பி.ஆர்.



• நித்யா

• ரவீந்தர்

# காதலைத்

**தன்னை சிறந்தவனாகவும், உதாரண புருஷனாகவும் காட்டிக் கொண்டு காதலியை இம்ப்ரெஸ் செய்ய நினைப்பவன்தான் சராசரிக் காதலன். காதலியும் அப்படித்தான். இந்தக் காதல், திருமணத்தில் முடிந்த பிறகுதான் மற்றவரின் மறு பக்கமும், எதிர்பாராத கோணங்களும் பிடிபடும். அதே சமயம் 'ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்' என்ற பழமொழி நடைமுறையாகும். இங்கே சில தம்பதிகள் தங்கள் காதல் அனுபவத்தையும் அதைத் தொடரச் செய்ய அவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகளையும் விவரிக்கிறார்கள்.**

## நித்யா ரவீந்தர்:

'மயில்ப்பீலி'என்ற மலையாளப் படத்திலே நான் நடித்த போதுதான் அவரைச் சந்தித்தேன். அந்தப் படத்துக்கு அவர் உதவி கேமராமேனாக இருந்தார். ஒரு வருடம் நண்பர்களாகத்தான் பழகினோம். பிறகு திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தோம். ஆனால் இந்தத் திருமணம் நடக்க எட்டு வருடங்கள் காத்திருந்தோம். என் பிறந்த விட்டுக் கமிட்மெண்ட்களை முடித்து விட்டுதான் திருமணம் என்று நானும், ஒரு படத்தின் ஒளிப்பதிவாளராக ஆன பிறகுதான் திருமணம் என்று அவரும் தீர்மானம் செய்திருந்ததுதான் இந்தத் தாமதத்துக்குக் காரணம். இவ்வளவு நீண்ட காலகட்டத்தில் மற்றவரின் குறை, நிறை இரண்டையுமே ஓரளவுக்கு முழுமையாகவே அறிந்து கொள்ள முடியும். அதே சமயம் பல வருடங்கள் பழகிய பிறகுதான் ஒருவரைத் திருமணம் செய்து கொள்வது நல்லதுன்னு சொல்ல மாட்டேன். இந்தக் காலத்துப் பெண்கள் புத்திசாலிகள். சில சந்திப்புகளிலேயே அவர்களால் ஒருவரை சரியாகக் கணிக்க முடிகிறது.

எனினும் எங்கள் திருமண வாழ்க்கையில் சச்சரவுகளே இல்லாமலில்லை. ஆனால் ஒன்று. ஒருவரது எதிர்பாராத மைனஸ் தன்மை தெரிய வரும்போது அவரது பெரிய ப்ளஸ் தன்மையை மனத்தில் கொண்டு வந்து விடுவோம். அதே போல் எங்களுக் கிடையே ஏதாவது பிரச்னை எழுந்தால் அதை எங்களுக்குள்ளேயே தீர்த்துக் கொள்வோம். ஒருபோதும் அதை மற்றவரிடையே சொல்ல மாட்டோம். எங்கள் இருவருக்குமே ஈகோ கிடையாது. டப்பிங்காக இருந்தாலும் சரி, அவ்வப்போது நான் நடிக்க வேண்டியிருந்தாலும் சரி, அவர் தலையிட்டுத் தடுக்க மாட்டார். என் மேல் அவர் ஒருபொழுதும் சந்தேகப் பட்டதில்லை. அதே சமயம் காரோ, பங்களாவோ வாழ்க்கை அல்ல என்பதை நான் புரிந்து வைத்திருக்கிறேன். பெண்ணுரிமை என்று கொடி பிடிப்பது அவசியமென்று நான் நினைக்கவில்லை.

## ஷீலா சுரேஷ் :

• ஷீலா

• சுரேஷ்

"எனக்குத் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டிருந்த சமயம் அது. வேறொரு பெண்ணை விரும்பிய காரணத்தால் அந்த மனிதர் இந்தத் திருமணத்திற்கு மறுத்து விட்டார். இந்த விஷயம் எங்கள் அலுவலகத்தில் கூட, பலருக்கும் தெரிந்து விட்டது. ஒரு பெண்ணுக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டு, தடைப்பட்டால் சமூகம் எப்படி

# தொடர வைக்கிறார்கள்...

ரியாக்ட் செய்யும் என்பது தெரிந்ததுதானே? மனமொடிந்து போய் இனித் திருமணமே செய்து கொள்வதில்லை என்று முடிவெடுத் தேன். அந்தக் காலகட்டத்தில்தான் உடன் பணியாற்றிய சுரேஷ் தன் பரிவான வார்த்தை களால் என்னைக் கவர்ந்தார். கல்யாணமும் ஆயிற்று. எங்களது நல்ல பக்கத்தையே ஒரு வருக்கொருவர் காட்ட வேண்டுமென்றெல் லாம் நாங்கள் முயற்சிக்க வில்லை. சொல்லப் போனால் நான் ரொம்ப பட்டென்று எதையும் மறைக்காமல் பேசும் தன்மை கொண் டவள் என்பதால் சிலர் என்னைத் திமிர்பிடித்தவள் என்ற முடிவுக்குக் கூட வந்த துண்டு. இந்த என் குணமும் இவருக்கும் தெரிந்ததுதான்.



• ரூபி



• அருள் ஜான்சன்

நாங்கள் தொடர்ந்து அன்பு செலுத்த ஒரு நடைமுறை பெரிதும் உதவுகிறது. தினமும் எங்களுக்குள் எந்தப் பிரச்னை வந்தாலும் அதைப் பற்றிப் பேசி ஒரு சமரசத்துக்கு வந்த பிறகுதான் தூங்குவோம். யாராவது தவறு செய்தது தெரியவந்தால் தயங்காமல் 'சாரி' சொல்லிவிடுவோம். இதனால் வெறுப்பு என்பது எங்களிடையே வந்ததில்லை."

## ரூபி அருள் ஜான்சன்:

"சொன்னால் நம்புவீர்களோ என்னவோ? எங்கள் சின்ன டிபார்ட்மெண்ட் டில் குறுகிய காலத்தில் நான்கு ஜோடிகள் காதல் திருமணம் செய்து கொண்டார்கள். இந்த நிலையில் அருள் ஜான்சன் என்னை மணக்க விரும்பியபோது, அது எனக்கு அதிர்ச்சியைத் தரவில்லை. அதே சமயம் என் வீட்டில் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். காரணம் அவர் வளமையான பொருளாதாரப் பின் னணி கொண்டவர். நாங்கள் செல்வந்தர்கள் அல்ல. திருமணத்துக்கு முன் அவரது வெளிப் படையான தடாலடி குணம் எனக்குப் பிடித் திருந்தது. திருமணத்திற்குப் பிறகு அவரது இதே குணம் சில சமயம் எனக்குப் பாதகமாக வும் இருந்ததுண்டு. என்றாலும் எதையும் மனதில் போட்டு உழப்பிக் கொள்ள மாட் டேன் நான்.

திருமணத்திற்கு முன் அவர் பல விஷயங் களில் தானாகவே முன்வந்து பல காரியங் களைப் பொறுப்பேற்றுச் செய்வார். ஆனால் திருமணத்திற்குப் பிறகு குடும்பப் பொறுப்புக் கள் எல்லாமே என் தலையில்தான். டெலி போன் கட்டணம் செலுத்துவது முதல் ரேஷன் வாங்குவது வரை எல்லாமே இன்று என் கண்காணிப்பில்தான். இந்தச் சுமைகளையும் 'நான் எது செய்தாலும் அவர் தலையிடு வதில்லை' என்ற கோணத்தில் எடுத்துக் கொண்டு சந்தோஷப்படுகிறேன். மற்ற எதை யும் விட திருமணம் என்ற அமைப்பைக் கட் டிக் காப்பது முக்கியமாயிற்றே?"

## கண்ணம்மாள் ராகவன்:

"தனியார் நிறுவனமொன்றில் நான் வேலை செய்துகொண்டிருந்தபோது அவர் அங்கு வேறு துறையொன்றில் மேலதிகாரியாக இருந்தார். பரிவான பேச்சு, அழகான கையெழுத்து எல்லாமே அவரிடம் எனக்குப் பிடித்துப் போயிற்று. இந்த நிலையில் அவர் தன் காதலை என்னிடம் வெளிப்படுத்திய போது சம்மதித்தேன். அதே சமயம் நான் பெற் றோரை இழந்தவள். புத்தூரில் ஈ.வெ.ரா. பெண் கள் விடுதியில் வளர்ந்தவள். அநாதையான என்னை ஏற்க அவர் வீட்டில் ஒத்துக் கொள்ள வில்லை. அவர்களுக்குத் தெரியாமல் எங்கள் திருமணம் நடந்தது. அதற்குப் பிறகு கூட 'ஏதாவது பெரிய தொகையாகக் கொடுத்து கழட்டி விட்டுடு' என்றனர். ஆனால் இவர் மட்டும் உறுதியாக இருந்தார்.

இப்படி என் விஷயத்தில் அவர் விட்டுக் கொடுக்காமல் உறுதியாக இருந்ததை நினைக் கும்போது அவரது மற்ற சிறு பலவீனங்கள் என்னை ஒருபோதும் பாதிக்க விட்டதில்லை. வாழ்க்கை என்பதே அட்ஜஸ்ட்மெண்ட் தானே. எங்களுக்குக் குழந்தை பிறந்ததும் அவ ரது வீட்டினரும் சமாதானமாகி விட்டனர்.

- ஜி.எஸ்.எஸ்.

அட்டை வண்ணப்படம்: ஸ்ரீஹரி
மாடல்: மணி, ஷைலஜா

“எனக்குத் திருமணம் நடைபெற்று மூன்று குழந்தைகளும் பிறந்த நிலையில், என் கணவர் வேறொரு பெண்ணுடன் கள்ளத் தொடர்பு வைத்துக் கொள்ள ஆரம்பித்தார். அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தில் என்னைத் துன்புறுத்த ஆரம்பித்தார்.

“என்னுடைய திருமணத்தின்போது அதிக வரதட்சிணை தரவில்லை என்றும் அரசாங்க வேலையிலுள்ள அவருக்கு என் பெற்றோர் கொடுத்த வரதட்சிணை மிகவும் குறைவு என்றும் அடிக்கடி சொல்லிக் காட்டிக் கொண்டே இருந்தார். குழந்தைகள் பிறந்த போதும் எனது பெற்றோர் சரியாகச் சீர்செய்யவில்லை என்றும் என்னை அடிக்கடி துன்புறுத்த ஆரம்பித்தார்.

“ஒரு கட்டத்தில் என்னை நடத்தை கெட்டவள் என்று வீண்பழி சுமத்தினார். வேறொரு திருமணம் செய்து கொள்வதற்கு நான் சம்மதம் தெரிவிக்க வேண்டுமென்று கூறி எதுவுமே எழுதப்படாத ஸ்டாம்ப் பேப்பர்களில் என்னிடம் அடித்து மிரட்டிக் கையெழுத்து வாங்கினார். பிறகு என்னிடமிருந்த வளையல், கம்மல் ஆகியவற்றையும் அடித்து மிரட்டிப் பிடுங்கிக் கொண்டு, என்னை எனது பெற்றோர் வீட்டுக்கு விரட்டி விட்டு விட்டார்.

“எனது மூன்று குழந்தைகளில் மூன்றாவது குழந்தை மாத்திரம் என் கணவரிடமே உள்ளது. மற்ற இரண்டு குழந்தைகளும் நானும் சாப்பாட்டுக்கே மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம். எனவே கனம் கோர்ட்டார் அவர்கள் எனக்கும் எனது இரண்டு குழந்தைகளுக்கும் எனது கணவரிடமிருந்து ஜீவனாம்சம் பெற்றுத் தருமாறு வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்!”

# ‘மனைவிக்குக் கள்ளத் தொடர்பு!’

## — மானம் கெட்ட கணவனின் பொய் சாட்சியம்!

மனைவியின் இந்த மனுவுக்குக் கணவன் எதிர் மனு தாக்கல் செய்தான். எப்படி?

“நான் என் மனைவியை எந்தவிதத்திலும் கொடுமைப்படுத்தவோ, அடித்து உதைத்துத் துன்புறுத்தவோ இல்லை. அப்படி அவள் கூறியிருப்பது சுத்தப் பொய். எனக்கு எந்தப் பெண்ணுடனும் கள்ளத் தொடர்பும் இல்லை. அதுவும் சுத்தப் பொய்.

“மாறாக என் மனைவிதான் வேறொருத்தனுடன் கள்ளத் தொடர்பு வைத்திருந்தாள். அது கையுங் களவுமாக என்னால் பிடிக்கப்பட்டுப் பஞ்சாயத்தும் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் என் மனைவியும் அந்த நபரும் தங்களுக்கிடையிலான கள்ளத் தொடர்பை, கூடா ஒழுக்கத்தை ஒப்புக் கொண்டனர். அதை ஒத்துக் கொண்டதோடு, நான் இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினாலும் தாராளமாகச் செய்து கொள்ளலாம் என்றும் என் மனைவி, பஞ்சாயத்தார் முன்னிலையில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருக்கிறாள். சம்பந்தப்பட்ட அந்தக் ‘கள்ள நபர்’ கையெழுத்துப் போடாமல் தப்பி ஓடிப் போய் விட்டார்.

“எனவே, கள்ளத் தொடர்பு கொண்டிருந்ததாக என் மனைவியே ஒப்புக் கொண்டு கையெழுத்துப் போட்டிருப்பதால், நான் அவளுக்கு ஜீவனாம்சம் கொடுக்கக் கடமைப்பட்டவன் அல்ல. என் மனைவியிடம் இருக்கும் இரண்டு குழந்தைகளில் ஒரு குழந்தையின் மேல் நான் நிலம் வாங்கியிருப்பதால், அந்தக் குழந்தைக்கு அந்த நிலத்திலிருந்து வருகிற வருமானமே போதும் என்பதால் அதற்கும் நான் ஜீவனாம்சம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை.

“என்றாலும் இன்னொரு குழந்தைக்கு நான் ஜீவனாம்சம் தரத் தயாராய் இருக்கிறேன்.

இருந்தபோதிலும் நான் வாங்குகிற சம்பளத்தில் பிடித்தமெல்லாம் போகக் கையில் கிடைப்பது மிகவும் குறைவுதான். அதோடு எனக்குச் சொந்தமான நிலத்திலிருந்து வருகிற வருவாயும் மிக மிகச் சொற்பம். எனவே, எனது அந்த ஒரு குழந்தைக்கு நான் தரக்கூடிய ஜீவனாம்சத் தொகையை குறைத்து உத்தரவிடுமாறு கனம் கோர்ட்டார் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்."



இருதரப்பு வாதங்களையும் சாட்சியங்களையும் விசாரித்த நீதிபதி என்ன தீர்ப்பளித்தார்?

"மனைவியின் கூடா ஒழுக்கத்தைக் கையுங் களவுமாகப் பிடித்து பஞ்சாயத்தில் முறையிட்டதாகக் கணவர் சொல்கிறார். விவரமறிந்த பஞ்சாயத்தார் என்ன செய்வார்கள்? ஒரு மனைவி இருக்கும்போதே சட்ட விரோதமாக இன்னொரு திருமணம் செய்து கொள்ளலாம் என்றா மனைவியிடம் எழுதி வாங்க உதவி செய்வார்கள்? இப்படிப்பட்ட வாசகம் மற்ற எல்லா வாசகங்களையும் சந்தேகத்துக்குள்ளாக்குகிறது.

"மேலும் அந்தக் கள்ளத் தொடர்பு நபர் மாத்திரம் கையெழுத்துப் போடாமல் தப்பி ஓடி விட்டார் என்பதையும் ஒப்புக் கொள்ள முடியவில்லை. இதனால் இதெல்லாம் பஞ்சாயத்தார் முன்னிலையில் நடந்திருக்குமா என்பதே சந்தேகத்துக்குள்ளாகிறது. எனவே, தன்னிடம் வெற்று ஸ்டாம்ப் பேப்பரில் கையெழுத்து வாங்கியதாக மனைவி கூறியிருப்பதை வைத்துப் பார்க்கிறபோது, அப்படிப்பட்ட பேப்பரிலேயே இந்த வாசகங்கள் எழுதப்பட்டிருக்கலாம் என்றும் தோன்றுகிறது.

"மனைவி என்பவள் இந்த மனுவைத் தாக்கல் செய்கிற போது கூடாஒழுக்கத்துடன் வாழ்ந்து வந்தார் என்பது நிரூபிக்கப்படவில்லை. ஒரு வாதத்துக்காக ஒருமுறை அவர் ஒழுக்கத்திலிருந்து தவறியிருந்தார் என்பதை ஒப்புக் கொண்டாலும் கூட அதன் காரணமாகவே அவளுக்குக் கணவன் ஜீவனாம்சம் ஏதும் தர வேண்டியதில்லை என்பதை மறுக்க கொள்ள இயலாது.

"தனது வருமானங்கள் பற்றி கணவன் தன் எதிர் மனுவில் கூறியிருக்கிற தகவல்களும் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இல்லை. எனவே, மனைவி மற்றும் அவருடன் இருக்கும் இரண்டு குழந்தைகளுக்கும் சேர்த்து மொத்தம் அறுநூறு ரூபாயை மாதா மாதம் ஜீவனாம்சத் தொகையாகத் தர உத்தரவிடுகிறேன்."

இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட கணவன் - மனைவி என்பவர்கள் யார் யார் தெரியுமா? கணவனின் சொந்த அக்காள் மகள்தான் மனைவி! சொந்தத் தாய் மாமன்தான் கணவன்!

*(வழக்குரைஞர் கிருஷ்ணராஜு கூறிய ஒரு வழக்கின் சாராம்சம்தான் இது!)*

தொகுப்பு : **பிரின்ஸ்**

## காதலர் தினம்:

# ஜாலியாக ஆரம்பித்து ஜோலியாகத் தொடரும் வைபவம்!



**பி**ப்ரவரி மாதம் 14-ஆம் தேதி காதலர் தினம். Valentine Day என்கிறார்கள் ஆங்கிலத்தில். வேலன்டின் என்ற பெயருக்கும் காதலர் தினத்துக்கும் என்ன சம்பந்தம்?

வேலன்டின் என்ற பெயரில் இரண்டு பாதிரிமார்கள் ரோமாபுரியில் இருந்தார்கள். ஒருவர், ரோம் நாட்டு சக்கரவர்த்தி கிளேடியஸால் கொடுமைப்படுத்தப்பட்ட போது தன் மதத்துக்காக இன்னுயிரை ஈந்து, தியாகியானார்.

இன்னொருவர் ஒரு பிஷப். அவரும் இதே மாதிரி தனது மதத்துக்காக உயிர்நீத்து அமரத்துவம் பெற்றவர் என்று பழைய வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன.

'வேலன்டின் என்ற பெயரில் இரண்டு பேர் வாழ்ந்திருக்கவில்லை. ஒரே ஒரு பாதிரியார்தான் இருந்தார்' என்றும் ஒரு கருத்து நிலவுகிறது.

எது எப்படியோ, இந்த வேலன்டின் என்ற பெயருக்கும் காதலர் தினத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. வேலன்டினின் சொந்த வாழ்க்கையில் எந்தக் காதல் விவகாரமும் இல்லை!

ரோமில் பேகன் திருவிழா என்று வருடத்தில் ஒருநாள் கொண்டாடப்பட்டதுண்டு. எந்தவிதமான மதச் சார்புமில்லாமல் ஜாலியாக, மனமகிழ்ச்சியுடன் ஒரு நாளைக் கழிக்கும் விதத்தில் குஷியான ஒரு விழா அது. ஒவ்வொரு வருடமும் பிப்ரவரி மத்தியில் அல்லது இளவேனில் பருவத்தில் அந்த விழா கொண்டாடப்பட்டு வந்தது. ஒருவேளை அத்திருவிழாவின் வளர்ச்சியாக, அதுவே மறு உருவம் எடுத்து காதலர் தினமாக மாறியிருக்கக்கூடும். காதல் என்றாலே ஜாலிதானே!

இன்று காதலர் தினத்தன்று வாழ்த்து அட்டைகள் பரிமாறிக் கொள்ளும் அளவுக்கு முன்னேறியிருக்கிறது. மேலை நாட்டின் இந்த நாகரிகம் மெள்ள இந்தியாவுக்குள் புகுந்தாகி விட்டது. 'காதல் தேசம்' படத்தில் வினித்தும் அப்பாஸும் தபுவுக்கு தேடிப் பிடித்துக் காதலர்தின வாழ்த்து அட்டை அனுப்பிய பிறகு சென்னையில் இந்த ஜுரம் வெகு மும்முரம்! இதெல்லாம் சரி;

Valentine Day என்று ஏன் பெயர் வைத்தார்கள் என்றுதான் யாருக்கும் தெரியவில்லை.

- ராணிமைந்தன்

*(காரணம் யாருக்காவது தெரிந்தால் கல்கிக்கு ஜாலியாக எழுதியனுப்புங்களேன்!)*

‘யாதும் ஊரே . யாவரும் கேளிர்’



# 23 வது
# இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி

**தீவுத் திடல், சென்னை - 600 009**

**சிந்தை குளிர்விக்கும் சிறப்பம்சங்கள்**

சிறுவர் உல்லாச உலகம், ✸ இயல்பியல் நுட்பத்துடன் கூடிய அறிவியல் கூடம். ✸ ரெயில் வண்டியில் க்ரடி, சிங்கம், மிக்கி அண்டு டோனால்டு, புலி உருவங்கள் குழந்தைகளுக்கு வரவேற்பு ✸ அண்ணா கலை அரங்கில் தினசரி நாடகம், சினிமா மற்றும் பல கேளிக்கை அம்சங்கள்.

**சிறப்பு பஸ் வசதிகளும் உண்டு.**

ஒவ்வொரு மணி நேரத்திற்க்கும் உங்களில் ஒருவருக்குக் கிடைக்கலாம் ஓர் அதிர்ஷ்டப் பரிசு. ஆகவே, உங்கள் பாதிநுழைவுச் சீட்டைப் பத்திரமாக வைத்திருங்கள்.



**தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**
சென்னை - 600 004.

**இன்றே உங்கள் குடும்பத்துடன் வருகைதாருங்கள்.**

பரிசளிப்போர் : • அன்பகம் உணவகம் • ஸ்ரீ கட்பீஸ் ஜங்ஷன்
• பாப்புலர் அப்பளம் • மருதாணி வாலா உகம் ராஜ் & கோ. சென்னை.
• பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட் • மணிமேகலை பிரசுரம் • எவ்வெரிடே திரி ஸ்டவ்
விடுமுறை நாட்களில் சிறப்பு பரிசு அளிப்பவர்கள் : எச்.எம்.பி.ராஸி ∴பேன் கம்பெனி

DIPR / DIS / 31 / 97

லவ்-ஆல்!

ஐயோ! ஐ லவ் யூன்னு சொல்லப் போறானா...?

தெரியுமே! நேத்திக்கே எனக்கு போன் பண்ணி, மாப்ளே, செலவுக்குப் பணமில்ல; ஆயிரம் ரூபாய் அனுப்பி வைங்கன்னு கேட்டுட் டாரே...

ஏங்க! குட் நியூஸ்! எங்கப்பா நம்ம கல்யாணத்துக்கு சம்மதிச்சுட்டார்!

யோவ்! வேணாம்... நான் அனுபவஸ்தன் சொல்றேன், கேளு....

ஐயோ!
உன்னைத்
தான் காதலிக்க
றேன்னு லவ்
லெட்டர் தரப்
போறாளா...?

எவ்வளவு கஷ்டப்
பட்டு மனப்பாடம்
பண்ணிட்டு வந்து
பேசினேன்....
தூங்கிட்டாளே!

கல்யாணமானா நீங்க
அத்தனையையும் நிஜ
தங்கத்துல செஞ்சு போட
மாட்டீங்களா என்ன...!

தலையில
என்ன பத்து
முழம்பூ
இருக்குமா...?

போங்க! எனக்கு
எத்தனை வயசோ;
அத்தனை முழம்...
கண்டுபிடியுங்க
பார்க்கலாம்...

'BILATERAL SCIATICA' என்றால் என்ன?

**தமிழக அரசியல் அகராதியைப் புரட்டினால், புதுக்கோட்டைக்குப் போய் தேர்தல் பிரசாரம் செய்தாலும், மண்ணைக் கவ்வப் போவதை அறிந்து, ஆஸ்பத்திரிக்குப் போக உதவுகிற தந்திரம் என்று அர்த்தம் கிடைக்கும் வாய்ப்பு உண்டு.**

**காரணம், முன்னாள் முதலமைச்சர் ஜெயலலிதாவுக்கு இந்த நோய் வந்திருப்பதாகத்தான் பத்திரிகைகளுக்கு செய்தி தரப்பட்டுள்ளது.**

**'பைலாட்டிரல் சியாடிகா என்பது என்ன வியாதி? அது ஏன் வருகிறது? அதன் விளைவுகள் என்னென்ன? மருத்துவம் என்ன? என்று பல வினாக்களையும் டாக்டர் பவானியிடம் கேட்டோம்.**

# ஜெ. உடம்புக்கு என்ன?


• பவானி

"**பை**லாட்டிரல் சியாடிகா' என்பதை தமிழில் முதுகுத்தண்டு மூட்டுவாதம் என்று சொல்லலாம். குனிந்து, நிமிர்ந்து வேலை செய்யாமல், உடம்புக்குப் போதிய அளவு உடற்பயிற்சி இல்லாமல் ரொம்பவும் சொகுசான வாழ்க்கை வாழ்பவர்களுக்கு இந்தப் பிரச்னை வருகிற சாத்தியம் உள்ளது.

"நம் முதுகு எலும்புத் தொடருக்குள் முதுகுத்தண்டு அமைந்துள்ளது. பொதுவாக நான்கு பகுதிகளாக இதனைப் பிரிப்பார்கள். மூன்றாம் பகுதிக்கு 'லம்பார்' என்று பெயர். இதில் நாலைந்து முதுகெலும்புகள் இருக்கும். முதுகெலும்புகள் ஒன்றோடொன்று உராய்வதைத் தவிர்க்க ஜெல்லி போன்ற ஒரு சமாசாரம் (ஷாக் அப்சார்பர் போல) இருக்கும். முதுகுத்தண்டின் இந்த லம்பார் பகுதியிலிருந்து புறப்படும் நரம்புகள் கால்வரை செல்லும்.

"போதிய உடற்பயிற்சி இல்லாதபோது, இந்த நரம்புகள் ஆரம்பமாகும் பகுதியில் அசாதாரணமான எரிச்சல் ஏற்படும். இதனால் நரம்புப் பகுதியில் விண் விண்ணென்று வலி ஏற்படும். நாளடைவில், நரம்புகளை பாதித்து, கால்களில் மரத்துப் போன உணர்வை ஏற்படுத்தி விடும்; கால்கள் பலமிழக்க, செயலற்றுப் போய் விடுகிற அபாயமும் உண்டு.

**இ**தற்கு என்ன மருத்துவம்?

"நாலைந்து வாரமாவது படுக்கையிலேயே முழுமையான ரெஸ்ட் எடுப்பதுதான். வலியைக் குறைக்க மாத்திரைகள் எடுத்துக் கொள்ளலாம். படுக்கையிலேயே இருப்பதால், பிசியோதெரபி பயிற்சிகள் செய்ய வேண்டியதும் மிகவும் அவசியம். ஆபரேஷனும் செய்து கொள்ளலாம். அது மேஜர் ஆபரேஷன் என்பதால், முதலில் ரெஸ்ட், பிசியோதெரபி முறைகளையே டாக்டர்கள் அட்வைஸ் செய்வார்கள்."

— **கௌதம் ராம்**



# நயாஜோதி அறக்கட்டளை

## 4, கந்தசாமித் தெரு, மந்தைவெளி, சென்னை - 28.



## முன் மாதிரியான முதியோர் இல்லம்

முதுமைப் பருவத்தை மதிப்புடனும் சாந்தத்துடனும் கழிக்க விரும்புகிறீர்களா? சிறந்த சுற்றுப்புறச் சூழலில் அமைந்த எங்கள் சிறப்பான உயர்தர இல்லம் வகை செய்யும். புதிய மகாபலிபுரம் சாலையில் (வி.ஜி.பி. கடற்கரைக்கு மூன்று கிலோ மீட்டர் தூரத்தில்) பனையூர் பேருந்து நிற்குமிடத்திற்கருகே அம்மன் கோயில் தெருவின் திருப்பத்தில் இவ் வில்லம் இருக்கிறது.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் ஆசியுடன் திறக்கப்பட்ட இவ்வில்லம் நல்ல வசதிகள் கொண்டது. முதியோர்களின் உடல், மனம், ஆத்மா ஆகியவற்றின் தேவைகள் நிறைவேறுமாறு உருவாகிறது. அறக்கட்டளையின் நிதிகளின் மூலம் முதியோர்களுக்குச் செலவினங்களில் சலுகைகள் அளிக்கப்படுகின்றன.

அறக்கட்டளைக்கு நன்கொடைகள் தருவோருக்கு **Sec. 80 - G** வருமான வரிச் சலுகைகள் உண்டு. பெருங்கொடையாளர்களை, நிரந்தரமான கற்பதிவுகளைப் பதித்து அறக்கட்டளை கௌரவிக்கும்.

நன்கொடையாளர்களும் சேர விரும்புவோரும் தொடர்பு கொள்ளவும்.

**டாக்டர் எம்.எஸ். சீனிவாசன்**
தலைவர் (போன் : 4937008)

**கே. குப்புசாமி**
நிர்வாக டிரஸ்டி (போன் : 4912957)

---

*ஸ்ரீ ராமஜெயம்* **Ph: 8542144**

# வடமாநில புனித யாத்திரை

**2.5.97: இது 16 நாட்கள் கொண்டது.** பூரி ஜெகன்னாத்-கோனாரக்–புவனேஸ்வர்- கயா-புத்தகயா-நேபாளம்-போக்ரா. அலகாபாத்–அயோத்தியா–காசி. நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய் 3600.

**2.5.97: இது 30 நாட்கள் கொண்டது.** பூரி ஜெகன்னாத்-கோனாரக்-புவனேஸ்வர்-கயா-புத்தகயா-நேபாளம்-போக்ரா-அலகாபாத்–அயோத்தியா-காசி-நைமிசாரண்யம்-ஹரித்துவார்-ரிஷிகேஷ்-பத்ரிநாத்–கேதார்நாத்-நியூடெல்லி-ஆக்ரா-மதுராபிருந்தாவன். நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய் 6800.

**10.5.97: இது 21 நாட்கள் கொண்டது** அலகாபாத் (அயோத்தியா) கயா-புத்தகயா-காசி-ஹரித்துவார்-ரிஷிகேஷம்-பத்ரிநாத்-கேதார்நாத்-நியூடெல்லி-ஆக்ரா-மதுராபிருந்தாவன். நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய் 4600.

**2.7.97: இது 31 நாட்கள் கொண்டது.** பூரி ஜெகன்னாத்-கோனாரக்-புவனேஸ்வர்-கயா-புத்தகயா-அலகாபாத்-காசி-ஹரித்துவார்-ரிஷிகேஷம்-பத்ரிநாத்-கேதார்நாத்-நியூடெல்லி-ஆக்ரா-மதுரா-சிம்லா-குலு-மணலி-வைஷ்ணவிதேவி-குருக்ஷேத்திரம்-ஜெய்ப்பூர்-நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய் 7200.

ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராமணர்களைக் கொண்டு காலை காப்பி-டிபன், மதியம் இரவு நல்ல உணவு பரிமாறுவதுடன் இங்கு குறிப்பிட்ட அனைத்து செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.

வடமாநில யாத்திரையில் 20 ஆண்டுகளுக்கும் மேலாக பெற்ற அனுபவத்துடன் மிகசிறப்பான முறையில் நடத்தி வருகின்றோம்.

**L.T.C.** வசதியில் வருபவர்களும் மற்றவர்களும் மிகவும் விரைவில் தெரியப்படுத்த வேண்டும்.

மேலும் விபரங்களுக்கு:



# ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்

நெ.4. வெங்கடாசல செட்டித் தெரு, (Near Kasturibai Hospital) திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. போன்: 8542144

# 16

**கா**ட்டில் மலரும் மல்லிகைக்கும் மணம் இருக்கும் என்பதை தேவகி ஏனோ மறந்து விட்டிருந்தாள். கிராமத்துப் பையன் என்பதால், சூட்சும புத்தி இருக்காது என்று தப்புக் கணக்கு போட்டிருந்தாள். கோண்டு, பட்டணம் வந்து, தேவகி அக்கா வீட்டுக்கு வந்த க்ஷணம் முத லாக, தேர்ந்த துப்பறிவாளன் போல, விஷயங் களின் வாசனைகளை அறிய முற்பட்டான். வீட்டில் இருக்கிற ஒவ்வொருவரும், தமக் கென்று ஒரு கூண்டு செய்து கொண்டு, அதற்குள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். தமக்கென்று தாமே செய்து கொண்ட கூண்டு.

கூண்டுக் கிளிகள். பஞ்சர கிளிகள். கூண்டு மட்டுமல்ல. எல்லோருக்கும் ஒரு முகமூடி வேறு இருந்தது. தபால்காரன் பை மாதிரி, குடுகுடுப்பைக்காரனின் வண்ணப் போர்வை மாதிரி, இவர்கள் முகமூடிகளில் இருந்து பிரிக்கப்பட முடியாதவர்களாக இருந்தார்கள்.

ஜனனியிடம் அவன் பேசவும் பழக வும் ஆசைப்பட்டான். கோண்டு, அவள் மாமன் என்பதனாலும், அவளைத் திருமணம் செய்து கொள்ளப் போகிற வன் என்று தேவகியே சொன்னதாலும். அதோடு, அவன் ஆண் என்பதனாலும். ஜனனியோ, ஜன்னலோடும் வெள்ளை அடித்த சுவரோடும் பேசினாளே அன்றி, அவன் முகம் பார்த்துப் பேசத் தயாராக இல்லை. அவனை ஒரு சக மனுஷனாகக் கூட அவள் ஏக்கத் தயாராக இல்லை என்பதை வெளிப்படையாகத் தெரியும்படி அவள் நடந்து கொண்டாள். கோண்டுவுக்குப் புரிந் தது. ஜனனி என்கிற பெண்



# நக்கங் நாணையும் மலரும்

ணுக்கான ஆண் தான் இல்லை என்பதை அவன் நன்றாகவே புரிந்து கொண்டிருந்தான்.

கோண்டுவுக்கு, இது அவமானம் தருவதாக இல்லை. ஏனெனில், அவனுக்கு அது ஏமாற்றம் தருவதாக இல்லை. தான் ஏமாறவில்லை என் பதை அவளுக்கு உணர்த்த வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான். அதற்கான சந்தர்ப் பத்தை அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந் தான். அதுவும் வாய்த்தது. மூன்றாவது தெரு வில் டாக்டர் சொர்ணகாளீஸ் வரர் வீட்டுக்கு, ஒரு சாமியார் எழுந்தருளி இருந்தார். டாக்டரின் மனைவி பங்கஜம், ஒரு சாமியார் பித்து. காவி உடுத்திக் கொண்டு அவள் முன் யார் வந்து நின்றாலும், அவர் களை சாட்சாத் பரமேஸ்வரனாகவே கருதிக் கொள்ளும் மனநிலையை அவள் அடைந் திருந்தாள். தவிரவும், பிரஸ்தாப சாமியார், இமயமலையில் ஐம்பது ஆண்டு காலம், தவம்



பண்ணினவராம். அன்ன ஆகாரம் இல்லாமல் காற்றையே பட்சித்துக் கொண்டு இருந்தவராம். அவர் கையால் தீர்த்தம் வாங்கிச் சாப்பிட்டால், தீராத வியாதிகள் தீருமாம். தேவகி மாமி, கோண்டுவிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டாள்.

"கதவைப் போட்டுக்கோ. அந்த மகானாவது, இந்த விடியாமூஞ்சிக்கு ஒரு விமோசனம் தரட்டும்" என்று புறப்பட்டாள் அவள்.

தேவகி, விடியாமூஞ்சி என்றது ஜனனியைத்தான் என்பது, அவனுக்கு மட்டுமல்ல. கூடத்து மேசை மேல், துவைத்து உலர்ந்த புடைவைகளுக்கு 'இஸ்திரி' போட்டுக் கொண்டிருந்த ஜனனிக்கும் புரிந்தது. அவள் புடைவையின் சுருக்கங்களைச் சரிபடுத்துவதில் கவனமாக இருந்தாள். இப்படிச் செய்வதன் மூலமாக, அவள் தேவகியை அலட்சியப்படுத்தினாள். படுத்திச் சந்தோஷம் கொண்டாள்.

தேவகி அக்கா அகன்ற பிறகு, கோண்டு ஜனனிக்கு அருகில், ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான். அவன் இருந்த இடத்தில் இருந்து, ஜனனி பக்கவாட்டில் தெரிந்தாள். மேசையை நோக்கிச் சற்றே சரிந்து, அவள் இஸ்திரி போட்டுக் கொண்டிருந்தாள். மந்தையில் இருந்து தனியே பிரிந்து வந்த கறுப்பாடு மாதிரி, அவள் கூந்தலில் இருந்து தனியாகப் பிரிந்து வந்த முடிக்கற்றை, முறுக்கிய தாம்புக் கயிறு மாதிரி, சுருண்டு சுருண்டு அவள் காதோரம், ஒரு வௌவாலைப் போலத் தொங்கிக் கொண்டிருந்தது. அனிச்சைச் செயலாக, இழுத்து விட்டுக் கொண்டாள், ஜனனி. இடுப்பில் எடுத்துச் சொருகிக் கொண்டிருந்த புடைவையை, வெளியே விட்டாள். பாதம் மறைந்து, ஓட்டிலிருந்து வெளிப்படும் ஆமைத் தலை மாதிரி, கட்டை விரல் மாத்திரம், அவன் காண இருந்தது. நகம், ரோஜா இதழ். விரல், உடைக்காத பச்சை வேர்க்கடலை.

"ஜனனி"

"என்ன மாமா?" என்று இஸ்திரிப் பெட்டியைப் பார்த்தபடிச் சொன்னாள் ஜனனி.

"ஒரு விஷயம் உன்னண்டை பேசணும்."

"ம்"

"அக்கா, உன்னை நான் கட்டிக்கிடணும்னு ஆசைப்படுது. என்னை இங்கே தருவிச்சிருக்கிறதுக்கு அதுதான் நோக்கம்."

"தெரியும். உங்களுக்கும் அப்படி எண்ணம் இருக்கில்லையா?"

"இல்லை. லவலேசமும் இல்லை."

**பிரபஞ்சன்**



**"போனால் போகட்டும் விடுங்க... 10/- ரூபாயை தொலைச்சதுக்காக இப்படிப் போட்டு அடிக்கிறீங்களே...?"**

**"ஆபீஸ்ல கஷ்டப்பட்டு சம்திங் வாங்கற எனக்குத்தாண்டி பணத்தோட அருமை புரியும்!"**

**- சீர்காழி வி. ரேவதி**

அவள், அவனைத் திரும்பிப் பார்த்தாள். அனேகமாக, முதல் முறையாக அவனை முழுமையாகப் பார்த்தாள்.

"மாமா... இதைக் கேட்க சந்தோஷமா இருக்கு. எனக்கும் ஆல்பர்ட்னு ஒருத்தருக்கும் ஏற்கெனவே சினேகம் இருக்கு."

"தெரியும்."

"எப்..படி?"

"ஆல்பர்ட்டைத் தெரியாது. இப்படித்தான் ஏதாச்சும் இருக்கும்னு ஊகிச்சேன். நீ அவரையே பண்ணிக்கோ. அதுதான் சரி. உன் அம்மா, ஏதாச்சும் புத்தி கெட்டத்தனமா சொல்லும். அதையெல்லாம் கேட்டு மனசு மாறிடாதே. உனக்கு எது சரின்னு படுதோ, அதைச் செய். சீக்கிரமா செய். சுபஸ்ய சீக்கிரம்னு சொல்லுவா. என்னாலே, ஏதாவது உதவ முடியும்னா, எனக்கு சந்தோஷமா இருக்கும்."

ஜனனியின் கண்கள் விரிந்தன.

"மாமா. நீங்க இப்படி இருப்பீங்கன்னு எனக்குத் தெரியாமே போச்சே..."

அவன், இஸ்திரிப் பெட்டியை நிறுத்தி விட்டு, அவன் முன், சுவரில் சாய்ந்து அமர்ந்து கொண்டாள். பின் இருந்த சடையை முன் கொண்டு வந்து, போட்டதை அவிழ்த்து, அவிழ்த்ததைப் பின்னிக் கொண்டிருந்தாள்.

"தின்னாத்தானே பண்டம் ருசி தெரியும். பேசிப் பழகினாத்தானே மனுஷா தராதரம் தெரியும்."

"அம்மா, உங்களைத்தான் மனசுக்குள்ளே மருமகன்னு நினைச்சுண்டிருக்கா."

"அதெல்லாம், தண்ணி மேலே எழுதின எழுத்து மாதிரி. சுலபமா அழிஞ்சிடும். உங்க அம்மாவுக்குத் தேவை, ஒரு மருமகன். அவன் கோண்டுவோ, அல்லது ஒரு பாண்டுவோதான். நீயும், அந்தக் கிறிஸ்துவப் பையனை பண்ணிண்டு, மாலையும் கழுத்துமா வந்து உன் அம்மா முன்னாலே நின்னியானா, வாடா மருமகனேம்பாள், உன் அம்மா. எனக்குத் தெரியாதா, என் அக்காவை."

ஜனனிக்குச் சிரிப்பு வந்தது. இப்போது, முந்தானை முனையை முறுக்கிக் கொண்டு இருந்தாள், அவள்.

"எனக்கு உங்களைப பற்றின கவலை விட்டது, மாமா..."

கோண்டு சிரித்தான், இப்போது. அவன் சொன்னான் :

"என்னைச் சினிமாவிலே வர்ற கிராமத்து முரட்டு மாமன்னு நினைச்சுட்டியா. இல்லை. நான் இங்க வந்த க்ஷணமே, எனக்குப் புரிஞ்சுட்டது. உன் மேல எனக்கு வெறுப்பு இல்லை. சொல்லப்போனா, உனக்கு இஷ்டம்னா எனக்கும் இஷ்டமாத்தான் இருக்கும். நான் இங்க வந்த பின்னாலே, என்னை நீ திரும்பியும் பார்க்கலை. அந்தக் காலண்டரை, தினத்துக்கு ஒரு தாளைக் கிழிக்கிறியே, அந்த அளவுக்கும் முக்கியத்துவம் எனக்கு நீ தரலை. அப்பவே, எனக்குப் புரிஞ்சு போச்சு. ஏதோ கோளாறுன்னு. இவ்வளவு படிச்ச, நாகரிகமான 'டவுன்' பொண்ணுக்கு, நான் எப்படிப் பொருந்துவேன்னு எனக்குத் தோணிப் போச்சு. என்னை என்னத்துக்கு உன் அம்மா, வேலை மெனக்கெட்டு, மணப்பாறை மாட்டையும், குள்ளஞ்சாவடி குட்டை மாட்டையும் ஒரு வண்டியிலே பூட்டுகிறா மாதிரி, உன்னை என் தலையிலே கட்டறான்னு சந்தேகம். நான் சுதாரிச்சுக்கிட்டேன்."

"உங்களுக்கு வருத்தம் இல்லையே, மாமா."

"உண்மையைச் சொல்லட்டுமா, ஜனனி."

"அதைத்தானே சொல்லணும்."

"உன்னைக் கட்டிக்கிற பிராப்தம் எனக்கு இல்லை. உன் மாதிரி ஒரு பொண்ணை யாருக்குத்தான் பிடிக்காது? நல்லா இரு. இருப்பே."

ஜனனி, கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

ஓய்வு பெற்ற நீதிபதி நரசிம்ம அய்யங்கார் பேத்தி யமுனா, பிள்ளையாண்டிருந்தாள். வயிறு, இந்த ஏழாம் மாசத்திலேயே கீழே சரிந்திருந்தது. யமுனா, புஷ்டியாகி இருந்தாள். கன்னச் சதை சிவந்து மினிர்ந்தது. அய்யங்கார் சகதர்மணி மங்கைத் தாயாரிடம் ஜானு மாமி, மிகவும் உறுதியோடு சொன்னாள்.

"ஆம்பிளைப் பிள்ளைதான். கவலையே படாதேங்கோ. உங்க பாரம்பரையிலே, தலைச்சன் பிள்ளைக் குழந்தைதானே மாமி. பாருங்கோ, யமுனா குட்டியை. உருளைக் கிழங்காலே செஞ்ச மாதிரின்னா இருக்கா... விட்டேன், விட்டேன்... என் கண்ணே பட்டுடப் போறது... சாயங்காலம் சுத்திப் போடுங்கோ... சுகமா பெத்துப் பிழைப்பா. நம்ம காலனி ஆஞ்சநேயருக்கு வடை மாலை சாத்திப்பிடுங்கோ... என்ன?"

"பேஷா... அதுக்கென்ன செஞ்சுட்டா போச்சு... நானும், நம்ம ஆஞ்சநேய ஸ்வாமிக்குப்

பண்ணணும்னு நினைச்சுண்டுதான் இருந்தேன். இந்தப் பிராமணனும், சொல்லிண்டுதான் இருந்தார். சுவாமிக்கு என்னமாவது பண்ணுடின்னு. செஞ்சுடுவோம். அதையும் நீங்களே, உங்க ஆகிவந்த கையாலே பண்ணி வைக்கணும். யமுனாவை, அவ அம்மா பின்னையாண்டிருக்கச்சே நீங்கன்னா வந்து காரியம் பண்ணினேள். பேத்திக்கும் பண்ணி வையுங்கோ, மாமி..."

இப்படித்தான் அதிர்ஷ்டம் அடித்தது, சுவாமிக்கு. ஜானு மாமி காலனிக்குள், வள்ளி, சந்தானலட்சுமி, முதலான பேர்களைத் தயார் செய்தாள். அன்று காலை, ராகுகாலம், எமகண்டம் கழிந்த நல்ல முகூர்த்தத்தில் முறுக்குப் பிழிய உட்கார்ந்தார்கள். தேங்காய்ச் சாதம், பருப்பு, பாசிப்பயிறு சுண்டல், நெய்ச் சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், புளியோதரை முதலான தளியல்கள் தயாராகத் தொடங்கின.

சந்தானலட்சுமி கேட்டாள்.

"ஜானு மாமி கையிலே விளக்கெண்ணெய்தான் தடவிண்டிருக்கா. பாருங்களேன்... அனு. டாக்சியிலேயே பிள்ளையைப் பெத்துண்டா. பிள்ளை எந்தக் கஷ்டமும் வைக்காமே, வழுக்கிண்டு வரது. இது ஆம்பிளைக் குழந்தைகள் சிசனா மாமி? இந்த யமுனாக் குட்டி என்னடான்னா, கையை அகலமா விரிச்சண்டிருக்கிற சோலைக் கொல்லை பொம்மை கணக்கா, இடுப்பை இரண்டு பக்கமும் விரிச்சண்டு இருக்கா... இதுவும் பிள்ளைதான் போல இருக்கு."

வெள்ளைத் துணியில், கொஞ்சமும் பிசிறு, பெரிசு சிறிசு இல்லாமல், அளவாக, ஏதோ செடியில் பூத்த பூக்கள் மாதிரி முறுக்கு வார்த்துக் கொண்டிருந்த ஜானு மாமி சொன்னாள்.

"பொறக்கட்டும். நல்லா பொறக்கட்டும். மண் மேலே, ஆம்பிளைகளா, மீசையை முறுக்கிண்டு அலையட்டும். பொட்டைக் குழந்தைகள் குறைஞ்சு அவஸ்தைபடட்டும். தாயில்லையே, சகோதரி இல்லையே, பொண்டாட்டி இல்லையேன்னு அவனவனும் அவஸ்தைபடட்டும். அப்போதான், பொம்பிளைகளோட அருமை தெரியும், இந்த அரவான்களுக்கு..."

"மாமி வாய் ஓயாமல் பேசிக்கிட்டு இருந்தாலும், கை என்னமா, அட்சரம், நூல் நுனி பிசகாமே இருக்கு பாத்தியா வள்ளி?"

"இருக்காதா பின்னே, அதான் கை வாகு. மாமி இட்லி பண்ணி நீங்க சாப்பிடணும்."

"அப்படியா, ஜானு மாமி?"

"அது ஒரு காலம். நாக்குக்கு அதெல்லாம் வேண்டி இருந்தது. கை வேலை செய்துச்சு. இப்ப நானே அந்த பாகத்தையெல்லாம் மறந்தே போயிட்டேன். என்ன இட்லி பண்றாளுக இந்தக் காலத்துக் குட்டிகள்? இட்லின்னா, கையை வச்சா, குஷன் மெத்தையாட்டம் உள்ளே வாங்க வேண்டாமோ? அப்புறம், இட்லின்னா சட்னி, சாம்பார்னு ஆயிடுத்து. அதும் அக்கப் போர். இட்லின்னா ஒரு பக்கம், வெள்ளை சைனா சில்க் மாதிரி இருக்கோணும். அடுத்த பக்கம், காதி துணி இருக்கோல்லியோ, முரட்டுக் காதி, சிம்பு சிம்பா, அறுவடை ஆன கதிர் அடிக்கட்டை மாதிரி இருக்கோணும். ஆவி பறக்கிற மாதிரி, நல்லா பசும் வாழை இலையிலே வைச்சு, ஒவ்வொரு இட்லி மேலேயும், அதும் வயித்துப் பக்கமா, நல்லா பசும் நெய்யை திக்கா விடணும். இட்லியோட சூட்டுல, கெட்டி நெய் கரையோணும். அதை ஒரு விள்ளல் தேங்காய் சட்னி, ஒரு விள்ளல் கார சட்னி, ஒரு விள்ளல் மிளகாய்ப் பொடின்னு சாப்பிடணும்... ஊறுகாயானா, வடுமாங்காய், பூண்டு உத்தமம். அதுன்னா இட்லி?"

சந்தானலட்சுமி கைவேலையை நிறுத்திக் கொண்டாள்.

"மாமி சொல்ற பக்குவத்தைக் கேட்டு, எனக்கு நாக்கிலே ஜலம் ஊர்றது. இப்படியெல்லாம் பண்ணிட்டு, இப்போ சும்மா இருக்கேளே, மாமி."

"சும்மா இருக்க முடியுமோடி, அசடே? சும்மா இருக்கிறது, ஒரு பெரிய வரம், சித்தின்னு பெரிய பெரிய மகான்கள் எல்லாம் புலம்பறா, தெரியுமா? சும்மா இருக்கிற சுகம், லபிச்சுட்டா, இந்த உலகத்துல அப்புறம் ஏது துன்பம்? தொந்தரை? வம்பு, வழக்கு எல்லாம்! ஒரு பெரிய ஞானியண்டை ஒருத்தன் போய்க் கேட்டானாம், சுவாமி, நீங்க இத்தனை பெரியவாளா ஆனதற்கு என்ன தவம் பண்ணினேள்னு. அதுக்கு அந்த ஞானி சொல்லிச்சாம். பெரிசா ஒண்ணும் பண்ணலைடா. நான் செஞ்சதெல்லாம், சாப்பிடுகிற போது சாப்பிட்டேன். நடக்கும் போது நடந்தேன். தூங்கும் போது தூங்கினேன். அவ்வளவுதான்னு சொல்லிச்சாம். அன்னைக்கு ஒருநாள் இந்தக்



**கர்நாடகத்திலுள்ள மூண்டர்கி என்ற ஊருக்கு விஜயம் செய்யும் பெரும்புள்ளிகளெல்லாம், பதவி இழந்து விடுவார்கள் என்ற ஒரு நம்பிக்கை உலவி வருகிறது. வீரேந்திர பாட்டீல், பங்காரப்பா, வீரப்பமொய்லி ஆகியோர் இதற்குச் சாட்சி.**

**தேவேகௌடா அண்மையில் கர்நாடக மாநிலத்திற்கு வந்தபோது விஜயம் செய்ய இருந்த ஊர்களில் மூண்டர்கியும் ஒன்று. அதிகாரிகள், மூண்டர்கியின் 'பெருமையை' அவருக்கு எடுத்துச் சொல்ல, பிரதமரும், மூண்டர்கிக்கு விஜயம் செய்வதை ரத்து செய்து விட்டார்!**

**— ஆதாரம் : இந்தியா டுடே**

**தகவல் : சேலம் சக்திக்கொடி**

## திண்டுக்கல்லுக்கே பூட்டு....

**அண்மையில் வானொலியில் நேயர் விருப்பம் பகுதியில் "உலகம் பிறந்தது எனக்காக" என்ற பாடல் ஒலிபரப்பாகியது. இதில் என்ன விசேஷம்? நேயர் விருப்பம் பகுதியில் 34 வருடங்கள் வேலை பார்த்து ஓய்வு பெற்ற ஜெயங்கொண்டான் விரும்பிக் கேட்ட பாடல் அது!**

**– 31.1.97-ல் வானொலியில் கேட்டவர் – மடிப்பாக்கம் வெங்கட்.**

கதையை, பிந்து எனக்குச் சொன்னா. சாப்பிடுகிற போது நாம் சாப்பிடறது இல்லை. நமக்கு இருக்கிற பிடுங்கல், பிரச்னைகளை அல்லவா நாம் சாப்பிட்டுக்கிட்டு இருக்கோம்? உணவைத் தின்னான்னா அது பலன் தரும். கண்டதைத் தின்னா, என்னத்தைச் சேர்க்கும்? சும்மா இருக்க முடியாமதானே, இந்த ஜனனிக் குட்டி, காதல் பண்ணப் போயி, அந்தக் கிறிஸ்துவப் பையனாண்டை யாசகம் கேட்டுண்டு இருக்கா? இன்னும் அந்தப் பையன் பச்சைக் கொடி காட்டலையாம். சிவப்புக் கொடியெல்லாம் காட்டியாயிடுத்து. சும்மா இருக்க முடியாமதான், வள்ளி, வேலைக்கு போகத் தொடங்கி இருக்கா. இப்போ ஏதோ சந்தோஷமா இருக்கிற மாதிரி தெரியறது. என்னடி, நான் சொல்றது சரிதானே?"

வள்ளி, சற்றே வெட்கத்துடன், 'சரிதான்' என்றாள்.

"கந்தா சாராலே சும்மா இருக்க முடிஞ்சதா? சதா, பட்டாளத்துச் சிப்பாய் மாதிரி விறைச்சுண்டு இருந்ததால்தானே, எல்லாமே கோணலாயிடுச்சு? மனுஷா பலம், பலவீனங்களைப் புரிஞ்சுண்டு, அனுசரணையா இருந்திருந்தார்னு வச்சுக்கோ, எவ்வளவு சந்தோஷமா இருந்திருக்கலாம்? எல்லாம் தலையிலே எழுத்து. மண் புழு மண்ணு மேலே நிமிண்டறா மாதிரி, நம் மூளை நிமிண்டிண்டே இருக்கு, சதா சர்வகாலமும். அதனால்தானே, நம்மால சும்மா இருக்க முடியல்லை? பாவம், இந்த சபேசன். மனுஷன், கரும்பு கையிலே இல்லாத பட்டணத்தார் மாதிரி. காவி கட்டாத சாமி அந்தப் பையன். அவன் செய்தது எல்லாம், ஒரே ஒரு தப்பு. தவளையும் எலியும் கல்யாணம் பண்ணிண்ட மாதிரி! எலி, வளைக்கு இழுக்கறது, தவளை, தண்ணிக்கு இழுக்கறது. என்னமா இருக்கும் சந்தோஷம், சொல்லு."

"சாமியார் என்னத்துக்குக் கல்யாணம் பண்ணிக்கிட்டானாம்? பொம்பளைன்னா, நாலு பட்டும், கௌரவமா நல்லது அல்லதுக்குப் போக வர நகையும் நட்டும் வேண்டித் தானே இருக்கு? அதுக்கு வழி பண்ணிக்காமே, புள்ளை பெத்துக்க மட்டுக்கும், பொண்டாட்டி வேண்டி இருந்துச்சோ அந்த சாமியாருக்கு?"

முறுக்கு மாதிரி, சிரிப்பு. அந்த இடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. நம்ம பெரியவா சொல்லலையோ, ஆசை அறுபது, மோகம் முப்பதுதான்னு. ஆக மொத்தம் தொண்ணூறுதான். தொண்ணூத்தி ஓராம் நாள், இருக்க வேண்டியது, அன்பு மட்டும் தான். அது இருந்தாக்கே, பிரச்னை இல்லை. வாழ்க்கையை வாழ்ந்து தீர்த்துடலாம். தொண்ணூறு நாள் வரைக்கும், பொட்டலங்களுக்கு உள்ளே என்ன வச்சிருக்கும்னு பார்க்கிற அவசரம். அப்புறம், 'சீ, இவ்வளவுதானான்னு' அருவை. அப்புறம்தான், நான் தவளை, நீ எலின்னு புரிய ஆரம்பிக்கிறது. என்ன பண்ண? தாழ்ப்பாள் போட்டாச்சு. விதியின் கையின்னா, அந்தத் தாழ்ப்பாளைப் போட்டது? அது வந்துதானே திறந்து விடணும்?"

பட்சண வேலைகளை முடித்துக் கொண்டு திரும்பினார்கள், மாமியும், வள்ளியும். கோவிலுக்கு அருகில் இருந்த வேம்புக்கு அடியில் போட்டிருந்த சிமெண்ட் திண்ணையில் அமர்ந்தார்கள் அவர்கள். வேம்பின், மஞ்சள் பொற் பழங்கள் தரையில் சிந்திக் கிடந்தன. மாலைச் சூரியன், வேம்பின் சிறைகளுக்கு ஊடாக, முகம் காட்டி முகம் மறைத்து, தன் விளையாட்டில் தானே லயித்துக் கிடந்தது.

ஜானு மாமி, வள்ளியின் முகத்தைப் பார்த்துக் கேட்டாள்.

"வள்ளி... கொஞ்ச நாளா, ஏன் என்னமோ மாதிரி இருக்கே? முகம், சொல்றது. எப்பவும், சுத்தமா துடைச்ச கண்ணாடி தம்ளராட்டம் இருப்பே. இப்போ, பெருக்காத தரை மாதிரி இருக்கு, உன் மூஞ்சி. என்னடி சமாசாரம்?"

"எனக்குள்ளே ஒரு அவஸ்தை, மாமி."

"என்ன அவஸ்தை. என்னண்டை சொல்லலாம்னா, சொல்லு."

"மனசு நிலைப்படலை. அலையுது. பிடிச்சுக் கட்ட முடியல்லை."

"எந்தப் பக்கமா அலையுது?"

"இந்தப் பக்கம், என் முதலாளி சண்முகம். அந்தப் பக்கம், குடும்பம், கணவன்..."

"சண்முகம், உன் மேல ஆசைப்படறானா?"

"இல்லை மாமி. அவர் படலை. அதுதான் பிரச்னை. கேட்டார்னு, வச்சுக்குங்கோ. வேணாம்னு சொல்லிடலாம். சொல்லிடுவேன், சுலபமா! எனக்குத்தான் அவன் மேலே, கவனம் விழுந்துடுத்து..."

மாமி, வருத்தமுடன் சொன்னாள்.

"உன்னாலேயும் சும்மா இருக்க முடியலை யோடி?"

வேப்பம்பழங்கள் இறைந்து கிடந்தன, தரையில்!

*(தொடரும்)*

பாக். ராணுவம்

அறுதிப் பெரும்பான்மை



1997 பிப்ரவரி 16
தாது மாசி 5
மலர் : 55
இதழ் : 29

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## நேசக்கரம் நீட்டும் நவாஸ் ஷெரீஃப்

மிகப் பெரிய அளவில் பெரும்பான்மை பெற்று வெற்றிக் களிப்பில் இருந்தாலும் நவாஸ் ஷெரீஃப் ஒரு பேருண்மையை மறந்துவிட முடியாது : பாகிஸ்தானில் நடந்த தேர்தலில் பெரும்பாலான மக்கள் வாக்களிக்கவேயில்லை!

தேர்தலைக் கண்காணித்த சர்வதேசப் பார்வையாளர்கள், இதைச் சுட்டிக்காட்டி, அடுத்தடுத்து தலைவர்களிடம் ஏற்பட்ட ஏமாற்றம் காரணமாக பாகிஸ்தான் மக்கள் ஜனநாயகத்திலேயே நம்பிக்கையிழந்து, சோர்ந்து போயிருப்பதை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

நவாஸ் ஷெரீஃப் இதனை மனத்தில் கொண்டே நல்லாட்சிக்கான திட்டங்களைத் தீட்ட வேண்டும். அதற்கான ஒரு நல்வாய்ப்பை அவர் பெற்றுள்ள பெரும்பான்மை அளிக்கிறது.

இந்தியாவைப் போலவே அரை நூற்றாண்டாய் சுதந்திர நாடாக இருந்து வரும் பாகிஸ்தான், நம்மைக் காட்டிலும் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது.

பொருளாதார மேம்பாடும் உள்நாட்டு அமைதியும் அங்கு என்றென்றைக்கும் கேள்விக் குறியாகவே இருந்து வருகின்றன.

ஷெரீஃபின் வெற்றியைக் கூட அவரது ஆதரவாளர்கள், துப்பாக்கியால் ஆகாயத்தை நோக்கிச் சுட்டுத்தான் கொண்டாடியிருக்கிறார்கள்! இந்தத் துப்பாக்கி கலாசாரத்தை மாற்றி, மக்களுக்கு மீண்டும் ஜனநாயகப் பற்று ஏற்படச் செய்தாக வேண்டும்.

பல்வேறு பிரச்னைகளிலிருந்து மக்களின் கவனத்தைத் திருப்புவதற்கு பாகிஸ்தான் தலைவர்கள் கையாண்ட யுக்திதான் காஷ்மீரப் பிரச்னை. பகை உணர்ச்சிகளைத் தூண்டப் போக, அது இன்று




பூதாகார உருவம் பெற்றுள்ளதுடன் சம்பந்தப்பட்ட இரு நாடுகளுக்கும் ராணுவம், பாதுகாப்பு, ஒற்றாடல் எனப் பல பிரிவுகளில் பல்லாயிரம் கோடி ரூபாய் விரயத்தையும் ஏற்படுத்தியிருக்கிறது.

பேச்சு வார்த்தை மூலம் அமைதித் தீர்வு பெற்றுவிட்டால், காஷ்மீர் பிரச்னையிலிருந்து மக்களின் கவனம் திரும்பிவிடும் - உள்நாட்டுப் பிரச்னைகளுக்கு அவர்கள் முக்கியத்துவம் தர ஆரம்பித்து விடுவார்கள் என்கிற நோக்கில், அடுத்தடுத்த பாகிஸ்தான் அரசுகள், காஷ்மீர் பிரச்னையை அணைப்பதற்கு பதில் விசிறி விட்டிருக்கின்றன.

இந்தத் தேர்தலில் உற்சாகமாய் வாக்களிக்காமல் அதை ஏறத்தாழ புறக்கணித்ததன் மூலம், இனியும் 'இந்த காஷ்மீர் நாடகத்தைப் பார்த்து ஏமாற மாட்டோம்' என்பதை பாகிஸ்தான் மக்கள் உணர்த்தியிருக்கிறார்கள். நல்லாட்சிக்கும் முன்னேற்றத்துக்கும் அவர்கள் ஏங்குவது மிகத் தெளிவு.

இதை உணர்ந்துதானோ என்னவோ, வெற்றி பெற்ற கையோடு, 'காஷ்மீர் குறித்து இந்தியாவுடன் பேச்சு வார்த்தைக்குத் தயார்' என்றிருக்கிறார் ஷெரீஃப். 'அண்டை நாடுகள் நட்புறவுடன் திகழ அரசியல்ரீதியான பேச்சு வார்த்தை மிக அவசியம்' என்று பத்திரிகையாளர்களிடம் கூறியுள்ளார்.

இந்த வாய்ப்பை இந்திய அரசு இரு கரம் நீட்டி ஏற்க வேண்டும்.

"பாகிஸ்தான் ஆக்கிரமிப்பிலுள்ள காஷ்மீர்ப் பகுதியை விட்டுக் கொடுத்து, பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வும் அமைதியும் பெறலாம்" என்று இந்தத் தருணத்தில் பேசியுள்ளார் ஃபாரூக் அப்துல்லா. காஷ்மீர் முதல்வரின் இந்த யோசனையையும் இந்திய அரசு பரிசீலிக்கலாம்.

காஷ்மீர் பிரச்னை மட்டும் தீர்க்கப்படுமானால் இரு நாடுகளுமே பொருளாதார ரீதியில் நஷ்டமடைவது கணிசமாகக் குறையும். வளர்ச்சிப் பணிகளின்பால் வரிப்பணத்தையும் கவனத்தையும் செலுத்தி, முன்னேற்றம் காணும் வழியைப் பார்க்கலாம்.

## வாக்குறுதியைப் பறக்கவிட்ட ராமதாஸ்!

நடந்து முடிந்த பா.ம.க. கூட்டத்தை, மத்தியிலோ மாநில அளவிலோ எந்தத் தலைவரும் கொஞ்சம்




கூடக் கண்டிக்கவில்லை என்பது கவலை தருகிறது.

ராமதாஸ் தமக்களித்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை என வருத்தம் தெரிவித்ததோடு நிறுத்திக் கொண்டிருக்கிறார் முதல்வர்.

மக்கள் உணர்வுரீதியாக உசுப்பி விடப்படும்போது, அறிவுபூர்வமான சிந்தனைக்கு இடமில்லாமல் போய்விடுகிறது. நடந்து முடிந்த பா.ம.க. ஊர்வலமும் கூட்டமும் இதையே உணர்த்துகின்றன.

இந்த அபாயகரமான உணர்ச்சிகளை இப்படியே வளர அனுமதிப்பது ஆபத்து. 'கைது செய் பார்க்கலாம்!' என்று சவால் விடுகிற தலைவர்களை தொட்டால் எரிமலை வெடிக்கும் என்று முதல்வர் கருதுவது புரிகிறது. ஆனால், பிரச்னையை எதிர்கொள்ள முதல்வர் தயங்கி தாமதிப்பதாலேயே பிரச்னை மறைந்து போய்விடாது.

பா.ம.க.வின் தேச விரோதப் பேச்சுகளை முறியடிக்க காவல் துறையை ஏவுவது ராஜதந்திரமல்ல. அது பா.ம.கவுக்கே ஆதாயமாக முடியும்! எதிர்ப்பிரசாரம் என்னும் ஆயுதத்தைத்தான் கருணாநிதி கையாள வேண்டும்.

ஒரு மினி காமராஜ் திட்டத்தை அமுல்படுத்தி, கட்சியின் பிரசாரப் பணிக்கென்று தகுந்த தலைவர்களை நியமித்து, ஈழத் தமிழர் பிரச்னையில் தமிழக அரசின் நிலையை அவர்கள் மூலம் எடுத்துரைக்க வேண்டும். பா.ம.கவின் பிரசாரத்தை முறியடிக்கும் வகையில் எதிர்ப்பிரசாரம் அமைய வேண்டும்.

ஒரு காலத்தில் விடுதலைப் புலிகளை ஆதரித்தாலும் தி.மு.க.வின் நிலை இன்று மாறிவிட்டது என்பதை காரண காரியத்துடன் பறைசாற்ற வேண்டும். 'ஈழத் தமிழர்பால் அனுதாபம் இருக்கிறது; ஆனால் பிரிவினைக்கும் வன்முறைக்கும் நாங்கள் ஆதரவளிக்க மாட்டோம்' என்று அடித்துச் சொல்ல வேண்டும். பேச்சு வார்த்தை, அமைதிப் போராட்டம் மூலம் ஈழத் தமிழர் நலன் காக்கப்பட முடியும் என்ற நம்பிக்கையை வளர்க்க வேண்டும். அதற்கு முட்டுக்கட்டையாக இருப்பவர்கள் யார் என்று இனம்காட்ட வேண்டும்.

அரசியல் ஆதாயங்களுக்காகக் கொள்கைகளை மாற்றிக் கொள்ளும்போது அதை 'காலத்தின் கட்டாயம்' என மக்கள் முன் ஒப்புக் கொள்ள முடிகிறதல்லவா...?

தேச நலனையும் தமிழகத்தின் நீண்ட கால நலனையும் கருதி ஈழப் பிரச்னையில் தமது நிலையை மாற்றிக் கொண்டுள்ளதையும் அதே துணிவுடன் மக்கள் முன் ஒப்புக் கொள்ள முதல்வர் முன்வர வேண்டும்.

நீலநிற ஜீன்சும், வட்டக் கழுத்து பனியனுமாக மோட்டார் சைக்கிளில் பறக்கும் ஓர் இளைஞரை வெள்ளை ஜிப்பாவும், பட்டுக்கரை வேஷ்டியும், தோளில் மடித்துப் போட்ட மேல் துண்டுமாக டிபிகல் பாகவதர் 'கெட்அப்'பில் மேடையில் பார்க்கும் எவருக்கும் 'அவர்தான் இவரா?' என்ற கேள்வி எழும்.

சஞ்சய் சுப்பிரமணியன் என்ற இந்த இளம் (சார்ட்டர்ட் அக்கவுன்டென்ட்) பாடகர் சமீப காலமாக ரசிகர்களை ஒரு வசியம் பண்ணி வைத்திருக்கிறாரே, எப்படி?.. புதிய இளம் ரசிகர்களை உருவாக்கியது எப்படி?... – இந்தக் கேள்விகளைத் தனியே எழுப்பவில்லை. பேட்டியின் போது வெளிப்பட்ட அவரது ஆளுமையே பதில் சொன்னது. இடைஇடையே குறுக்கிடும் ஃபோன் கால்களுக்கு, கார்ட்லெஸில் பதில் சொல்லியபடியே குறுக்கும் நெடுக்குமாக நடக்கும் சஞ்சய்யிடம் நாம் எழுப்பிய முதல் கேள்வி:



"சங்கீத வித்துவானாக இருப்பதில் உள்ள நல்லதும் கெட்டதும் என்னென்ன?"

"உண்மையாகச் சொல்லுவதானால் எனக்கு எது பிடித்ததோ அதைச் செய்ய முடிகிறது. 'மினிமம் காம்ப்ரமைஸ்' இதில்தான் இருக்கு. அங்கீகாரம், பாராட்டு எல்லாமே இருக்கு. நான் எதை விரும்பிச் செய்யறேனோ, அதைச் செய்ய எனக்குச் சன்மானமும் கிடைப்பதைவிடப் பெரிய விஷயம் என்ன இருக்க முடியும்?

"மகாமோசமானது, கல்யாணக் கச்சேரி செய்யறது. ஒரே ஒரு அனுபவம்தான் அது. ஆனா இனிமே எந்தக் கல்யாணக் கச்சேரியிலயுமே பாடக்

# "கல்யாணக் கச்சேரி மகா மோசம்!"

கூடாதுன்னு தீர்மானம் பண்ண வச்சது. கரண்டி எடுக்கற சத்தம், சாமான் இழுக்கற சத்தம், அரட்டைச் சத்தம், இதுக்கெல்லாம் நடுவுல எதுக்குப் பாடணும்?... கோயில் கச்சேரி அது மாதிரி இல்லே. அதோட 'ரீச்' சொல்ல முடியாதது; ரொம்பப் பரந்தது. சமூகத்தோட பல குறுக்குவெட்டுப் பிரதிநிதிகளும் அதில் இருப்பார்கள். கோயில் 'விழா'க் கச்சேரியும், கல்யாணக் கச்சேரி மாதிரிதான். அதனால அங்கயும் பாடறதில்லே."

"உங்களுடையது ஜி.என்.பி. பாணி என்கிறார்களே, எப்படி?"

"என் பாணி அவர் பாணி அல்லதான். ஆனால் எங்க குடும்பமே அவர் விசிறியாய் இருந்தது உண்மை. அவருடைய கச்சேரிகள் கேட்டுக் கேட்டு, அவர் மாதிரி பாட

முயலுவேன். அவ்வளவுதான். அப்பாவோட பெரியம்மா ருக்மிணி ராஜகோபாலன் ஜி.என்.பி.ரசிகை. அடுத்த என் குரு கல்கத்தா கிருஷ்ணமூர்த்தியும் ஜி.என்.பி.யிடம் நெருங்கிப் பழகியவர். நிறைய புதுப் புது சாகித்தியங்கள் ஜி.என்.பிக்குக் கொடுத்திருக்கிறார். 'இதோ ஒரு புதிய கீர்த்தனை கிடைச்சிருக்கு சார். பாருங்கோ!' என்பார் ஜி.என்.பி.யிடம். அதனால் 'அவரோட பாதிப்பு என்கிட்ட கொஞ்சம் இருக்கலாம்."

"நிறைய இளம் பெண்கள் பாட வந்திருப்பதால் குரல் இனிமைக்கு முக்கியத்துவம் இருக்கிற மாதிரி தோன்றுகிறது. ஆனால் உங்கள் குரல் ஆண்மை வீரியமும், கரகரப்பும் சேர்ந்த குரல். இது ஒரு பாதகமான விஷயம் என்றால், இதை எப்படிச் சமாளித்தீர்கள்?"



"ஆரம்பத்துல என்குரல் ரொம்பக் கரகரப்பா இருந்திருக்கலாம். இப்போ கொஞ்சம் மென்மை சேர்ந்திருக்கு. குரல்ல ரைட் பாலன்ஸ் வந்துட்டா அது இனிமைதான். நானே ஒரு கட்டத்துல, இந்த சாரீரத்தை வைத்துக் கொண்டு எப்படிப் பாடுவது என்று ஒரு தாழ்வு மனப்பான்மையோடு வெறுத்துக் கொண்டது உண்டு. அப்புறம் கல்கத்தாவில், சங்கீத் ரிசர்ச் அகடமியில அமெரிக்கன் வாய்ஸ் கல்ச்சர் எக்ஸ்பெர்ட் பீட்டர் கலாட்டினும், அனந்த் வைத்தியநாதனும் சில டிப்ஸ் கொடுத்தார்கள். சில பயிற்சிகளும் எடுத்துக் கொண்டேன். நம்பிக்கையைத் தூண்டினார்கள். அதற்குப் பலனும் கிடைத்தது. ஆனால், இனிமையாகப் பாடணும் என்றெல்லாம் மனத்தில் தீர்மானம் பண்ணிக் கொண்டு பாடுவதில்லை. செம்மங்குடி, ஜி.என்.பி., மதுரை மணி, ஆலத்தூர் பிரதர்ஸ் எல்லாருமே அவர்களுக்கு இயல்பாக எப்படி வந்ததோ, அப்படித்தான் பாடினார்கள். நானும் எனக்கு இயல்பாக எப்படிப் பாட வருகிறதோ, அப்படித்தான் பாடுகிறேன். இந்தக் குரல்ல இனிமை இருக்கிறதாக ரசிகர்கள் நினைக்கலாம். இன்னிக்கு நமக்குக் கூட்டம் வரலாம். நாளைக்குக் கூட்டம் வருமா? – தெரியாது. ஆனால் ஒண்ணு! நேர்மையான முயற்சி வீண் போகாது என்று மட்டும் உறுதியா நம்பறேன்."

"கச்சேரிக்கு முன்னால் என்னென்ன பாடணும்னு ப்ளான் செய்து கொள்ளுவதுண்டோ?"

"இடையவே கிடையாது. அது மென்ட்டல் ப்ளாக் உண்டாக்கிடும். வர்ணம் பாடிய உடனேயே, அடுத்தது, அடுத்ததுன்னு மனசுக்குள்ளே ஓடிக் கொண்டே இருக்கும். நிறையக் கச்சேரிகளுக்குப் போய்க் கேட்கிறதனால, கச்சேரியை எப்படி அமைச்சுக்கணும்னு புரிஞ்சு போச்சு. சமீபத்துல

## சுட்ட பழம்:

ஜெயலலிதாவும் நானும் அணிந்திருந்த நகைகள் உண்மையான நகைகள் அல்ல. சினிமா ஷூட்டிங்கின்போது அணியும் போலி நகைகள். எங்களுக்கு அந்த நகைகளை அணிந்து போட்டோ எடுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. அதனால், இரண்டு பேரும் சேர்ந்து நகைகளை அணிந்து போட்டோ எடுத்துக் கொண்டோம்.

— விசாரணையின்போது சசிகலா

## கனிந்த சிந்தனை:

'ப்பூ! இப்படி போட்டோ எடுத்துக் கொள்ளும் சிறுபிள்ளைத்தனமான ஆசை ஒரு மாநில முதல்வருக்கு வரலாமா...?' என்று சிலர் நொடிக்கிறார்கள். ஜெயலலிதாவின் குழந்தை உள்ளம் அவர்களுக்குத் தெரிந்தால்தானே.. நேற்று உடன் பிறவா சகோதரி என்று குலாவியவருடன் இன்று டூ; மீண்டும் நாளை பழம் என்றால்... இதெல்லாம் கள்ளமில்லா பிள்ளை உள்ளத்தின் வெளிப்பாடின்றி வேறென்ன! அதே குழந்தை உள்ளம்தான் அந்த போட்டோவுக்கும் ஆசைப்பட்டிருக்கும்!

'குழந்தையாவது கத்திரிக்காயாவது! சசிகலா இப்படி கவரிங் என்று சத்தியம் செய்கிறார். ஜெயலலிதாவோ 'நான் அன்றாடங்காய்ச்சியாக அரசியலுக்கு வரவில்லை; பரம்பரை சொத்துக்காரியாக்கும்' என்று அறிக்கை விடுகிறாரே, முரண்பாடாகியிருக்கிறதே!' என புது சந்தேகம் எழுப்பும் பேர்வழிகளுக்கு பதில் இதோ:

பரம்பரைச் சொத்துக்காரர்கள் கவரிங் நகை வாங்கியணியக் கூடாது என்று சட்டமா போட்டிருக்கிறது?

ஊர் உலகமெல்லாம் வியக்க வளர்ப்பு மகனுக்குக் கல்யாணம் பண்ணினாலும் தங்கள் அளவில் கவரிங் அணிந்து எளிமையாய்க் காட்சி தந்ததைப் பாராட்ட மனம் வருகிறதா பாருங்கள்!

'காது குத்திக் கவரிங் கம்மல் மாட்டிவிடப் பார்க்கறீங்களே- பவுடர் பூசிக்கறாப்புல நகையைப் பூசிக்கறதுக்குப் பேரு எளிமையா?' எனக் கோபப்படும் பேர்வழிகள் கவனிக்க வேண்டும்...

கவரிங் நகை உற்பத்தியாளர்கள் பிழைக்க வேண்டும் என்கிற அவர்களின் உயர் நோக்கம் உங்களுக்குப் புரியாவிட்டால் அதற்கு யார் பொறுப்பாக முடியும்!

-சில்மிஷா

டி.வி. சங்கரநாராயணன் கச்சேரிக்குப் போயிருந்தேன். நல்ல கூட்டம். ரெண்டாவது கிர்த்தனை பாடறப்போ, கூட்டம் கொஞ்சம் சனைக்கிற மாதிரி, ரெஸ்ட்லெஸ்ஸா இருந்ததைத் தெரிஞ்சுண்டு, அடுத்ததா 'தாயே யசோதா' எடுத்தார். அவ்வளவுதான்! அப்புறம் யாரும் இடத்தை விட்டு நகரலை. இந்த மாதிரி வித்தை எல்லாம் எப்போதும் கை கொடுக்கும்."

இலவசக் கச்சேரிகளுக்கு சஞ்சய் ஆதரவாளர் அல்ல.

"எல்லாத்துக்கும் ஒரு விலை இருக்கு. இங்கேதான் இப்படி. மேலை நாடுகள்ல ஆர்ட்டிஸ்ட்டுக்கு ஒரு அந்தஸ்து இருக்கு. எல்லாருமே டிக்கட் வாங்கிட்டுத்தான் வராங்க இல்லையா? இங்கே, 'சஞ்சய், கச்சேரிக்கு வரணும். பட், டிக்கட் போட்டிருக்காங்களே?' என்று போனில் கேட்கிறார்கள். இந்த நிலைமை மாறும்னு நினைக்கறேன்!" என்கிறார்.

"புதுப் பாடல்கள் கற்றுக் கொள்ள, சாதகம் செய்ய நேரம் இருக்கிறதா?"

"பத்திலிருந்து ஐந்து வரைதானே ஆபீஸ்? மத்த நேரம் பூரா என்னோடதுதானே! வெளியூர்க் கச்சேரிகள்னா வீக்-என்ட்லதான் ஒத்துக்கறேன். அதனால ஆபீஸ் ஒர்க் பாதிக்கப்படறதில்லே. சங்கீதத்துக்கும் நிறைய நேரம் இருக்கு."

"உங்களைப் போன்ற இளம் கலைஞர்கள், கூட்டம் நிறைய வருகிறது என்பதற்காகவே மத்தியானக் கச்சேரிகளை சீஸனில் விரும்பிப் பாடியதாகச் சொல்லப்படுவது எவ்வளவு தூரம் உண்மை?"

"அதில் உண்மையே கிடையாது. மாலைக் கச்சேரி கொடுத்தால் அப்போதும் பாடத் தயார். கடந்த டிசம்பரில் மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ், நாரத கானசபா, மியூசிக் அகடமி இந்த மூணு இடங்கள் தவிர, மீதி அத்தனை சபாக்களிலேயும் நான் சாயங்காலக் கச்சேரிதான் பண்ணினேன். இந்த விவகாரங்கள்ள எல்லாம் நான் மாட்டிக்கிறதே இல்லே. ஆரம்பத்திலிருந்தே அப்படித்தான். சபாக்காரர்கள் முடிவுல நான் குறுக்கிடறதில்லே. நான், விஜய், ஜெயஸ்ரீ, கிருஷ்ணா, சௌம்யா எல்லாரும் இன்ஃபார்மலா சந்திச்சுப் பேசறது உண்டு. அப்பக்கூட இந்த மாதிரி விஷயங்கள் பத்திப் பேசறது கிடையாது."

எந்த சர்ச்சையிலும் சிக்கக் கூடாது என்பதில் சஞ்சய்க்கு அக்கறை இருக்கிறது. சமீபத்தில் கோவையில் பாரதிய வித்யா பவன் ஏற்பாடு செய்திருந்த இசை விழாவில் பாடுகிற போது, ராகம்-தானம்-பல்லவியில், 'சிறந்த எங்களது நாட்டைக் குறிஞ்சி என்பார்' என்ற

பல்லவி பாடினார். "கச்சேரி முடிந்தவுடன் ஒரு ரசிகர், பல்லவியில் ரத்த தானத்தை 'ஹைலைட்' பண்ணிப் பாடியிருந்தால் 'மெஸேஜ்' ஒன்று ரசிகர்கள் மனத்தில் பதிவாகி இருக்குமே என்று கேட்டார். "அவர் கேட்டதில் தப்பு இல்லை. ஆனால் ஒரு விஷயம் சொல்வதற்காக ஒரு பாரம்பரியத்தை ஒதுக்கி வைத்து விட்டுப் பாடுவது எனக்கு உசிதமாகப் படவில்லை என்று அவரிடம் சமாதானம் செய்தேன். அப்படி பாரம்பரியம் மீறவும் ஒரு நிலையை அடையணும்; ஒரு தைரியம் வேணும்."

**பா**பநாசம் சிவனின் தமிழ்க் கீர்த்தனைகளில் சஞ்சய்க்கு ஈடுபாடு அதிகம். கவிதை அழகைக் காட்டிலும், அந்த வரிகளில் அவரது சங்கீத ஞானமே வெளிப்படுவதாகச் சொல்லுகிறார். "எத்தனை விதமான கீர்த்தனைகள்!" என்று பிரமிக்கிறார்.

ஆனால் கர்நாடக இசையே பக்திபூர்வமானது என்று ஒரேயடியாக முத்திரை குத்தி விட சஞ்சய் தயாரில்லை. "இன்று மதம் என்பது பாமரன் முதல் அரசியல்வாதி வரை தங்கள் சௌகரியத்துக்காக உபயோகிக்கும் சொல். இசை ஒரு தொழில்-கலைப் பூர்வமான தொழில். பாடகன் என்பவன் ஒரு படைப்பாளி" என்கிறார் சஞ்சய் அழுத்தமாக.

**ஏ**ழு வருடங்கள் வயலின் கற்றுக் கொண்டு (குரு: எல். சுப்பிரமணியனின் தகப்பனார் லட்சுமி நாராயணன்), பிறகு ஒரு கால் பந்தாட்டத்தின்போது ஏற்பட்ட இடது கை முறிவுக்கு அப்புறம் வாய்ப்பாட்டில் கவனம் செலுத்தத் தொடங்கியவர் சஞ்சய்.

கிரிக்கெட்டில் அசாத்திய ஆர்வம். எப்படியாவது தமிழ்நாட்டுக்கு ஃபர்ஸ்ட் டிவிஷன் அல்லது ரஞ்சி டிராஃபி ஆடணும் என்று விரும்பினாராம். ஆனால் 'கஸின்' அரவிந்த் கிரிக்கெட்டுக்குப் போக, இவர் சங்கீதத்துக்கு வந்து விட்டார். ஃபர்ஸ்ட் டிவிஷன் லீக் ஆடும் அரவிந்துக்குப் பாட்டில் அசாத்திய மோகம்!

சஞ்சய் சுப்பிரமணியன் கமல் ரசிகர். "நகைச்சுவையில் அவர் பிரமாதமாக எடுபடுகிறார். அது அவருக்கு இயல்பாக வருகிறது என்பதுடன் நகைச்சுவைப் படங்களில் தனி முனைப்புடன் செய்கிறார். சதி லீலாவதி, மைக்கேல் மதனகாமராஜன் என்று ஐந்தாறு படங்களில் பிரமாதமாகச் செய்திருக்கிறார். ஏன், ரஜினிகூட 'தம்பிக்கு எந்த ஊரு'ல் காமெடி பிரமாதமாகச் செய்திருக்கிறார். ஈவன் அமிதாப்..." அடுக்கிக் கொண்டே போகிறார்.

- சாருகேசி

படங்கள் : ஸ்ரீஹரி

# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்



## வாரம் ஒரு சவரன் போட்டி – 6

**எ**ப்பொழுதாவது, ரொம்ப வெறுத்துப் போய், விரக்தி படைந்து, சோர்ந்து உட்கார்ந்திருப்பீர்களே! அச்சமயம் யாராவது உற்சாகப்படுத்தும் விதமாக, உங்கள் சோர்வை விரட்டியடிக்கும்படிப் பேசி, உங்களைப் புத்துணர்ச்சி கொள்ளச் செய்திருக்கலாம்! நீங்கள் சோர்வடைந்த தருணம்- சிலிர்த்து எழச்செய்த அந்த உற்சாகப் பேச்சு இவற்றைக் கூப்பனில் எழுதி அனுப்புங்கள். சிறந்தவை பிரசுரமாகும். மிகச் சிறந்த ஓர் அனுபவத்துக்கு ஒரு சவரன் பரிசு. கடைசி தேதி 24.2.97. ஆசிரியர் தீர்ப்பே இறுதி. (உறையின் மேல் மறக்காமல் 'சவரன் போட்டி-6' எனக் குறிப்பிடவும்.)

சவரன் போட்டி - 6
சோர்வை விரட்டிய சொற்கள் :

பெயர்:..........................................

முகவரி:..........................................

..........................................

..........................................

## வட்டமேஜை

### ரூ. 20/- பரிசுக்கடிதம்

விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசுக் குப் பெரும்பங்கு உண்டு என்பது உண்மை (நராக பதில்). வேறு சில காரணங்களும் உள் ளன. பொதுத்தேர்தல் சமயங்களில் ஆளுங் கட்சியாக உள்ளவர்களுக்குக் கோடிக் கணக்கில் தொழில் அதிபர்களும், வியா பாரிகளும் அழுதுவிட்டு, மக்கள் தலையில் அச்சுமையைக் கூட்டுகிறார்கள். எனவே இந்த ஏற்றம் எதிர்பார்க்கப்பட்டதே. மேலும் ராவ் காங்கிரஸ், தேர்தலை மனதில் வைத்து சலுகை பட்ஜெட் தந்து, பாரத்தை இன்றைய அரசின் மீது சுமத்தி விட்டது. எல்லாவற் றிற்கும் மேல், நடுத்தர மக்கள் சிக்கனமின்றி, டீ.வி.யில் காண்பிக்கப்படும் விலை உயர்ந்த வீட்டு உபயோகப் பொருட்களைப் பெற ஆசைப்படுகிறார்கள். அத்யாவசிய செலவு மட்டும் செய்தால் விலைவாசி என்ன செய் யும்?

கோவை, டி. பத்மா.

அரசியல் இயக்கமில்லாத ஓர் அமைப் பினர் மூலம் மாற்றம் காண முயலும் கைர் நாரின் பணி, இந்தியாவின் ஏதோ ஓர் மூலை யில் இருந்து மின்னலடிப்பது போலுள்ளது. தொடர்ந்தால் வெளிச்சம் கிட்டும் என்பதில் சந்தேகமில்லை.

இராஜபாளையம், என்.எஸ். பத்மா.

கைர்நார் பேட்டி அசத்தலாக இருந்தது. "பள்ளியில் பயிலாத பாடம்" என்பதற்கு சவரன் கொடுப்பதாகச் சொன்னீர்களே, அதை இவருக்குக் கொடுங்கள்!

பு.புளியம்பட்டி, அ. கிருஷ்ணகுமார்.

காந்தியக் கொள்கைகள் நலிந்து வரும் இந்நாளில் கோபாலசாமி போன்ற ஒரு தூய காந்தியவாதியின் இழப்பு உண்மையிலே தமிழகத்திற்குப் பேரிழப்புதான்!

சென்னை-1, கே.ஆர். உதயகுமார்.

விலைவாசி ஏற்றத்திற்கும், பொருளாதார வீழ்ச்சிக்கும் கறுப்புப் பணமும் காரண மாகும். நீங்கள் குறிப்பிட்டிருந்த மாதிரி, வரு மானவரிச் சட்டத்தையே முதலில் மாற் றியமைக்க வேண்டும். தொழிலதிபர்களும், நடிகர்களும் லட்சக்கணக்கில் வரி கட் டாமல் பாக்கி வைப்பதும், நடுத்தர மக் களைத் தன்னுடைய கடுமையான சட்டம் மூலம் வருமான வரித்துறை பயமுறுத்து வதும் திருத்தப்பட வேண்டும். அதோடு, நாம் கட்டும் வரிப் பணம் நமக்காகப் பயன் படப் போகிறது என்கிற எண்ணம் வந்து எல்லோ ரும் வரி கட்ட முன்வந்தால்... உண்மையில் இந்தியாவில் பொருளாதார மறுமலர்ச்சியே உண்டாகும்.

சேலம், கே. ராஜபாலு.

நரசிம்மராவுக்குப் பின் கேசரி, காங்கிரசை பலப்படுத்துவார் என்றுதான் கனவு கண் டோம். ஆனால், தில்லுமுல்லுகளுக்கும், தகிடு தத்தங்களுக்கும், ராவ், கேசரி இருவருமே ஒரு வருக்கொருவர் சளைத்தவர்களே அல்ல என் பதை தலையங்கம் வாயிலாக உறுதி செய்து விட்டீர்கள். சபாஷ்!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

சீசனுக்குத் தகுந்தபடி ஜோக்ஸ் வெளி யிட்டு, வாசகர்களைக் குஷிப்படுத்துவதில் கல்கி என்றுமே நம்பர் ஒன்தான்! சென்ற இதழில் வெளியான 'மாடி பஸ்' பற்றிய ஜோக்ஸ் அனைத்தும் அட்டகாசம்.

வேலூர்-6, வே.த. கதிர்வேல்.

'பாரதி கண்ணம்மா' பட விமரிசனம் பண்ணியதெல்லாம் சரிதான்! படத்தின் உயிர் நாடியான கிளைமாக்ஸை அப்படியே வெட்ட வெளிச்சமாக்கி, புதிதாகப் படம் பார்ப் போரின் சுவாரஸ்யத்தைக் கெடுத்து விட்டீர்களே...! மேலோட்டமாய், சஸ்பென்ஸ் கெடாதபடி பாராட்டியிருக்கலாமே...

மதுரை, எல்.எம். அபிதாட்சயா.

ம.தி.மு.க. பிரமுகர் கொலை பற்றிய கட் டுரை படித்தேன். தொழில்ரீதியான போட்டி; மத ரீதியான மோதல்; அரசியல் ரீதியான காழ்ப்புணர்வு; ஜாதி ரீதியான சச்சரவு என இவைகளுக்கெல்லாம் கொலைதான் தீர்வா? தமிழகம் கொலைக் களமா? கவலையாக இருக்கிறது.

மதுரை, நெல்லை வி. சிவா.

சேர்ந்து கலக்கும் 'இருவர்!' என்ற கவர் ஸ்டோரியின் டைமிங் டைட்டிலே சூப்பர் கலக்கலாய் அமைந்திருந்தது!

சிதம்பரம், த.கு.பா. பட்டுதுரை.

பக்தி அளவோடு இருக்க வேண்டும். பக்தி போதையாகப் போனால், ஒரு குடும் பம் எப் படி நிலை குலையும் என்பதைக் 'கமலாவைத் தேடி' கதாசிரியர் நன்கு படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

சென்னை - 106, ஆர். ராஜா சாகிப்.

'காலம்' சிறுகதை நெஞ்சைத் தொட்டது! எழுதிய கனகராஜனுக்குப் பாராட்டுக்கள்!

குமராட்சி, எம். பிரபு.

விலைவாசி என்ன செய்யும்?

# தேரோட்டம்

**வி.கே. ராமசாமி**

மூன்றாவது முறையாக நான் வீட்டை விட்டு ஓடிப்போனபோது என் வீட்டார் தெளிவானதொரு முடிவுக்கு வந்துவிட்டார்கள். 'இனி இவன் திருந்த மாட்டான்; மறுபடி மறுபடி போய்ப் பிடித்து இழுத்து வருவது வீண்; எப்படியோ முட்டி மோதி, எங்கேயாவது நன்றாக இருந்தால் சரி.'

அதற்குப் பின் நெடு நாட்களுக்கு என்னைத் தேடிக் கொண்டு என் வீட்டிலிருந்து யாரும் வரவில்லை. நான் டி.கே.ராமச்சந்திரன் தலைமையில் இயங்கின அந்த நாடகக் குழுவில் நிரந்தர உறுப்பினர் ஆனேன்.




முதல் நாடகம் - விமலா அல்லது விதவையின் கண்ணீர் அமோக வரவேற்பைப் பெற்றது. அந்நாடகத்தில் நான் ஏற்று நடித்த முருகன் என்ற நகைச்சுவைப் பாத்திரம் எனக்கொரு திருப்புமுனை ஆயிற்று. 'இந்தப் பையன் எந்த வேஷம் கொடுத்தாலும் தாங்குவான்' என்று முடிவு செய்த டி.கே.ஆர்., நாங்கள் அடுத்துப் போட்ட 'பம்பாய் மெயில்' நாடகத்தில் மிகப் பெரிய பொறுப்பு ஒன்றை எனக்களித்தார். சதாசிவ முதலியார் என்ற அறுபது வயதுக் கிழவர் வேடம்!

எனக்கோ அப்போது வெறும் பதினாறை எட்டிப் பிடிக்கிற வயது தான்.

மேக்-அப்பினால் மட்டுமல்ல; மனத்தளவிலும் அந்நாடகத்துக்காக நான் என்னை ஒரு வயோதிகன் போலவே கற்பனை செய்து கொண்டு, அந்தப் பாத்திரத்தில் நடித்தபோது எழுந்த கைதட்டல்களால் சபை அதிர்ந்து போனது.

அதற்கு முன் அந்த நாடகம் பல மேடைகள் கண்டதுதான்; அந்த சதாசிவ முதலியார் பாத்திரத்தில் எத்தனையோ பேர் நடித்திருக்கிறார்கள்தாம்; ஆனால், "வெறும் மண் மாதிரி இருந்த அந்தப் பாத்திரத்தை நீ நடித்து, வைரமாக்கி விட்டாய், ராமசாமி" என்று பார்த்தவர்கள் பாராட்டியபோது நான் சந்தோஷத்தில் அழுதே விட்டேன்.

அதுதான் ஆரம்பம். அதன்பின் எத்தனை கிழ வேடங்கள்! நாடகங்களிலும் சரி; பின்னால் '47ல் நான் முதல்முதலாக சினிமாவுக்கு வந்தபின்னும் சரி. இளைஞனான எனக்குக் கிடைத்த வேடங்கள் பெரும்பாலும் 60 வயதுப் பாத்திரங்கள்தாம். என் முதல் படம் 'நாம் இருவரி'ல்கூட தாத்தா வேடம்தான்!

"இளைஞனாக இருந்துகொண்டு இது மாதிரி கிழ வேடமேற்று நடிப்பது சாதாரண விஷயமல்ல. உன்னைத் தவிர, வேறு யார் இத்தனை சிறப்பாக இத்தகைய பாத்திரங்களில் நடிக்கிறார்கள்?" என்று நண்பர்கள் கேட்கும்போது மிக மகிழ்ச்சியாக இருக்கும்!

தர்மபுரியில் எங்கள் நாடகங்கள் நல்ல வெற்றி காண, அடுத்ததாக அரக்கோணத்துக்குப் பயணமானோம்.

அரக்கோணம் டவுன்ஹாலில் எக்கச்சக்க எதிர்பார்ப்புகளோடு நாங்கள் நாடகம்

போடத் தொடங்க, பேரிடி!

நாடகம் பார்க்கக் கூட்டமே வரவில்லை. ஊர்ப் பிரமுகர்கள், வி.ஐ.பி.க்கள் வந்தார்களே தவிர, பொதுமக்கள் அதிகம் வரவில்லை.

தினம் தினம் நாடகம் போடுவது; வசூலாகாமல் வருந்துவது - இப்படியே நாட்கள் கடந்து கொண்டிருக்க, டவுன்ஹாலில் எங்கள் நிகழ்ச்சிகள் நடத்துவதற்குத் தர வேண்டிய வாடகைகூடத் தர இயலாத சூழ்நிலை உருவாகி விட்டது.

"காலி பண்ணி விடுங்கள்" என்றார் அந்த இடத்தின் செகரட்டரி. காலி பண்ணி, வேறு முகாம் மாற்றுவது என்றால் சும்மாவா?

நாங்கள் கொஞ்சம் அவகாசம் கேட்டுக் கொண்டு என்ன செய்யலாம் என்று யோசித்தோம்.

அப்போது, அரக்கோணத்தில் நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு அருகே பெட்டிக் கடை வைத்து நடத்தி வந்த ஒருவர், அந்தக் கொஞ்சநாள் பழக்கத்திலேயே எனக்கு நல்ல நண்பராகியிருந்தார். நான் அவரிடம் சென்று, இப்படி ஒரு பிரச்னை வந்திருப்பதைச் சொல்ல, அவர் ஓர் உபாயம் சொன்னார்: "அம்மா மனசு வெச்சா நடக்கும்!" அவர் அம்மா என்று குறிப்பிட்டது, அந்த டவுன் ஹால் செகரட்டரியின் மனைவியை.

நான் ஒரு முடிவோடு, அவர்கள் வீட்டை விசாரித்துக் கொண்டு போய்க் கதவைத் தட்டினேன்.

செகரட்டரியின் மனைவி, முதலில் கொஞ்சம் முறைப்பாகவே பேசினாலும் பிறகு நான் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்க ஆரம்பித்தார்.

"இதோ பாருங்கம்மா. வாடகை தராம ஏமாத்தறது எங்க நோக்கமில்லை. ஆனா இது வரைக்கும் போட்ட நாடகங்களுக்கு ஆன வசூல் ஒண்ணும் சிலாக்கியமா இல்லை. அடுத்து, புதுசா சில நல்ல நாடகங்கள் போடப் போறோம். நிச்சயம் அது ஜனங்களுக்குப் பிடிக்கும். வசூலாகும்" என்றேன்.

"அந்த நல்ல நாடகத்தை முதல்லேயே போடறதுக்கு என்ன?" என்று நக்கலாகக் கேட்டார் அந்தப் பெண்மணி.

சரி; மசிந்து வருகிறார் என்று எண்ணி, நான் மேலும் பல நம்பிக்கை வார்த்தைகளை அவருக்குச் சொல்லி, எப்படியும் வாடகையைக் கொடுத்து விடுவதாக உத்தரவாதம் தந்தேன்.

அந்தப் பெண்மணியின் உதவியால், அப்போதைக்கு காலி பண்ணாமல் தப்பித்தோம்.

அரக்கோணத்தில் நாங்கள் தொடர்ந்து நாடகங்கள் போட்டு வந்தபோது, அதற்கு அருகே உள்ள 'மப்பேடு' என்கிற குக்கிராமத்தில் 'எங்களை நாடகம் நடத்திக் கொடுக்க முடியுமா?' என்று வந்து கேட்டார்கள்.

இரண்டு நாள்; இரண்டு நாடகத்துக்கு ரூ.100 என்று பேசி, ஐம்பது ரூபாய் அட்வான்ஸும் வாங்கி விட்டார் டி.கே.ராமச்சந்திரன்.

பஸ்ஸுக்கெல்லாம் செலவு பண்ணிக் கட்டாது என்று ஒரு மாட்டு வண்டியில் சாமான்களை ஏற்றி, நாங்கள் அதன்கூடவே நடந்து சென்று அந்த கிராமத்தை அடைந்தோம்.

நாங்கள் தங்குவதற்கு ஒரு மண் குடிசையை ஒதுக்கித் தந்திருந்தார்கள். அதுபற்றியெல்லாம் அதிகம் கவலை கொள்ளாமல் 'நம்மைக் கூப்பிட்டு சான்ஸ் கொடுக்கிறார்களே' என்று மகிழ்ந்து கொண்டிருந்தோம், வரப் போகிற விபரீதம் பற்றி ஏதும் அறியாமல்.

மப்பேடில் நாங்கள் முதல் நாள் 'லவகுசா' நாடகம் போடுவதாக இருந்தது. எனக்கு அதில் ஒரு ரிஷி வேடம்.

இரவு ஒன்பதரை, பத்து மணிக்கு ஆரம்பித்த நாடகத்தை நல்லபடியாக இரவு இரண்டு மணிக்கு முடித்தோம். அவ்வளவுதான்; வந்தது வினை.

"என்னய்யா இது? ரெண்டு மணிக்கு முடிச்சிட்டா என்ன நியாயம்? விடிய விடியப் போட வேணாமா?"

"அதானே? இவனுங்க நாடகத்தைப் பார்க்க, வண்டி கட்டிக்கிட்டு வெளியூர்லேருந்து வந்திருக்கோம். இப்படிப் பாதிலு எந்திரிச்சிப் போன்னா, எங்க போறது?"

தலைக்குத் தலை கத்த ஆரம்பித்தார்கள். எங்களுக்கு முதலில் விவரம் புரியவில்லை,






பிறகுதான் அவர்கள் பேச்சிலிருந்து ஒருவாறு யூகித்துக் கொண்டோம்.

கிராமத்து ஜனங்களான அவர்கள், விடிய விடியக் கூத்து பார்த்தே பழகியவர்கள். இப்படி நடு இரவிலேயே இரண்டு மணிக்கு நாடகம் முடிந்து விட்டால் கோபம் வரத்தானே செய்யும்?

ஆனால் எங்களால் செய்யக் கூடியது ஏதுமில்லை. அந்த நாடகம் அவ்வளவுதான்! என்ன செய்ய முடியும்?

சலசலப்பாக இருந்த சப்தம் கலவரமாக மாறியது. அவரவர் குரல் ஓங்கி ஒலிக்க, கூட்டம் மேடையை நோக்கி, வசவுடன் வரத் தொடங்கியது.

எங்களுக்கு ஐம்பது ரூபாய் அட்வான்ஸ் கொடுத்துக் கூட்டி வந்த கான்ட்ராக்டர், எங்கே போனார் என்றே தெரியவில்லை!

நள்ளிரவு. அத்தனை கிராமத்து ஜனங்களும் ஒரே மாதிரி விரோத பாவத்துடன் எங்களை நோக்கி வர, என்ன செய்வது என்று தெரியாமல் எங்கள் குழு கையைப் பிசைந்து கொண்டு நின்றது.

நான் ஒரு வினாடி யோசித்தேன். தைரியமாக மேடைக்கு முன் வந்து, "அமைதி! அமைதி!" என்று குரல் கொடுத்தேன்.

கூட்டம் அடங்க, தொண்டையைச் செருமிக் கொண்டு பேச ஆரம்பித்தேன்:

"இந்தா பாருங்க. எங்களுது நாடகம்தான். கூத்து இல்லை. நாடகம் நாலு அவர்தான் நடக்கும். இதையே விடியறமுட்டும் இழுக்கறதுன்னா எப்படி? எங்களுக்கும் போரடிக்கும்; உங்களுக்கும் போரடிக்கும். அப்படி உங்களுக்கு விடிய விடிய பார்த்தாத்தான் ஆச்சுன்னு முரண்டு புடிச்சீங்கன்னா, இதே நாடகத்தை இன்னொரு தடவை போட வேண்டியதுதான்! தயார்னா சொல்லுங்க. எங்களுக்கு வேற வழி இல்லை. வேற நாடகம் போடறதுக்கு மேக்-அப் சாமான், செட் எதுவும் இப்ப இல்லை. என்னா சொல்றீங்க?" என்று கேட்டேன்.

"அதெப்படி இதே டிராமாவை இன்னொரு தடவை பார்க்கறது? அதெல்லாம் முடியாது! மரியாதையா வேற எதனா நடத்து!" என்று கூட்டம் எங்களைத் தாக்கவே தயாராகி விட்டது போல மேலும் முன்னுக்கு வர, வேறு வழியில்லை என்று நாங்கள் பின்புறம் குதித்து, இருட்டில் ஓட ஆரம்பித்தோம்.

ஒரு வழியாக நாங்கள் தங்கியிருந்த குடிசையை வந்தடைந்து படுத்துக் கொண்டோம். நல்லவேளை யாரும் துரத்திக் கொண்டு வர வில்லை.

மறுநாள் அந்த ஊர் பஞ்சாயத்து தலைவரிடம் புகார் போயிற்று.

"அதெப்படீங்க நீங்க ரெண்டு மணிக்கு நாடகத்தை முடிப்பீங்க?" என்று அவர் கேட்டபோது வந்ததே ஆத்திரம்!

"ஐயா, நீங்களே அரக்கோணத்துக்கு வந்து, எங்க நாடகம் பார்த்திருக்கீங்க. நாடகம் எப்ப முடியும்னு நல்லா தெரிஞ்ச நீங்களே இப்படிக் கேட்டா எப்படி?" என்றேன் அவரிடம்.

டவுன்ஹால் நாடகங்களுக்கு மக்கள் வரா விட்டாலும் முக்கியஸ்தர்கள் பலர் வந்தார்கள் என்று சொன்னேனல்லவா? அப்படி வருகிறவர்கள் யார், யார் என்று நான் கவனமாகப் பார்த்து வைத்திருந்தது அப்போது எனக்கு உதவியது.

அந்தப் பஞ்சாயத்துத் தலைவருக்கு என் வாதத்திலிருந்த நியாயம் புரிந்தாலும் அவரால் ஊர் மக்களையும் பகைத்துக் கொள்ள முடியவில்லை. பலவாறாகப் பேசி, சமாதானம் செய்து அவர்களை அனுப்பி வைத்தார். அன்று காலை எங்களை அவர் வீட்டிலேயே சாப்பிடவும் அழைத்தார்.

கம்பஞ்சோறு, கூழ், பழைய சாதம் என்று அவர் வீட்டில் எங்கள் குழுவினர் ஒரு பிடி பிடித்துவிட்டு, பாக்கி தர வேண்டிய ஐம்பது ரூபாயையும் அவரிடமே வாங்கிக் கொண்டு புறப்பட்டோம்.

அரக்கோணம் வந்து இறங்கியதுதான் தாமதம். பழைய முதலாளி பொன்னுசாமி பிள்ளையின் உறவினர் அச்சாபீஸ் சங்கரன் என்பவர் டி.கே. ராமச்சந்திரனைப் பார்க்க ஓடி வந்தார்.

"தம்பி, விஷயம் ரொம்ப அவசரம். நீங்க மாரியப்பனையும் ராமசாமியையும் மட்டும் கூட்டிக்கிட்டு உடனே புறப்படுங்க. இப்பவே சேலம் கிளம்பியாகணும். உம், சீக்கிரம்!" என்று பரபரத்தார்.

யாருக்கு என்ன ஆயிற்று? நாங்கள் கலவரமாக அவரைப் பார்த்தோம்.

-தொடரும்

# மனசும் மனசும்

கூட்டத்தோடு கலந்தாலும் தமது ஜோடியை சேர்த்துக் கொண்டு தனியே பேசுவதிலேயே அவர்கள் ஆவலாய் இருந்ததை கவனித்தான் வாசு. அவனுக்குப் பக்கத்தில் என சொல்லும்படியாக இருந்த புவனாவையும். அவளும் மற்றவர்களைப் பார்ப்பதிலேயே கவனம் கொண்டிருந்தாள். இவனைக் காட்டிலும் கூடுதலாக.

புவனா இவனுக்கொன்றும் தெரியாத பெண் அல்ல. தெரிந்த வளாயினும் அதிகம் பேசினதில்லை. இன்று கூடவே வருவதால் ஏதாவது பேசித்தான் ஆக வேண்டும். பரிச்சயம் இல்லாதவனிடம் எதைப் பேச என யோசனையாக வந்து கொண்டிருந் தான்.

"என்ன, எதுவும் பேசாமலே வர்றீங்க?" என்றாள் புவனா.

"எதப் பேசறதுன்னுதாங்க தெரியல."

"படிக்கற சப்ஜெக்ட் தவிர எதானாலும் பேசலாம்" என்றுவிட்டுச் சிரித்தாள். அந்த சிரிப்பு அவனது தயக்கத்தைக் குறைத்து விட்டதாக இருந் தது.

அன்றைய தினத்தினுடைய விசேஷத்தி னாலா அல்லது இப்படி ஒன்றாகக் கிளம்பிய தாலா எனத் தீர்மானிக்க முடியாத குதூகலம் எல்லோர் முகத்திலும் இருந்தது. பெண்களின் நளினமான நடையிலும் பையன்களின் அங்க சேட்டையிலும் கூட ஏதோ உற்சாகம். அடிக் கடி நெருங்கிக் கொண்டார்கள். அடிக்கடி சிரித்துக் கொண்டார்கள். பொது இடம், பலரது பார்வையும் படுகிற பாதை என்கிற பயமே இல்லாமல்.

காதலர் தின சிறப்புச் சிறுகதை

ம்ருதுபாஷிணி

ஆனாலும் ஏன் இப்படி எல்லோரும் படிப்பென்றால் வெறுத்து ஒதுக்குகிறார்களோ. அவனுக்கு படிக்கப் பிடிக்கிறது. படிப்பு வரவும் செய்கிறது. பி.எஸ்ஸி., முடித்து எம்.எஸ்.ஸி., ... அதற்கப்புறமும் படிக்கணும். தற்சமயம் நினைப்பும் மும்முரமும் வரப் போகிற மாதிரித் தேர்வில். இந்த வருஷம் கோல்டு மெடல் வாங்கிவிட வேண்டும் என்பது அவனுடைய இலக்கு.

இந்தப் படிப்பார்வத்தினால் அவனை மற்றவர்களுக்கு கேலியாகப் படுகிறது. வெட்டி அரட்டை, இன்றைக்கு மாதிரி கட்டடித்து விட்டு சினிமா, சிகரெட், தண்ணி என்றிவைகளில் கலந்து கொள்வதில்லை என்பதாலும் தான்.

"லைஃப எஞ்ஜாய் பண்ணக் கத்துக்கறதுக்குத்தான்டா காலேஜ். இப்படி சாமியாரா இருக்கறதுக்கில்ல."

சொல்வார்கள். அவன் கேட்டு விட்டு ஒற்றைச் சிரிப்பில் மழுப்பி விடுவான். சினிமாவுக்கோ, பிக்னிக் போகவோ நண்பர்கள் அழைத்தாலும் மறுத்துவிடுவான். நேற்று அப்படி முடியவில்லை. வலுக்கட்டாயமாக அழைத்து, இன்றைக்கு வரவைத்து விட்டார்கள்.

மற்றவர்கள் ஏற்கெனவே திட்டமிட்டிருந்தது இது. வாசுவுக்கு நேற்றுத்தான் தெரிய வந்தது. ஃபிப்ரவரி துவங்கியதிலிருந்தே 'வாலன்டைன் டே' பற்றிய பேச்சுகளும் துவங்கி, சமீபத்தில் தீவிரப்பட்டிருந்தது கல்லூரியில். முன் தின மதிய உணவு



இடைவேளையில் வாசு இன்ஆர்கானிக் கெமிஸ்ட்ரியில் ஆழ்ந்திருந்த போது ரஞ்சித்தும் மனோகரும் வந்து விஷயத்தைத் தெரிவித்திருந்தனர்.

"நாளைக்கு நாங்க செட்டா... சினிமா, பார்க்குன்னு சுத்தப் போறோம். வழக்கம் போலத்தான்னாலும் இது வாலன்டைன் டே ஸ்பெஷல் ப்ரோக்ராம். நான் - நிம்மி, ரஞ்சித் - ஆஷா, இளங்கோ-நூரி... இப்படி எல்லாருமோ சேர்ந்து போறோம்" என்றான் மனோகர்.

"வாழ்க, உங்கள் தெய்வீகக் காதல்கள்!"

• சித்ரன்





• ஷாராஜ்

'ம்ருதுபாஷிணி' என்கிற பெயரில் இக்கதையை எழுதியிருப்பவர்கள் - இருவர். சித்ரன் - ஷாராஜ். இருவருமே கல்கி வாசகர்களுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர்கள், தம் சிறுகதைகள் மூலம். இருப்பினும் கோவையில் வசிக்கிற சித்ரனும் கேரளாவில் இருக்கிற ஷாராஜும் இணைந்து எழுதிய முதல் கதை இது. இருப்பிடம் வேறுவேறாயினும் தொழில்ரீதியில் கோயமுத்தூரிலேயே தினமும் புழங்க வேண்டி இருப்பதால் அடிக்கடி சந்திப்பு, நட்பு, பேச்சு, இலக்கிய ஆர்வம் எல்லாம் ஒரே அலைவரிசையில் இருந்தால் சுலபமாக இணைய முடிந்திருக்கிறது. தனித்தனியாக அவரவர் பெயரில் கதைகள் எழுதினாலும் இனி இணைந்தும் அவ்வப்போது எழுதுகிற உத்தேசம் இருப்பதாகச் சொல்லும் இவர்களின் இச்சிறுகதையைக் காதலர்கள் தினச் சிறப்புச் சிறுகதையாக வெளியிடுவதில் கல்கி தன் சந்தோஷத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறது.

"இந்த நக்கல்தான வேணாங்கறது. லவ்வுன்னா அவ்வளவு எளப்பமா இருக்கா உனக்கு?"

"ஹ! உங்க லவ்வப் பத்தித் தெரியாதா எனக்கு? அசட்டுத்தனமான லெட்டர், அபத்தமான கவிதைன்னு கிறுக்குவீங்க. மரத்தடில உக்காந்துட்டு 'நமக்குள்ள எத்தனை ஒத்துமை பாத்தியா? உன்ன மாதிரியே எனக்கும் அலரக்காப் பொரியல் புடிக்கும்'னு டயலாக் பேசுவீங்க."

"காதல்னா இவ்வளவுதான்ங்கறயா?"

"வேறென்ன?"

"அதெல்லாம் சொல்லிப் புரியாதுடா. தானா அனுபவிக்கணும். மாப்ள..., யாரையாவது லவ் பண்ணிப் பாரு. அப்புறம் தெரியும். அதோட சுகமே தனிதாண்டா."

வாசுவுக்குக் காதலில் நம்பிக்கை கிடையாது. குறிப்பாக இதுபோன்ற கல்லூரிக் காதல்களில். அவற்றில் பாதி கல்லூரியோடு முடிந்து போவனதான். பொழுதுபோக்கு, அற்ப சந்தோஷங்கள் என வேண்டுமானால் மிஞ்சும் காதலின்போது. அவனுக்கோ வெறுமனே போக்கப் பொழுது இல்லை. அற்ப சந்தோஷத்திற்காக இந்த ஈர்ப்பு விவகாரத்தில் அவன் மாட்டிக் கொள்ளவும் தயாரில்லை. கல்லூரியில் பலரது கனவுப் பெண்ணாக இருக்கிற சுஜாதாவின் ஆங்கிலக் கவிதைகளுடன் கூடிய கடிதத்தையே புறக்கணித்தவன் அவன்.

இந்த விவரங்கள் அவர்களுக்குத் தெரியுமாதலால் எதையும் சொல்லாமல் கேலியாக சிரித்தான். அதைப் பொருட்படுத்தின மனோகர், வாசுவை மிக நெருங்கினான். "சிரிக்காத. நீயும் நாளைக்கு எங்களோட வந்து பாரு. காதலப் பத்தின உன்னோட பிலாஸஃபியே மாறிடும்."

'அது எப்பவும் மாறாது. அத மாத்திக் காட்டுக்காக ஒருநாள் நான் வேஸ்ட் பண்ணவும் வேண்டாம். அதுவும் உங்க காதல் கன்றாவியப் பாத்துட்டு' என்று நினைத்துக் கொண்டான்.

"அப்படி இல்லன்னாத்தான் என்ன? ஜஸ்ட் ஒரு பிக்னிக் போறாப்புல வாயேன்டா" என்றான் ரஞ்சித்.

"நீங்க ஜோடியா சுத்தற எடத்துல நான் தனியாளவா? அப்படி ஒரு பிக்னிக் அவசியமா எனக்கு?"

"அந்தக் கவலை உனக்கு வேண்டாம் மாப்ள. உனக்கு கம்பெனியா ஒரு ஆள் வரும். அதுவும் உன் டைப்தான். புக்கும் கையுமாவே இருக்கும். வேற யாரு, நம்ம புவனஸ்தான்."

மேலும் வாசுவிடமிருந்து பதிலை எதிர்பார்க்காமல், "கண்டிப்பா நீ வர்றே..." என்றான் ரஞ்சித். வாசுவுக்கு விருப்பமில்லாவிட்டாலும் போய்த்தான் பார்க்கலாமே என்றெண்ணி சம்மதித்து, இன்று வந்திருந்தான்.

முதலில் ராகத்தில் ஐம்பது நாளைக் கடந்து கொண்டிருக்கிற ஹிந்திப் படத்தைப் பார்ப்பதாய்த் திட்டம். மனோ முதலிலேயே வேண்டிய டிக்கெட்டுகளுக்கு ரிஸர்வ் செய்திருந்தான். காலைக் காட்சி பத்தரைக்கு.

தியேட்டர் வளாகத்திற்குப் போகும் போதே தெரிந்த சில மாணவர்கள் தென்பட்

டனர். ஜோடிகளாகவும் வேறு கல்லூரியைச் சேர்ந்த சிலர். அந்தப் பெண்களின் தலைகளிலும் ஒற்றை ரோஜாக்கள். ஆஷா, நிர்மலா, நூர்ஜஹான் தலைகளில் இருந்ததைப் போலவே. வாசு, புவனாவின் தலையை அப்போதுதான் பார்த்தான். அதில் வெளிர் ஊதா நீல டிசம்பர் பூக்கள் மட்டும்.

படம் துவங்கும் முன்பு 'Wish you a happy Valentine day' என்று ஸ்லைடு காட்டப்பட்டது. உடனே விஸிலடிப்பும் கை தட்டல்களும் கிளம்பின. முதல் இரு வகுப்புகளிலும் பால்கனியிலுமிருந்து. மற்ற ஜோடிகள் படம் பார்த்ததாகவே தெரியவில்லை. ஒருமுறை எட்டி கவனித்ததிலேயே பிறகு திசை திரும்பக் கூடாதென முடிவு செய்தான் வாசு. திரையிலிருந்து பார்வையை மாற்றவேயில்லை. படத்திலும் காதலர்களின் சேட்டைகள், உருக்கம், சென்டிமென்ட் சமாசாரங்களை சகிக்க முடியவில்லை.

மத்தியானம் தியேட்டருக்குப் பக்கமாயிருந்த அன்னபூர்ணாவில் சாப்பிட்டார்கள். இங்கேயும் பக்கத்தில் புவனா. அதிகம் பேசிக் கொண்டிருந்தது வாசுதான். 'படிக்கற சப்ஜெக்ட்'டைத் தவிர்க்க வேண்டி அவன் பேசியது எல்லாமே "ஃபிப்ரவரிலேயே வெயில் இப்படிக் கொளுத்துதே" வகையறாக்களாகவே இருந்தன.

அதற்கப்புறம் வ.உ.சி. பூங்கா. இங்கே வந்ததும் ஜோடிகள் இயல்பாய் தனித்தனியே ஒதுங்கின. பெஞ்சுகள், மரத்தடி நிழல், குரோட்டன்ஸ்கள் மறைக்கிற புல்வெளி என. இளங்கோ நூர்ஜஹானுடன் வெகுவாகத் தள்ளி ஒரு பெரிய மரத்துக்குப் பின் மறைந்து கொண்டான்.

"சாயந்திரமானா கூட்டம் அதிகமா வருமோ?" என்றவாறே வாசு ஒரு பெஞ்சில் உட்கார்ந்தான்.

"ம்..." இடையே ஒரு ஆள் தாராளமாக உட்கார்கிற அளவுக்கு இடைவெளி விட்டு அமர்ந்தாள் புவனா.

பூங்காவின் மையத்தில் இருக்கிற மண்டபத்தைப் பார்க்கிற பாவனையில் அவளை உன்னித்தான். மிக சுமாரான பெண். சாதாரணத் தோற்றத்தில் ஒரு சுரிதார். கையில் ஒரு பர்ஸ். இடதுகையில் மடிக்கப்பட்ட கர்ச்சீப். தலையில் டிசம்பர் பூக்கள் கசங்கலாய் வாடியிருந்தன.

"பசங்க, பொண்ணுங்க ஒருத்தரும் சினிமாவ முழுசாப் பாக்கல" என்றவன், தான் கண்டதைச் சொல்ல வந்து, மாற்றிக் கொண்டான். "மூச்சு விடாம ஒரே பேச்சு. ஹோட்டல்லயும் யாரும் கவனமா சாப்பிடல. எல்லாத்தயும் ஒழுங்காப் பண்ணினது நாம ரெண்டு பேரு



"கராத்தே சாம்பியனைக் காதலிச்சு, கல்யாணம் செய்துகிட்டீங்களே, லைஃப் எப்படி இருக்கு...?"

"ரொம்ப திரில்லா இருக்கு. நேற்று என் மனைவிக்கும் எனக்கும் சண்டை. அவள் 'என்னை' அடிக்க, 'என்னை' அவள் அடிக்க, அவள் 'என்னை' அடிக்க... ஒரே ரகளையாச்சு!"

– நெய்வேலி உத்ஸ்

---

தான், இல்லையா புவனா?"

"ம்...." மெள்ளத் தலையசைத்தாள் புவனா. "சும்மா கூப்பிட்டாங்கன்னுதான் வந்தேன்."

"நானும்தான். ஒரு சேஞ்ச் வேணுமேன்னு வந்தேன். எப்படியோ, ரொம்ப நாள் கழிச்சு சினிமா பாத்தது கொஞ்சம் ரிலாக்ஸ்டா இருக்கு. அவ்வளவுதான்."

மறுபடி அவனே தயங்கித் தயங்கிக் கேட்டான். "நீங்களும் யாரையும் லவ் பண்ணலையா, என்ன?"

கேட்டிருக்கக் கூடாதோ என்று அப்புறமாய் உறுத்தியது. புவனாவின் முகத்தைப் பார்க்கையில் அவள் அதற்கு பதிலளிக்கத் தயாரானது போல் பட்டதால், கேட்டது பரவாயில்லை என நினைத்துக் கொண்டான்.

சன்னமான குரல் அவளிடமிருந்து வெளிப்பட்டது. "பண்ணினேன்."

அவளது வாக்கியத்திலிருந்த இறந்த காலத்தை வாசு கவனிக்கத் தவறவில்லை.

"எனக்கும் நெறைய ஆசைகள் இருந்தது வாசு. லவ் பண்ணணும். 'மை மேன்'னு சொல்லிக்க ஒரு ஆள் வேணும்னெல்லாம். நானும் லவ் பண்ணினேன். ஒருத்தரையல்ல. நெறையப் பேரை. இவன்தான் என்னோடவன்னு ஒருத்தர் மாத்தி ஒருத்தரா மனசுல பதிய வெச்சிட்டிருந்தேன். ஆனா அவங்க யாருமே என்னை விரும்பல. நானா வலியப் போய் பேசினாலும் விலகிப் போய்டுவாங்க. எங்கிட்ட எந்தப் பையனாவது நின்னு பேசினாலே அது அபூர்வம். அதுக்கப்புறம்தான் எனக்கும் புரிஞ்சுது."

ஒரு பெருமூச்சு புவனாவிடம் எழுந்து ஓய்ந்தது. மரத்திலிருந்து நழுவி காற்றில் ஒரு சருகு மிதந்து இறங்கினதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கை விரல்கள் கர்ச்சீப்பைத் திருகிக் கொண்டிருந்தன.

"என்ன புரிஞ்சுது...?"

"காதலிக்கிறதுக்கு மனசு மட்டும் பத்தாது. அழகும் வசதியும் கூட வேணும்னு." இதைச் சொல்லும்போது புவனாவின் குரலில் அழுத்தம் மிகக் கூடியிருந்தது. விரக்தியினால் உண்டான அழுத்தமாக இருக்கலாம்.

இரண்டாவதாகவும் ஒரு பெருமூச்சு.

"நானும் ஒரு சராசரிப் பெண்தான். சாதாரணமா இந்த வயசுல வர்ற கனவுகள், ஆசைகள் எனக்கும் இருக்கு. ஆனா இப்பல்லாம் படிக்கிறதுல கான்ஸன்ட்ரேட் பண்ணலாம்னு தோணுது."

அவள் சிரித்தாள். சிரிப்பு தெளிவாகத்தான் இருந்தது. ஆனால் அதில் அவள் வெளிப்படுத்த விரும்பின சோகம் அடங்கியிருந்தது.

பேச்சு கொஞ்சம் தீவிரமாகப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்து திசை திருப்பினான் வாசு. அவளது குடும்பம் பற்றிக் கேட்டான். தனது குடும்பம் பற்றியும், எதிர்காலத் திட்டங்கள் பற்றியும் சொன்னான். மசால் பொரி, வேர்க்கடலைக் கொறிப்புகளோடு.

ஒவ்வொரு ஜோடியாக வந்து சேர்ந்ததும் கிளம்பலாம் என முடிவானது. பார்க் கேட்டிற்கு வந்து பேக்கரியில் காபி சாப்பிட்டனர். பஸ் ஸ்டாப்பில் வந்து நின்று கொண்டிருக்கையில், "என்ன புவன்ஸ், சாமியார் அறுத்துத் தள்ளிட்டானா?" ரஞ்சித் சத்தமாகவே கேட்டான்.

"அதெல்லாம் இல்ல."

புவனா சொன்ன பிறகு வாசுவிடம் வந்தான். மெதுவான குரலில், "பொண்ணுங்கள ஏறெடுத்துப் பாக்கவே மாட்ட. இன்னைக்கு சரியான கடலையா இருந்துதே."

"ஏண்டா வெறுப்பேத்தற?"

"நெஜமா சொல்லு மாப்ள. எப்படி இருந்தது எங்களோட வந்தது?" மனோகர் வந்து சேர்ந்து கொண்டான்.

"நிச்சயமா நீ சொன்னாப்ல என்னோட பிலாசஃபியை மாத்தற அளவுக்கு இல்ல. சொல்லப் போனா இன்னும் வலுவாயிருச்சு என்னோட கருத்து."

"இவன் திருந்தவே மாட்டான்டா மனோ."

"நானா, நீங்களா?"

"சரி சரி. நம்ம ஆர்க்யூமென்ட்ட நாளைக்கு வெச்சுக்கலாம். இப்ப வீட்டுக்குப் போற வழியப் பாப்போம். நிம்மியோட பஸ் வந்துருச்சு போலிருக்கு. கூப்பிடறா" மனோகர் விலகினான்.

ஒவ்வொருவராகவோ, சேர்ந்தோ பஸ் ஏறிப் போய் விட, வாசுவும் புவனாவும் தனியாய் நின்றிருந்தார்கள். அவள் போக்குவரத்தையே வேடிக்கை பார்த்தவாறும், தனது பஸ் வருகிறதா என கவனித்தபடியும் இருந்தாள். 48-சி வந்தது. "ஓ.கே. வாசு. நான் இதுல போய்க்கறேன்."

"பெஸ்ட் ஆஃப் லக்" என்றான் வாசு.

சிரித்துவிட்டு பஸ்ஸில் ஏறிக் கொண்டாள் புவனா. பிறகுதான் அவனுக்கு அதை எதற்காகச் சொன்னோம் என்றிருந்தது.

அந்த பெஸ்ட் ஆஃப் லக் அவளது வாழ்க்கைக்கா? அல்லது ஆசைக் கனவுகளுக்கா? என நினைத்து தன்னுள் சிரித்துக் கொண்டான். ஏன் இவர்களுடன் வந்தோம் என்று கூட சலிப்பு. சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்து புவனாவின் விரக்திக் கதை கேட்டதுதான் மிச்சம். மற்றபடி ஒருநாளே வீண்தான்.

புவனாவை நினைக்கையில் அவனுக்கு அவள் மேல் பரிதாபம் மேலிட்டது. அதுதான் வாழ்த்து சொல்லவும் காரணமாக இருந்திருக்கலாம்.

புவனாவுக்கும் பஸ்ஸில் போகும்போது அன்றைய தினம் பற்றிய யோசனைதான். வாசு எப்படி அவர்களுடன் வந்தான் என்பது முதல் ஆச்சரியம். சாயந்திரம் வரை எதையாவது பேசிக் கொண்டிருந்தது இரண்டாவது.

அவர்களுடன் அவளும் வர சம்மதித்ததற்கான உந்துதல் எதுவென்று தெளிவாய் அவள் புரிந்தே இருந்தாள். வாசு என்பதால்தான் அவள் இதற்கு சம்மதித்தது. வேறு பையன்களாயிருந்தால், முகம் சுளித்திருப்பாள்.

பார்க்கில் வாசுவுடன் பேசினதெல்லாம் நினைவுக்கு வருகிறது.

"....நானும் லவ் பண்ணினேன். ஒருத்தனையில்ல. நெறையப் பேரை..."

அவனும் ஒப்புக்குத்தான் கேட்டான். நடுவில் பேச்சை மாற்றவும் செய்தானே. அவனிடம் அப்படி தனது அந்தரங்கங்களைக் கொட்டியிருக்கக் கூடாதோ. தன்னைப் பற்றி அவன் என்னவெல்லாம் எண்ணியிருப்பான் என்பதை நினைக்க, அவளுக்குத் தன் மீதே வெறுப்பு வந்தது.

அவனிடம் என்ன எதிர்பார்த்தேன் நான்? என்று திரும்பத் திரும்ப தன்னைக் கேட்டுக் கொண்டாள். லேசான கருணை, நட்பாய்



"உயரமாக இருந்த நம்ம தலைவர் திடீர்னு குள்ளமாயிட்டாரே எப்படி?"

"வேறு கட்சிக்குத் தாவிடக் கூடாதுன்னு அவரை ஒரே அமுக்கா அமுக்கி வச்சிருந்தாங்களாம்!"

– நெய்வேலி உத்ஸ்

இருக்கிற மனசு, அல்லது வேறென்ன?

இவை எதையும் வாசுவிடமிருந்து எதிர்பார்க்கக் கூடாதுதான். சுஜாதாவே வலியப் போயும் புறக்கணித்தவனல்லவா அவன்? தன்னிடம் என்ன ஒட்டுதல் வந்து விடக்கூடும்? 'பெஸ்ட் ஆஃப் லக்' என்று பஸ் ஏறும் முன்பு சொன்னானே. அதைச் சொல்லி விட்டு விலகுகிற அளவே தன் மீதான அக்கறை இருக்கிறது அவனுக்கு. அக்கறை கூட அல்லாமல் வெறும் சம்பிரதாயத்துக்காக சொன்னதாகவும் இருக்கலாம்.

எப்பவும் படிப்பு முக்கியமென்று கருதும் அவன் அப்படித்தான் இருப்பான்.

ஒவ்வொரு முகமாகப் பதிந்து அழிந்துபோய் வெறுமை கொண்டிருந்த புவனாவின் மனத்தில் வாசுவின் முகம் அழியவே அழியாததாகப் பதிந்து அடம்பிடித்தது.

இனி இந்த ஆசைகள் வேண்டாம், நடக்காது என்று தெரிந்துதானே அவள் முடிவெடுத்திருந்தாள்? அப்படியே இருந்திருக்கக் கூடாதா? இந்த நிம்மி வந்து சொன்னால் தனக்கு எங்கே போயிற்று புத்தி? 'சும்மா' என்று போனது. இப்போது இப்படி வந்து நிற்கிறது.

புவனா ராத்திரிகளில் உறக்கம் கொள்ளாமல் கற்பனைகள் செய்தாள். அதில் வாசு அவள் விரும்பியது போலெல்லாம் இருந்தான்; நடந்து கொண்டான்.

வாசுவைக் கல்லூரியில் பார்க்கும்போது அவள் திணறினாள். அவனோடு பேச வேண்டும் எனத் தவித்தாள்.

ஒருமுறை ரஞ்சித்துடன் வந்து கொண்டிருக்கும்போது நின்று இரண்டொரு வார்த்தை பேசவே செய்தான். மேலும் ஏதோ சொல்ல வந்ததாக ஒரு தோற்றம் அவனது முகத்தில் இருந்தது. ஆனால் சொல்லவில்லை. புவனாவுக்கு என்னவெனக் கேட்பதா வேண்டாமா என்ற குழப்பம். தனது விருப்பத்தின் விளைவுதான் அவன் எதையோ சொல்ல வருவதான தோற்றத்தை ஏற்படுத்தியிருந்ததோ?

பிறகு ஒரு வாரமாக அவனைப் பார்த்தும் பேச வாய்ப்பே கிடைக்கவில்லை.

வெள்ளிக் கிழமையன்று அவளுக்கு ஒரு யோசனை. அவர்கள் சேர்ந்து சென்ற இடங்களைத் தனியே சென்று போய்ப் பார்க்க வேண்டுமென்று. தியேட்டருக்கும் ஹோட்டலுக்கும் போவது சிரமம். பூங்காவிற்காவது போகணும்.

ஆமாம், அது சரியான இடம். போய் இருக்க சிரமம் இல்லை. தவிர அவன் அவளோடு விலகி அமர்ந்திருந்தாலும் நெருக்கமாகப் பேசின - அந்தரங்கங்களைப் பகிர்ந்து கொண்ட இடமாயிற்றே அது.



"அந்த நகைக் கடையில கூட்டம் அலைமோதுதே என்ன காரணம்?"

"'ஜெ' மாடல் ஒட்டியாணம், 'சசி' மாடல் நெக்லஸ்னு புதுசா அறிமுகப்படுத்தியிருக்காங்களாம்."

- நெல்லையப்பரம் செல்வன்

சனிக்கிழமை காலையில் அம்மாவிடம் நிம்மி வீட்டுக்குப் போவதாக சொல்லி விட்டுக் கிளம்பினாள் புவனா. பஸ் பிடித்து, பார்க் கேட்டில் இறங்கி நடக்கும்போது தான் செய்வது சரியா தவறா என்கிற உறுத்தல். கால்கள் தயக்கத்தில் நடைபின்னி நகர்ந்தன. பேசாமல் திரும்பிப் போய்விடலாமா என்றும் தோன்றியது.

இவ்வளவு தூரம் வந்த பிறகு பின்வாங்குவதில் அர்த்தமில்லை. போய்ப் பார்த்தே விடலாம் எனத் தீர்மானித்தவுடன் நடை சீரானது. வேகம் பெற்றது.

அன்று அவர்கள் அமர்ந்திருந்த இடத்தை தூரத்திலிருக்கும்போதே பார்த்தாள். மஞ்சள் கொன்றை போல ஒரு இனம்புரியாத செடிக்குப் பக்கத்தில். இப்போது அந்த சிமெண்ட் பெஞ்சில் ஒரு ஆள் திரும்பி உட்கார்ந்திருந்தான். முதுகுப்புறம் தெரிந்தது. தலை குனிந்து தரையை வெறித்தபடி இருந்தான். பலத்த சிந்தனையாக இருக்கக்கூடும்.

தயக்கமாக நெருங்கும்போது ஒரு சாயலில் அது வாசுவோ என்று பட்டது. இருக்காது. அவனையே நினைத்து நினைத்து வேறு யாரோவும் வாசுவாகவே தெரிகிறார்.

அப்பால் கடந்து போவது போல நடந்த போது பார்த்தால் அது... அது... வாசுவேதான். ஆச்சர்யத்துடன், "வாசு...." என்றாள்.

நிமிர்ந்து பார்த்த அவன் கண்களில் திகைப்பு. சமாளித்துக் கொண்டவனாக, "எங்க இந்தப் பக்கம்?" என்றான்.

"உப்பிலிபாளையத்துக்கு ஒரு சின்ன வேலையா வந்தேன்..." என்றவள், "நீங்க எப்படி இங்கே?"

"சும்மா ஒரு ஃப்ரெண்டைப் பாக்க வந்தேன். கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துட்டுப் போலாமேன்னு...."

இரண்டு பேர் சொல்வதும் பொய்யென்று இருவருக்கும் தெரிந்தே இருந்தது.

## வருகிறது, சிவரதம்!

● உள்ளாட்சித் தேர்தல் அருகே வர வர மும்பை அரசு வட்டாரங்களில் ஜு... வேகம் அதிகரித்திருக்கிறது. '271-ல் வெறும் 65 ஸீட்டுகள்தானா' என்று பி.ஜே.பி.காரர்களுக்கு இரத்தக் கொதிப்பு! அண்ணா ஹசாரேயின் ஊழல் குற்றச்சாட்டுகளால் ஒரு பொதுவான மலேரியா நடுக்கம்! பிள்ளை உதவ்வையும் மருமகன் ராஜையும் தாக்கரே நம்பிக் கொண்டிருப்பதால், கட்சிக்கு உழைத்த பழம்பெருச்சாளிகளுக்கு



• அமிதாப்

# நாலாவது

ஹார்ட்-அட்டாக்! ஏ.ஸி., டோர்-டு-டோர் கார்பெட், டீ.வி., ம்யூசிக் ஸிஸ்டம் எல்லாம் பொருத்தப்பட்ட "சிவரத்"தில் (பஜாஜ் டெம்போ - அன்பளிப்புதான்) ஜீன்ஸ் பாண்ட், டீ ஷர்ட் சகிதம் 'ராஜ்' பவனி வருவது பலர் கண்களுக்கு உறுத்தல்!

## 30 படுத்தும் பாடு!

● பெண்களுக்கு முப்பது சதவிகித இடஒதுக்கீட்டால், ஒவ்வொரு அரசியல் கட்சிக்கும் பெரிய தலைவலி! 'தகுதி' வாய்ந்த பெண் வேட்பாளர்கள், எழுபது பேரைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமே? டீ.வி.யில் மராத்தி செய்தி வாசிப்பவரிலிருந்து, வக்கீல்கள், விரிவுரையாளர்கள், சமூகசேவகிகள் என யார் கிடைத்தாலும் ஏற்கத் தவியாய்த் தவிக்கிறார்கள். இதுதான் சாக்கென்று பல அரசியல்வாதிகள் தங்கள் மனைவி, மைத்துனி, மகள் என கிடைத்தவர்களை உள்ளே தள்ளப் பார்க்கிறார்கள்!

## தாக்ரேவின் தரக்குறைவுப் பேச்சு

● 'தாக்கரே பெண்களைத் தரக்குறைவாகப் பேச ஆரம்பித்து விட்டார். ஷீலா கினியை 'சண்டைக்கார புளுகுண்ணி' என்றும், புஷ்பா பாவேவை (மராத்திய இலக்கியவாதி) கோயில் தேவதாசி என்றும் கூறியவர், மஹாத்மாவை கைத்தாங்கலாக அழைத்துவரும் இளம் பெண்கள் விஷயத்திலும் கிண்டலடித்

• பிரியங்கா

இருக்கிறார். 'லேட்டஸ்ட்டாக' பெண் போராளிகளை 'தகனம் செய்ய உதவும் மரக்கட்டைகள்' என்றிருக்கிறார்! "சிறு பொறி போதும், எரித்து விட; நான் 'இம்'மென்றால் உடனே பற்றிக் கொள்வர்" என்றிருக்கிறார். விடுவாரா மிருணாள் கோரே (ஜனதா தள தலைவி)? மஹாராஷ்ட்ரா முழுவதிலுமுள்ள மகளிர் இயக்கங்களின் பிரதிநிதிகளைக் கூட்டி, ஒரு போராட்டத்தையே நடத்தி விட்டார்! "மாவீரன் சிவாஜி, பெண்களை மரியாதையாக நடத்தியவன்; அவன் பெயரில் கட்சி நடத்திக் கொண்டு பெண்களை இப்படிக் கேவலப்படுத்துவதா?" என முழங்கினார்.

71 வயதில் சிலருக்கு விவேகம் வரும்! தாக்கரே போன்ற சிலருக்கு வேகம் வரும் போலிருக்கிறது!

# மாடியிலிருந்து

### கூப்சூரத் மும்பை!

● சூரத் அடிச்சுவட்டில் இப்போது 'கூப்சூரத் (அழகிய) மும்பை' பிரசாரம் சூடுபிடித்திருக்கிறது. பொது இடங்களைக் கழிப்பிடங்களாக உபயோகித்தால் ஐந்நூறு ரூபாய் அபராதம்! மாட்டு வண்டியில் கிரீனிப் பழம் வியாபாரம் செய்து கொண்டிருந்த மனிதரை 'லபக்'கென்று பிடித்தார் ஒரு சுறுசுறுப்பான பம்பாய் முனிசிபல் கார்பரேஷன் அதிகாரி! காரணம்? அவரது மாடு நடுரோட்டை அசுத்தப்படுத்தி விட்டது! வியாபாரி மறுக்க, இவர் குரல் உயர்த்த, பெரிய கூட்டமே கூடிவிட்டது!

### இருவர்

● கேனோஸா கான்வெண்ட் (அந்தேரி) மாணவியான ஸ்மிதா குப்தா, திடீரென்று தான் கிறிஸ்துவ மதத்தைத் தழுவப் போவதாகவும், நாலு வருடங்களாக தனது சரித்திர ஆசிரியை, தன்னை அதில் ஈடுபடுத்தி வருவதாகவும் அறிவித்தாள். ஆசாரமான மார்வாரி பெற்றோர் கொடுத்த புகாரின் பேரில், சிவசேனைக்காரர்கள் அவள் கான்வெண்டுக்குள் சென்று, சம்பந்தப்பட்ட டீச்சரை டிஸ்மிஸ் செய்யக் கோரி ரகளை செய்ய, அவர்கள் மறுக்க, ஒரே கலாட்டாவாகி, மிஷினரிப் பள்ளிகள் அனைத்தும் ஆட்டம் கண்டன!

இறுதியில் 'நான் மதம் மாறப் போவதில்லை! ஆனால் மாதா வழிபாட்டை விடப்போவதுமில்லை' என ஸ்மிதா இறங்கி வர, விஷயம் அமுங்கியிருக்கிறது!



• பால்தாக்கரே

செம்பூர், ஸெயிண்ட் ஆண்டனீஸ் ஸ்கூல் மாணவியான தீப்தி ஜெயின் (14), மராத்தி டெஸ்ட்டில் காப்பியடித்ததற்காகப் பிடிபட்டு, விஷயம் 'இண்டர்காம்' மூலம் ஸ்கூல் முழுவதுமாக ஒலிபரப்பப்பட்டது. பெற்றோர் கண்டனத்துக்குள்ளானார்கள்; அவமானம் தாளாமல், தீப்தி உள்ளங்கையில் 'டாட்டா' என எழுதிக் கொண்டு நாலாவது மாடியிலிருந்து குதித்து விட்டாள். உயிருக்கு அவள் போராடி வரும் நிலையில், பள்ளிகளில் மாணவர்களுக்கும் டீச்சர்களுக்குமிடையே பாலமாக இருந்து அறிவுரை வழங்கக்கூடிய "Counsellor" நியமிக்கப்படுவது அவசியமா என்பது காரசாரமாக விவாதிக்கப்படுகிறது!

### நோ என்ட்ரி!

● பிரபலங்களின் வீட்டு விருந்துகளில் 'கேட்-கிராஷ்' பண்ணுவது, அழைப்பிதழ் இல்லாமலேயே போய் கலந்து கொள்வதுதான் இப்போதெல்லாம் மும்பையில் ஃபேஷன்! அதாவது ஆஹா ஓஹோ எனப் பீற்றுவது. இந்த வகையில் அமிதாப் மகள் ஷ்வேதா திருமணத்தை ஒரு கை பார்க்கலாம் என நினைத்தவர்களுக்குப் பெருத்த ஏமாற்றம்! எண்ணி இருநூறு பேரைத்தான் அழைத்திருந்தனராம்! அதனால் கேட்பாரின்றி நுழைய முடியவில்லை. பிரியங்கா திருமணமும் இதே ஸ்டைலில் நடக்குமாம். தமிழ் நாட்டிற்குக் கிடைத்த 'அதிர்ஷ்டம்' மும்பைக்கும் தில்லிக்கும் இல்லை!

# தொலைவீர்!

- ஜெயஸ்ரீ ராஜ்

விளையாட்டு போல் கம்பெனியை இழுத்து மூடி ஐந்து ஆண்டு காலம் ஓடி விட்டது. ஃபோர்மேன் சீதாராமய்யர் என்ற அடையாளம் மறந்து, இப்போதெல்லாம் மிருதங்க வாத்தியார் என்றால்தான் அவரைத் தெரிகிறது. நெடுஞ்சாலையில் வாகனங்களின் கூடவே ஓடும் பேக்டரி காம்பவுண்ட் சுவரின் எழுத்துக்களில் தார் ஒழுகியது. அறிவிப்பின்றி மூடிய கதவுகளைப் பார்த்து கொஞ்சம் நாள் எல்லோரும் கும்பலாய் செயலற்று நின்றார்கள். பந்தலில் சில காலம் தொடர் உண்ணாவிரதம் நடந்தது. கோட்டைக்கு முன்பாக ஊர்வலம் தடுக்கப்பட்டு பிரதிநிதிகள் இருவரிடம் முதல்வர் சிரித்துக் கொண்டே மனுவைப் பெற்றுக் கொண்டார். வெவ்வேறு மட்டங்களில் பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டேயிருந்தன. கம்பத்தில் சிவப்புக் கொடி மக்கிப் போனது. பொதுவில் அன்றாடம் கஷ்டம் என்றாலும் வருடங்கள் என்னவோ ஓடிக் கொண்டேதான் இருக்கின்றன.



கொஞ்ச காலம் சீதாராமன் தினமும் காலையில் பச்சை நிற ரெக்ஸின் பையை எடுத்துக் கொள்வார். அவ்வப்போது வைதீக காரியங்களுக்கு அவருக்கு அழைப்பு வந்தது. மந்திரமெல்லாம் ஒன்றும் தெரியாது. ஆள் விட்டு கனபாடிகள் சொல்லியனுப்புவார். கூட்டமாய் அமர்ந்து 'ததாஸ்து' சொல்ல வேண்டும். ஹோமப் புகையில் கண் எரியும். தட்சிணையும் வேட்டியும் கிடைக்கும். அகாலமாய் இரண்டு வேளைகளுக்கிடையே சாப்பாடு போடுவார்கள். அன்றைய ஒருநாள் கழியும். ஆனால் இதெல்லாம் எப்போதோ ஒரு சமயம்தான். கனபாடிகளின் வழக்கமான ஜமாவில் ஆள் குறைகிறபோது அவருக்கு அழைப்பு வரும். நல்லவேளையாய் குழந்தைகள் இல்லை. வீட்டில் சீதாராமனுக்கு மனைவி மட்டும்தான். அவள் சொல்லித்தான் தெரிந்த மிருதங்க வித்தையை சாயங்காலங்களில் நாலு வீடுகளில் காசாக்க ஆரம்பித்தது. இத்தனை வயதுக்கு மேல் பக்க வாத்தியம் வாசிக்க முயற்சிப்பதில் அர்த்தம் இல்லை. தவிரவும் ஒரு கனபாடிகள் போல வித்வான்கள் யாரையும் அவருக்குத் தெரியாது. இது கம்ப்யூட்டர் காலம். பையன்களுக்கு லலித கலைகளெல்லாம் படிக்க வைக்கிற அளவுக்கு நேரம் இருப்பதில்லை. ஆசையில் பெற்றோர்கள் ஏற்பாடு செய்தாலும் தண்ணீரை குதிரையே குடித்தால்தான் உண்டு. வெறுமனே டைப்ரைட்டர் அடிக்கிற மாதிரி கற்றுக் கொள்கிறார்களேயொழிய ஒரு ஆர்வம் கிடையாது. கச்சேரியென்றால் என்னவென்றே தெரியாது. ஒரு மவி கச்சேரியில் உட்கார்ந்திருக்கிற மிருதங்கக்காரர் என்ன செய்கிறார் என்று கூட நின்று பார்க்காத பையன்களே அவருக்கு சிஷ்யர்களாய் வாய்த்தனர்.

வாரத்துக்கு ரெண்டு கிளாஸ். சீதாராமன் வெறும் காலுடன் பெருங்களத்தூரிலிருந்து புறப்பட்டு விடுவார். இத்தனை வருட அனுபவங்களில் அவருக்குத் தன்னைப் பற்றிய விசேஷ கவனம் குறைந்து விட்டது. துவைத்த வேட்டி, பளிச் சென்று ஒரு சட்டை, நெற்றியில் சிறிய விபூதிக்கீற்று. ஒரு வீட்டுக்கு நூறு ரூபாய். நான்கு வீட்டிற்கும் மொத்தம் நாநூறு ரூபாய். கட்டுப்படியாகாத பஸ் கட்டணம். பொதுவில் எங்கும் நடைதான். சைக்கிள் ஒன்று இருந்தது. அதை

# செக்யூரிட்டி

## ம.வே. சிவகுமார்

இப்போது மார்வாடியே ஓட்டிக் கொண்டிருக்கிறான். பழைய பாதையில் மேய்ச்சல் மாடு போல் சேலையூர் வந்தது.

"வாங்கோ."

வரவேற்பறை பாயில் அமரச் செய்து, வீட்டு மாமி வெளியே போகிறாள்.

"டேய் தீபக்... சார் வந்திருக்கார்"

"போல்ட்!"

வெளியே கிரிக்கெட் நடுவே பையன் குரல் தனியே ஒலிக்கிறது. அடுத்த அழைப்பில் பையன் வருகிறான். மொண மொணவென்று வாக்குவாதம் நடக்கிற சப்தம். பேட்டில் பட்ட பந்துபோல் வீட்டு மாமி சலிப்புடன் உள்ளே வருகிறாள்.

"ஸாரி சார். இன்னிக்கு கிளாஸ் வேணாம். தீபக் வரமாட்டேங்கறான். அவனுக்கு இன்னிக்கு மூடு இல்லையாம்."

சீதாராமனுக்கு ஒருகணம் வேகமாய் தெருவுக்குப் போய் அந்தப் பையன் முதுகில் நான்கு சாத்து சாத்தி தரதரவென்று உள்ளே அழைத்து வரத் தோன்றியது.

"பாவம், நீங்க அவ்வளவு தூரம் வந்திருக்கேள்."

"அதனாலென்ன?"

மிருதங்கம் முடிச்சு அவிழாமல் மூலைக்குத் திரும்பியது.

"ஒரு வாய் காப்பி சாப்பிட்டுப் போங்கோ."

"இல்லே... வேணாம்."

அவசரமாய் மறுத்துவிட்டு சீதாராமன் வெளியே வந்தார். கதவோரம் சங்கடமாய் வீட்டு மாமி நின்றாள். சட்டென்று ஒரு மணி நேரத்தை என்ன செய்வதென்று தெரியவில்லை. ஆறு மணிக்கு சானடோரியத்தில் அடுத்த கிளாஸ். அங்கே போன வாரமே ஊருக்குப் போயிருந்தார்கள். வந்து விட்டார்களா என்பது தெரியவில்லை. ஏகலைவன் மாதிரி அவருடைய சிஷ்யர்கள் அவரைப் பார்க்காமலிருக்கக் கற்றுக் கொண்டு விட்டார்கள். ஒவ்வொரு சமயம் சம்பளம் வாங்கும்போதும் சீதாராமனுக்குக் கூசியது. வெறும் காலில் தார் ரோட்டில் சானடோரியம் புறப்பட்டார். பையன்களின் கிரிக்கெட் சப்தம் ரொம்ப தூரத்துக்கு கேட்டுக் கொண்டிருந்தது.

"போதும். நீங்க வாத்தியம் சொல்லி வைச்சது. நான் சொல்றதைக் கேளுங்கோ"

குடும்பத்தின் பொருளாதாரத் தேக்க நிலையில் அதிருப்தி தெரிவித்து சீதாராமன் மனைவி நடப்பு ஆண்டுக்கான புதிய திட்டத்தை வெளியிட்டாள். தெரிந்த இடத்தில் ஒரு விலாசம் கிடைத்தது. வருடம் பூராவும் அங்கே வேலைக்கு ஆட்கள் எடுத்துக் கொண்டேயிருக்கிறார்கள். பெரிய பங்களாக்களில் காவல் நிற்கிற செக்யூரிட்டி வேலை. மாதம் முழுசாய் ஆயிரம் ரூபாய் வரும். ஒரு காக்கிச் சீருடை தயார் செய்து கொள்ள வேண்டும். ஷிப்ட் முறையில் ஒரு நாளைக்கு எட்டே மணி நேர வேலை. பங்களாக்களில் வேலையென்பதால் அநேகம் பெரிய மனிதர்களின் தொடர்பு கிடைக்கும். அப்புறம் நம் சமர்த்து. எல்லாம் வாய் வார்த்தையிலும், நடந்து கொள்கிறதிலும் இருக்கிறது. உலக வாழ்க்கையின் சாராம்சத்தை உட்கார்ந்த இடத்திலேயே உணர்ந்தவள் போல சீதாராமனின் மனைவி அடுக்கலானாள். சீருடை வாங்குவதற்கான முன்னூறு ரூபாயை யாரிடம் கேட்பது என்று சீதாராமன் தீவிரமாய் யோசிக்கலானார்.

சேலையூர் வீட்டு மாமி, கேட்டதுமே பீரோ திறந்து ரூபாயைக் கொடுத்தாள். தீபக் சோபாவில் கையில் காமிக் வைத்தபடி பார்த்துக் கொண்டிருந்தான். பெருங்களத்தூர் டெய்லர் நாலு முழ வேட்டியில் நிற்கிற சீதாராமனுக்கு பேண்ட், சட்டை தைக்க அளவெடுத்தான். வீட்டின் ரசம் பெயர்ந்த கண்ணாடி முன் புதிய காக்கி உடையில் சீதாராமன் அழகு பார்த்தார். விரல் பதிந்த பழைய ஹவாய் சப்பலில் கால் நுழைந்தது. கவாத்து நடையில் செக்யூரிட்டி சீதாராமன் புறப்பட்டபோது

பின்னணியில் ராணுவ இசை பலமாய் ஒலித்தது.

தாம்பரம் பஸ் ஸ்டாண்ட். சீதாராமன் ஜன்னல் ஓர இருக்கையில் அமர்ந்து கொண்டார். வாயில் தெம்பாய் ஒரு பன்னீர் புகையிலை அதக்கிக் கொண்டால் சொர்க்கம் தெரியும். முதல் சம்பளம் வரட்டும். இதுபோல் ஒரு பஸ்ஸில் ஏறி எவ்வளவு வருடங்கள் ஆகி விட்டன? கிராப் தலையின் கண்டு விரல் நீள சிறிய குடுமியை விரல்களில் சுற்றிக் கொண்டே சீதாராமன் யோசிக்கிறார். அவரையறியாமல் வாயில் புறப்பட்ட கர்நாடக இசைக்கு பஸ்ஸில் ஓரிருவர் திரும்பிப் பார்த்தார்கள்.

நந்தனம் சிக்னலில் சீதாராமன் இறங்கிக் கொண்டார். அடையார் போட் கிளப் பங்களாவில் வாட்ச்மேன் வேலை. பளீரென்ற பளிங்குப் படிக்கட்டில் கால் வைக்கவே கூச்சமாய் இருந்தது. கண் மறைவில் அல்சேஷன் கத்தியது. ரொம்ப நேரத்துக்கு யாரும் வெளியே வரவில்லை. அப்புறம் எதேச்சையாய் செக்ரட்டரி வெளியே வந்தார். முதலாளியின் அனைத்து சொந்த வேலைகளையும் அவர் தான் பார்த்துக் கொள்கிறார். சீதாராமன் நீட்டிய கடிதத்தைப் படித்ததும் செக்ரட்டரி அவரை ஏற இறங்கப் பார்த்தார்.

"இதுக்கு முன்னாடி எங்கேயாவது வேலை பண்ணியிருக்கீங்களா?"

"பண்ணியிருக்கேன் சார்"

"எங்கே?"

"ஸ்டாண்டர்ட் மோட்டார்ஸ்லே"

"ஓ"

அநேகம் விஷயங்கள் புரிந்ததுபோல் செக்ரட்டரி ஒரு தரம் தலையை ஆட்டிக் கொண்டார்.

"கரெக்டா இருக்கணும்.!"

"சரி சார்."

"அநாவசியமா வெளிய வம்பு, கிம்பு பேசக் கூடாது."

"சரி சார்"

"பொரிக, டொனேஷன்னு ஆயிரம் பேர் வருவாங்க. விசாரிக்காம யாரையும் உள்ளே விடக் கூடாது."

"சரி சார்."

முடிந்த அளவு விரைப்பாய் ஒரு சல்யூட் வைத்து சீதாராமன் திரும்பினார். டிரைவர்கள், தோட்டக்காரர்கள் என்று பங்களாவில் நிறைய வேலையாட்கள் இருந்தார்கள். அழகிய பெரிய தோட்டம். வெளியே கதவருகே ஸ்டூல் இருந்தது. பச்சை மரங்கள் அடர்ந்த போட் கிளப் சாலையில் ஒருபோதும் நிழலுக்குப் பஞ்சமில்லை. சில்லென்று காற்று வீசியது. மனதிற்கு ரம்மியமான சூழ்நிலை. ஸ்டூலில் சீதாராமன் தவளைபோல் பின்னுக்கு நகர்ந்து கொண்டார். கிடைத்த கையகல இடத்தில் பழகிய கைகள் மிருதங்கம் வாசிக்கத் தொடங்கின. கண்களை மூடிக் கொண்டு பாயும் விரல்களில் தனியே ஒரு ஆவர்த்தனம். காது சப்தத்தை மட்டுமே உணர்கிற தியானத்தில், நேரம் போனதே தெரியவில்லை.

"கீய்ங், கீய்ங்"

எரிச்சலில் வாசிப்பு நின்றது. முதலாளியின் கார் பூனைபோல் புறப்பட்டு வந்து காத்து நின்றது. சீதாராமன் பதறிப் போய் கதவுக்கு ஓடினார். அவசரத்தில் விரல் நசுங்கி கதவைத் திறந்து விட்டார். கண்ணாடி ஏற்றிய முதலாளியின் கார் அவரைக் கடந்து போனது. காலையில் செக்ரட்டரி அவரைக் கூப்பிட்டு அனுப்பினார். சீதாராமன் ஓட்டமாய் ஓடி வந்து சல்யூட் வைத்து நின்றார். வந்த வேகத்தில் விசாரணை தொடங்கியது.



## அடுத்த நூற்றாண்டு ரயில்!

ஜெர்மனியில் டிரான்ஸ்ரேபிட் என்று ஒரு ரயிலை உருவாக்கியுள்ளனர். இது மணிக்கு 500 கி.மீ வேகத்தில் செல்கிறது. டிரைவர் தேவை இல்லை.

இந்த ரயிலை மின்காந்தத்தால் இயக்குகிறார்கள். தண்டவாளத்தின் மேல் பத்து மில்லி மீட்டர் உயரத்தில் ரயில் மிதந்து செல்கிறது. சக்கரங்கள் கிடையாது! அலங்கல், குலுங்கல் கிடையாது. ஒற்றை தண்டவாளத்திலிருந்து விலகி விடாதிருக்கும் வகையில் ரயிலின் அடிவாரம் அமைக்கப்பட்டுள்ளது.

ஜெர்மன் நியூசிலிருந்து :
**சேலம் சக்திக்கொடி**

"பூட்ஸ் இல்லையாய்யா?"

"சார்?"

"கம்பெனியிலே யூனிபார்மோட பூட்ஸ் தரல்லியா?"

"இல்லே சார்."

"அட்வான்ஸ் நூறு ரூபா தர்ரேன். கேன்வாஸ்லே பூட்ஸ் வாங்கிக்கங்க. முதலாளி எங்கிட்ட கத்தறார். இனிமே ஹவாய் செருப் போடெல்லாம் டூட்டிக்கு வரக் கூடாது."

சீதாராமன் எச்சிலை விழுங்கினார். நீட்டப்பட்ட ஒற்றை நோட்டை வாங்கிக் கொண்டார். வவுச்சரில் கோணலாய் கையெழுத்து முளைத்தது. கால்களை சேர்த்து வைத்து பணிவாய் மீண்டும் ஒருமுறை செக்ரட்டரிக்கு சலாம் வைத்தார்.

"இதெல்லாம் வேணாம்யா. டூட்டியிலே மிருதங்கம் வாசிக்காம ஒழுங்கா வேலையைப் பாரு. அது போதும்."



"மருந்துச் சீட்டைத் தமிழ்லே எழுதித் தாணும்கிற அரசாங்க உத்தரவை நினைச்சா பயமாயிருக்கு. கடைக்காரர் எதையாவது மாத்திக் கொடுத்துட்டா என்ன பண்ணுறது?"

"கவலையே படாதீங்க டாக்டர், உங்களோட இங்கிலீஷ் கையெழுத்தைப் புரிஞ்சுக்கிட்டு மருந்தை மாற்றிக் கொடுத்த கடைக்காரருக்கு தமிழ் கையெழுத்து பெரிய பிரச்னையா இருக்காது!"

— கே. பாஸ்கரன்

---

**ஸ்**டூலில் சப்தநாடியும் ஒடுங்கி சீதாராமன் உட்கார்ந்து கொண்டார். பதினைந்து நாட்களாக அப்படித்தான். வாழ்வில் பாதுகாப்பு வேண்டுமென்றால் ஒரு அடிப்படை ஒழுங்கு அவசியம். கிடைத்த வேலை நிலைக்க வேண்டும். சீதாராமன் ப்ரவுன் நிறத்தில் கேன்வாஸ் பூட்ஸ் வாங்கிக் கொண்டார். வேலை செய்கிற இடத்தில் வாய் மூடி இருத்தல் அவசியம். இப்போதெல்லாம் வேலை நேரத்தில் அவர் மிருதங்கம் வாசிக்கிறதில்லை. மாறாக கிராப் தலையின் கண்டு விரல் நீளக் குடுமியில் விரல் சுற்றி விளையாடிக் கொண்டிருந்தார். சதா சர்வ நேரமும் கண்ணாடி ஏற்றிய முதலாளியின் காருக்கு கதவு திறந்து விடத் தயார் நிலையில் இருந்தார். செக்ரட்டரி சொற்படியே தெருவின் மற்ற வாட்ச்மேன்களுடன் அவர் வம்பு பேசுவதில்லை. தவிரவும் அவசியமில்லாதவர்கள் யாரும் அவரை மீறி பங்களாவில் நுழைந்து விட முடியாது. 'ஆரியக் கூத்தாடினாலும் தாண்டவக் கோனே. கொண்ட காரியத்தில் கண் வையடா தாண்டவக் கோனே'. தேவைப் பட்டால் நாய் வேடம் ஏற்கத் தயங்காதே. ஆனால் மறக்காமல் குரைத்து விடு. சீதாராமன் மனைவி இப்போதெல்லாம் எப்போதும் உபதேசிக்கிற வரிகள் அவர் மனதில் ஒருமுறை ஓடியது. அப்புறம் கடவுள் விட்ட வழி. எல்லாம் நல்லபடியாய் நடக்க வேண்டும்.

ததாஸ்து.

**செ**க்ரட்டரி அறையில் டெலிபோன் அடித்தது. கேட்டில் செல்லுலர் போனில் முதலாளி பேசுகிறார். தெருமுனையில் கார் ரிப்பேராகிவிட்டது. அவர் இறங்கி வீட்டுக்கு நடந்து வந்திருக்கிறார். மொத்தம் நான்கு விளக்குக் கம்பங்கள் தூரம். இத்தனை தொலைவு சமீப காலத்தில் அவர் நடந்ததேயில்லை. புஸு புஸு என்று மூச்சு விட்டு வேர்க்க, விறுவிறுக்க கையில் மிகவும் கனக்கிற சூட்கேஸுடன் வந்து கொண்டிருந்த அவரைக் கதவில் அந்த முட்டாள் வாட்ச்மேன் தடுத்து நிறுத்தியிருக்கிறான். விசிட்டிங் கார்ட், செக்ரட்டரி கையெழுத்துப் போட்ட சீட்டு இரண்டில் ஏதாவது ஒன்றைக் கேட்டிருக்கிறான். முதலாளி கொங்கணி பேசுகிறவர். அந்த மடையனுக்கு ஆங்கிலம் புரியவில்லை.

"அறிவு இருக்காய்யா உனக்கு?"

கதவருகே சீதாராமன் வெலவெலத்து நின்றார். செக்ரட்டரி ஓட்டமாய் ஓடிப் போய் கதவு திறக்கிறார். சிவந்த முகத்தில் உறுமிக் கொண்டு இத்தனை நேரம் அவர் ரொம்பவும் சாமார்த்தியமாய் தடுத்து நிறுத்தியிருந்த அந்த கடுகடுத்த மனிதன் கோபமாய் ஒருதடவை முறைத்து உள்ளே போகிறார். அதுவே சீதாராமனை அவர் அங்கே பார்க்கிற கடைசி தடவையாய் இருக்க வேண்டும்.

"அறிவு இருக்காய்யா உனக்கு?"

சந்தேகத்தில் செக்ரட்டரி மீண்டும் கேட்டார். கொஞ்ச நேரம் சீதாராமன் அசையாமல் நின்றார். எச்சில் விழுங்கி தொண்டை எலும்பு ஏறி இறங்கியது. உடைந்த குரலில் செக்யூரிட்டி சீதாராமன் மிகவும் தாழ்மையுடன் விண்ணப்பித்தார்.

"இந்த ஒரு தரம் மன்னிச்சுடுங்க சார். தெரியாமப் பண்ணிட்டேன். முதலாளியோட கார் எப்பவும் கண்ணாடி ஏத்தி வருது. போகுது. உத்தேசமா கும்பிடு வைப்பேன். ஆனா முதலாளியை ஒருதடவைகூட பார்த்ததில்லே. இனிமே தப்பு வராது. தயவு செஞ்சு இந்த ஒருதரம் மன்னிச்சுடுங்க."

"சொர்க்கம், நரகம் எல்லாம் நன்றாக உண்டு" என்று ஆரம்பித்து ஜாபாலி பதில் சொன்னார். "ஆனால் அதெல்லாம் வேறு உலகம் கிடையாது. எல்லாம் இங்கேதான். நல்ல உணவு வேளா வேளைக்குக் கிடைக்கிறது. நன்றாக உடுத்தி, ஆனந்தமாக இருக்கிறார்கள். – அதுதான் சொர்க்கம். உணவுக்குத் திண்டாடிக் கொண்டு, ஏழ்மையை அனுபவித்துத் திண்டாடும் ஸ்திதியில் இருந்தால், அதுவே நரகம். நரகமோ சொர்க்கமோ – இங்கேதானேயொழிய, தனியாக சொர்க்கலோகம் என்றோ நரக லோகம் என்றோ கிடையாது" என்றார்.

"சரி, உன் மதத்தில் மோக்ஷம் என்பது உண்டா...?" – இது அடுத்த கேள்வி.

"ஆஹா! உண்டு."

"எது மோக்ஷம்?"

"செத்துப் போவதுதான் மோக்ஷம்!" என்று ஒரு போடு போட்டார்! ஆத்மாவையே அவர் ஒப்புக் கொள்ளவில்லை!

– இது வேதத்துக்குப் புறம்பான, அதர்மமான விஷயம் அல்லவா!

'இந்த உலகமே தர்மத்துக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. வேதமனைத்தும் தர்மசாரம்! எனவே இப்படி வேதத்துக்குப் புறம்பாக எண்ணுவதே தப்பு' என்பதைத்தான் ராமாயணம் காட்டுகிறது.

சரீரத்திலிருந்து வேறுபட்டுத் தனியானது ஆத்ம வஸ்து என்று வேத வேதாந்தங்கள் எடுத்துப் பேசுகின்றன.

'தத் த்வம் அஸி – ஜீவனாக இருக்கும்படியான நீ, அந்தப் பரப்ரும்மமாய் இருக்கிறாய்' – இது ஆதி சங்கர பகவத் பாதாள் அளித்த விளக்கம்.

இஞ்சிமேட்டு ஸ்ரீமத் அழகிய சிங்கர், த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்ற மூன்று பிரிவுகளையும் சிலாகித்து ஆச்சர்யமாய்ச் சொல்லியிருக்கிறார்.

இரண்டாயிருக்கும்படியான தன்மையைச் சொல்லுவது த்வைதம். ஜீவன் வேறு; பரமாத்மா வேறு என்கிறது.

இரண்டு என்கிற நிலை இல்லாமல் ஒன்றாகவே இருப்பதென்பது அத்வைதம். 'ப்ரப்ரும்மமே நான்' என்று உணரும் நிலை.

க்ஷீரத்திலிருந்து (பாலிலிருந்து) வெண்ணெய் வருகிறது. அதை உருட்டி, திரும்பவும் பாலிலேயே போடுகிறோம். ஆனால் அது பாலில் கலக்குமா...? கலக்கவே கலக்காது! இது வேறு அது வேறு என்று ஸ்பஷ்டமாகத் தெரியவில்லையா? அதோடு இது கலக்காது.

ஆத்ம ஸ்வரூப ஞானம் ஏற்படும்போதும் இதே போல்தான் ஆகிறது. பாலுக்குள் வெண்ணெய் மாதிரி உடலுக்குள் சிக்கியிருந்த ஆத்மா விடுதலையாகி தனி உருக் கொள்கிறது. உடலே அதைத் தாங்கியிருந்தாலும் உடல் பற்றிய சிந்தனை போய்விடுகிறது. ஆத்மாவை தியானம் செய்யும் போது, அந்த ஆத்மாதான் பரமாத்மா என்கிற நிலை ஏற்படுகிறது. ஸ்வயம்பிரகாசமாய் பிரகாசிக்கக்கூடிய



நிலை அது.

எதிரே பாம்பு நெளிவது போல வளைவு வளைவாகத் தெரிகிறது... ஐயோ! என்று அலறினான் ஒருவன். ஆனால் அது ஆடாது, அசங்காது இருப்பதைக் கண்டு பாம்பு இல்லை என்று முடிவு செய்தான். பின்னே என்ன வாயிருக்கும்...?

'யாரோ குடத்தில் ஜலம் எடுத்துப் போக, அந்தக் குடத்தில் ஓட்டை இருந்திருக்கிறது. ஓட்டை வழியே சிந்திய நீர் குடமேந்தியவரின் நடைக்கு ஏற்ப வளைவு வளைவாக சிந்தியிருக்கிறது போலும், என்று எண்ணம் வருகிறது.

'ஆனால் சூர்ய ரச்மி பட்டு இந்த ஜலம் உலர்ந்து போகவில்லை.... சரிதான்! பூமி அந்த இடத்தில் பிளவுபட்டிருக்கிறது போலும்... அதனால்தான் இப்படித் தெரிகிறது!' என்று மீண்டும் வேறு மாதிரி எண்ணம் வருகிறது.

இப்படி நினைத்துக் கொண்டே இருக்கும் போது அந்தப் பக்கமாய் வந்த ஒருவர் அந்தப் 'பாம்பு' வடிவத்தை மிதித்தபடி வந்தார்.

அவரிடம் கேட்கப் போக, உண்மை வெளிப்பட்டது – பாம்பும் அல்ல; நீர்க்கோடும் அல்ல; பூமியில் பிளவும் அல்ல.... வைக்கோலால் திரிக்கப்பட்ட ஒரு கயிறு அது!

வைக்கோல் திரி என்று தெரிந்ததும் நாம் முதலில் எண்ணியதெல்லாம் போய் விடுகிறதல்லவா...? அந்த மாதிரிதான் உண்மைப் பொருளைப் பார்த்த பிறகு மற்றதெல்லாம் மறைந்து போகும். – இது அத்வைத நோக்கு.

விசிஷ்டாத்வைதம்...? புறப்பொருள் எல்லாமே அவன் சரீரமாய்த்தான் இருக்கிறது என்பது விசிஷ்டாத்வைதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆக, எந்த தத்துவார்த்த நிலையை எடுத்துக் கொண்டாலும் ஆத்மா என்ற ஒன்று இருப்பதை அது மறுக்கவில்லை; ஏற்கவே செய்கிறது.

ஒன்று பேதமாகச் சொல்கிறது; இன்னொன்று அபேதமாகச் சொல்கிறது; மூன்றாவதோ எல்லாவற்றுக்குள்ளும் இருக்கிற அந்தராத்மாவைச் சொல்கிறது.

பேத, அபேத ச்ருதிகள் தனித்தனியாய் இருப்பது நம் மனத்தைக் குழப்புகிறது. ஆனால் ஆசார்யர்களுக்கு உண்மை புலப்பட்டது. அதனால் மூன்று ரீதியான தத்துவங்கள் தோன்றி நின்றன. மூன்றுமே சரீரத்திலிருந்து வேறுபட்டது ஆத்ம வஸ்து என்பதை ஏற்கின்றன.

'அகம்' என்றால் ஆத்மா. 'நான்' என்றால் எனது ஆத்மா; சரீரம் அல்ல.... இந்த எண்ணம் நமக்கு வரவேண்டும். தெளிவாகத் தெரியவேண்டும்.

பேச்சு வழக்கில் நாம் என்ன சொல்கிறோம்...?



## அருள்வாக்கு

இந்த யுகத்திலே முக்யமாக என்ன பெரிய அபாயம் என்றால், அபாயமான வஸ்து அப்படி கண்ணுக்குத் தெரியாமல் அதுவே ரொம்ப நல்லது மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து மயக்கி விடுவதுதான். அபாயத்தை அபாயமானது என்று தெரிந்து கொள்ள முடிந்தால்தானே அதிலிருந்து நம்மை ஜாக்ரதை செய்து கொள்ளலாம்? தீர்களாக இருந்தால் அதோடு சண்டையும் போட்டு அதை அடக்கி வைக்கலாம்? பூர்வ யுகங்களில் அபாய ஹேதுவாக அஸுரர்கள் தோன்றியபோது, அவர்களுடைய க்ரூரமான ரூபம், வெளிப்படையாகவே அவர்கள் க்ரூரமாகச் செய்த கார்யங்களெல்லாம் ஜனங்களுக்குத் தெரிந்தபோது, அவர்கள் ஒதுங்கிப் போகப் பார்த்தார்கள். அப்படியும் இவர்கள் மேலே வந்து விழுந்து பிடுங்கினபோது 'நம்மால் இவர்களோடு சண்டை போட முடியாது' என்று பகவானிடம் ப்ரார்த்தித்துக் கொண்டார்கள். பகவானும் அவதாரங்கள் எடுத்து அவர்களை ஸம்ஹரித்தார். முள்ளு குத்தினால் அதைப் பிடுங்கிப் போட்டவுடன் எல்லாம் ஸரியாய் விடுவது போல. அப்புறம் ஜன ஸமூஹம் (தேவ ஸமூஹத்தையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்) நல்லபடியாகி, பழையபடி நல்ல வழியிலேயே போய்க் கொண்டிருந்தது. க்ருஷ்ணாவதாரத்திலும் கம்ஸன், சிசுபாலன், ஜராஸந்தன், துர்யோதனன் முதலானவர்களை தர்மத்திற்கு அபாயம் உண்டாக்கும் துஷ்டர்கள் என்று இனம் பிரித்துக் கண்டுகொள்ள முடிந்தது.

கலியிலே தனியாக இப்படி அஸுரக் கூட்டம், ராக்ஷஸ ஜாதி என்று இல்லை, மநுஷ்ய ஜாதிக்கு வெளியிலே அப்படியில்லை. அப்படியென்றால்... புரிகிறதோல்லியோ? மநுஷ்யர்களின் மூளைகளுக்குள்ளேயேதான் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் புகுந்து கொண்டு விட்டார்கள்! இந்த யுகத்தில் அதர்ம சக்தி வெளியிலே பௌதிகமாக இருந்து கொண்டு ஜனங்களைத் தாக்காமல் ஜனங்களுக்குள்ளேயே, அவர்களுடைய புத்திக்குள்ளேயே கெட்ட சித்த வ்ருத்திகளாகப் புகுந்துகொண்டு விட்டது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

''எனக்கு அது ரொம்பப் பிடிக்கும்...'' சரீரமே ஆத்மாவாய் இருந்தால் 'நான் அது ரொம்பப் பிடிக்கும்'; 'நான் தலைவலிக்கிறது'; 'நான் கை குடைகிறது;' 'நான் மூக்கு ரொம்ப வலிக்கிறது'.... என்றெல்லாம்தானே சொல்ல வேண்டும்!

அப்படிச் சொல்வதில்லையே நாம்! 'எனக்குத் தலை வலிக்கிறது, 'எனக்குக் கை குடைகிறது' என்று சரீரத்துக்குள் இருக்கும் நிலையைச் சுட்டியே சொல்கிறோம். இப்படி சரீரத்தில் அபிமானம் வைத்து நாம் பேசும்போதே என்ன தெரிகிறது? சரீரத்திலிருந்து வேறுபட்டதான ஆத்மா ஒன்று இருக்கிறது என்று தெரிகிறதல்லவா!

'நாம்' என்பது சரீரமல்ல; ஆத்மா. நாராயணனையே அடைய வேண்டும். அவன் திருவடியையே அடைய வேண்டும். அவன் கைங்கர்யத்துக்காக – நித்ய கைங்கர்யத்துக்காக அவன் திருவடியே சேர வேண்டும் என்பதை உத்தேசித்துத்தான் – இத்தனையும் சொல்லப்படுகிறது.

அப்படியிருக்க, அந்தத் தத்துவம் வேதாந்தங்களை விட்டு விட்டு, நன்றாகச் சாப்பிடு, நெய் யைக் குத்திக்கொள், கடனை வாங்கு என்றெல் லாம் சொன்னால் எவ்வளவு தப்பான வார்த்தை!



ரு மனிதனின் உண்மை யான தன்மையை அறிய வேண்டுமானால் அவனுக்கு அதிகாரத்தைக் கொடுத்துப் பாருங்கள்.

**— இங்கர்சால்**

**தகவல் : எஸ். விஜயா சீனிவாசன்**

இந்த மாதிரி அதர்மமான விஷயத்துக்கு ராமாயணத்திலே இடமில்லை.

தர்மத்தைப் பேசினான் பரமாத்மா. பரதனுடைய கடமையை உணர்த்தினான்.

பாரதந்த்ரியம் – 'நீ அப்படிப் போய் இரு' என்று சொன்னால் எதிர் கேள்வி கேட்காமல் செய்ய வேண்டும்.

பகவான் சொன்னான். அவன் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு பரதனும் நடந்தான். அது தான் பாரதந்த்ரியம். சொன்னபடி நடக்கும் தர்மம்.

'பாரதந்த்ரிய காஷ்டா' என்று ஒரு தர்மம். அந்த பகவத் பக்தனான பரதனுடைய திருவடியிலே அசஞ்சலமான பக்தி கொண்டு நின்றானே சத்ருக்னன்... அந்த நிலை 'பாரதந்த்ரிய காஷ்டா'.

ராமாயணத்திலே எங்கேயாவது ஒரு சுலோகமாவது சத்ருக்னனுக்கு உண்டா என்று கேட்டால் எங்கேயும் கிடையாது. பரதனோடேயே போனான்; பரதனுடனேயே வந்தான். அங்கங்கே அரை சுலோகம் அல்லது முக்கால் சுலோகம்தான் சத்ருக்னனுக்கு!

இதிலேயிருந்து ஒரு தர்ம சூக்ஷமத்தை நாம் கிரஹித்துக் கொள்ள வேண்டும். கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம், சரணாகதி – இந்த நான்கையும் கீதையிலே பகவான் ரொம்ப அழகாக விவரிக்கிறான். இதிலே பாருங்கள். என்ன விவரித்தானோ அதை ராமாயணத்திலேயும் காட்டியவன் அவன்.

ராமாவதாரத்திலே லக்ஷ்மணன் மூலமாக கர்ம யோகத்தைக் காட்டினான். பரதன் மூலமாக பக்தி யோகத்தைக் காட்டினான். இதைத்தான் சுவாமிதேசிகன் பக்திக்கே பரம உதாரணமாக பாதுகா சஹஸ்ரத்தில் சொல்கிறார். பக்திக்கு முதல் உதாரணம் பரதன் என்கிறார்.

ஞான யோகத்தைக் காட்டியவன் சத்ருக்னன். சரணாகதிக்கு விளக்கமானவன் விபீஷணன்.

ஞான யோகம் பண்ணுகிறவர்கள் உலகிலே அதிகப் பிரசித்தமாக ஆகக்கூடாது. அப்படி ஒருத்தர் இருக்கிறார் என்பதே வெளியே தெரியக் கூடாது. எல்லாவற்றிலும் பிரசித்தமாக இருக்கக்கூடியவர்களை ஞானயோகி என்று சொல்ல முடியாது. ஞான யோகம் பண்ணக் கூடியவனானதாலேதான் சத்ருக்னன் பிரசித்தமாகவில்லை.

ஞான யோகிகள் முக்கியமாய் லவணஜயம் பெற வேண்டும் – அதாவது உப்பை ஜெயிக்க வேண்டும்! – உப்பில்லாமல் சாப்பிட வேண்டும் அவர்கள். அதனால்தான் லவணாசுரன் என்கிற அசுரனை ஜெயிக்க பரதன் கிளம்பிய போது, அவனை நிறுத்திவிட்டு சத்ருக்னனை அனுப்பினான் பரமாத்மா. சத்ருக்னனும் போய் லவணஜெயம் கொண்டான். – இப்படி தர்ம சூக்ஷமமாக ராமாயணத்தில் எவ்வளவோ அடங்கியிருக்கிறது.

'பாரதந்த்ரிய காஷ்டா' என்ற தர்மம் – சத்ருக்னன் அனுஷ்டித்த தர்மம். ரொம்பவும் கஷ்டமானது. பரதனுடைய நிழல்போலிருந்து கைங்கர்யம் செய்தான் சத்ருக்னன். பரதன் கேகய நாட்டுக்குப் போக நான் பார்த்துச் சொன்னார்களாம் – அவனுடன் சத்ருக்னனும் போனான். அவனும் சக்ரவர்த்தித் திருமகன்தானே... ஆனால் அவனுக்கென நாளெதுவும் பார்க்கப்படவில்லை!

சத்ருக்னன்...! சத்ரு யாரென்றால், நம் இந்த்ரியங்கள்தான் சத்ரு. அந்த சத்ருவை அடக்கியவன் அவன். பரதன் பின் போவதையே பரம புருஷார்த்தமாக நினைத்த மகான் அவன். ஆகையினால் சத்ருக்னாழ்வார் என்றே அவனுக்குப் பெயர்.

(தொடரும்)

'**யா**ர் உங்களது காலேஜ் ஸ்டார்?' என்று கேட்ட பத்து நிமிடத்துக்குள் தம் அறையில் பல்வேறு துறைத் தலைவர்களின் குட்டி மாநாடு ஒன்றையே கூட்டி விட்டார், சென்னை மாநிலக் கல்லூரியின் முதல்வர் டாக்டர் பி. அப்துல் ரசாக்.

எல்லோரும் ஒருமனதாகச் சொன்ன பெயர் கிருஷ்ணன் குட்டி. தமிழ் இலக்கியத்தைப் பிரதான பாடமாக எடுத்துப் படிக்கும் பி.ஏ. இரண்டாம் ஆண்டு மாணவர்.

கிருஷ்ணன் குட்டி? தமிழ்? சந்தேகம் சரியே. மலையாளம் தாய்மொழி. படிப்பதோ தமிழ் இலக்கியம்.

எப்படி வந்தது இந்த ஆர்வம்?

"வெப்பேரி புனித பவுல் பள்ளியில் பன்னிரண்டாம் வகுப்பு படிக்கும்போது திடீரென ஒரு பேச்சுப் போட்டியில் என்னை பங்கெடுத்துக் கொள்ளச் சொன்னார்கள். 'அணுக்கதிர் வீச்சும் அறிவியல் சமுதாய நோக்கும்' என்ற தலைப்பில் நான் பேசிய கன்னிப் பேச்சுக்கு அன்று மாநில அளவில் இரண்டாவது பரிசு கிடைத்தது. அதுதான் ஆரம்பம். பின்னர் தமிழ் என் உணர்வோடு கலந்து விட்டது."

பள்ளிக்கூடத்தில் சரி. பின்னர் தமிழையே பிரதானமாக எடுத்து, பட்டப்படிப்பு என்றால் வீட்டில் ஒப்புக் கொண்டார்களா?

"வேண்டாம். கணக்கு எடுத்துப் படி என்றுதான் வற்புறுத்தினார்கள். நான் அழுது அடம் பிடித்து தமிழில் சேர்ந்தேன்!"

கிருஷ்ணன் குட்டி பேசும் போதே தூய தமிழில்தான் பேசுகிறார். வார்த்தைகள் சரளமாக வருகின்றன. மாநிலக் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் மின்னூர் சீனிவாசன், "இவன் எங்கள் பெருமை மிகு மாணவன்" என்கிறார்.

இந்த மாணவருக்கு பரதநாட்டியமும் தெரியும்.

"**கே**ரளாவில் பழையனூர் எங்கள் ஊர். அங்கே கோவிலில் தினமும் நாட்டியம் சொல்லிக் கொடுப்பார்கள். தூர இருந்து பார்த்துப் பார்த்து நானே பழகினேன். முறைப்படி கற்கவில்லை. எனினும் ஆடுவேன்."

காவடி ஆட்டம் தெரியும்.



• தோழர்கள் மத்தியில்



• மின்னூர் சீனிவாசன்

கட்டுரை எழுதவும் தெரியும்.

என்.எஸ்.எஸ். (நாட்டு நலப்பணித் திட்டம்) எல்லாக் கல்லூரிகளிலும் உண்டு. ஆனால் கிருஷ்ணன் குட்டியைப் போல் அதைத் தீவிரமாய் எடுத்துக் கொண்டவர்கள் எவ்வளவு பேர் இருப்பார்கள்?

"பள்ளிக்கூடத்துக்குப் பிள்ளைகளை அனுப்பாத பெற்றோர்களைச் சந்தித்து அவர்களிடம் மனமாற்றத்தை ஏற்படுத்துவதே என் விருப்பம். ஆர்வமுடன் நான் என்னை இதில் ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

தமிழ் மீது கொண்ட காதலால் தாய்மொழி மலையாளத்தில்கூட பெரிய புலமை பெற வேண்டும் என்று முயற்சிகளை மேற்கொள்ளாமல் தமிழ்,

தமிழ் என்றே சுவாசிக்கிறார் இந்த வித்தியாசமான கேரள மாணவர்.

நடிகர்களில் மோகன்லாலின் விசிறி. "அவர் மலையாளி என்பதற்காக அல்ல. பல வித்தியாசமான கதாபாத்திரங்களைச் சிறப்பாக நடித்துக் காட்டியவர் என்பதால்."

காதல், கலப்புத் திருமணம் என்றால் ஆதரவு தர கிருஷ்ணன் குட்டி தயார். அவர் திருமணமும் அப்படித்தான் இருக்குமா?

"இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன்."

பீட் சாம்பிராஸ், ஸ்டெபி கிராப் ஆகியோரின் டென்னிஸ், வைரமுத்துவின் தமிழ் - கிருஷ்ணன் குட்டிக்குப் பிடிக்கும்.

"நீங்கள் படித்தவற்றில் பிடித்தது எது கிருஷ்ணன் குட்டி?"

"மு.வ.வின் அகல்விளக்கு. அதை அலுப்பில்லாமல் திரும்பத் திரும்பப் படிக்கிறேன். மனம் கனமாக இருக்கும்போது அகல் விளக்கை எடுத்தால் லேசாகிப் போகிறது. நான் இந்த உணர்வை

# பெயர்தான் குட்டி; பெருமையோ பெரிசு!

அனுபவிக்கிறேன்."

இவர் ஆசிரியர் வேலையை நேசிக்கிறார். "நான் சொல்வதை மாணவர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற அக்கறையுடன்

●●●

**கிருஷ்ணன் குட்டி பேசும்போதே தூய தமிழில்தான் பேசுகிறார். 'சங்க இலக்கியத்தில் பொருட் பெண்டிர்' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்யப் போகிறார்.**

●●●

ஆசிரியர்கள் செயல்பட வேண்டியிருக்கிறது. அதனாலேயே அந்தத் தொழில் பிடிக்கும்" என்கிறார்.

எதிர்கால லட்சியம் என்று, ஒன்றை மட்டுமே இப்போதைக்கு இவர் குறிப்பிடுகிறார்.

"பிஎச்.டி தேறி, டாக்டர் பட்டம் பெற வேண்டும்."

இவர் ஆராய்ச்சி செய்யத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கும் தலைப்பு என்ன தெரியுமா?

சங்க இலக்கியத்தில் பொருட் பெண்டிர்!

• கிருஷ்ணன் குட்டி

சந்திப்பு : **ராணிமைந்தன்**
படங்கள்: **யோகா**

# பொறுப்பு

சுதாகர் சாலை விபத்தில் இறந்த செய்தியை அவன் மனைவியிடம் உடனே சொல்லி, அவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்து வர வேண்டிய பொறுப்பு என் தலையில் விழுந்தது.

ஆபீசில் ரமணன், செங்குட்டுவன், ப்ரெட்ரிக், முத்துசாமி அனைவரும் இந்தப் பொறுப்பை ஏற்கவோ, அட துணையாக என்னுடன் வரக் கூட மறுத்து விட்டார்கள்!

"இதெல்லாம் வெல்ஃபேர் டிப்பார்ட்மெண்ட் வேலை. நீ ஏன் இதில போய் மாட்டிக் கொள்கிறாய்? அந்தம்மா மயக்கம் போட்டு விழுந்துட்டா யார் பொறுப்பு?"

"இல்லைப்பா, சுதாகரின் ஒரே நண்பன் என்கிற தகுதியில் என்னை போகச் சொன்னார் ஜி.எம்."

"நண்பனா? சுதாகருக்கா? நீயா?"

"இவன்தாண்டா அந்த சிடுமூஞ்சிகிட்ட ஒண்ணு ரெண்டு வார்த்தையாவது பேசியிருக்கான்."

உண்மைதான். சுதாகர் ஆபீசில் மற்றவரிடம் வலிந்து எதும் பேச மாட்டான். எட்டு கேள்விக்கு ஒரு பதில் சொல்லிவிட்டு தன் வேலையில் ஈடுபடுவான். எப்போதும் அவன் முகத்தில் ஒரு விரோதம் இருக்கும். அவன் அந்தரங்க எண்ணங்களின் உலகில் குறுக்கிடுவது போல. கிட்டே பழக எப்படிப்பட்டவன், அவனுக்கு ஏதாவது தனிப்பட்ட பொழுது போக்கு உண்டா, புத்தகம் படிப்பானா, மோர்சிங் வாசிப்பானா எதுவும் 'ஆபீஸ் நண்பன்' என்று சொல்லப்படும் எனக்குக் கூடத் தெரிவதற்குள் இறந்து போய் விட்டான்.

சிலநாள் டெஸ்க்குக்கு வந்து ஆபீஸ் அல்லாத விஷயங்கள் பேசியிருக்கிறான்.

என்ன பேசினோம் என்று நினைவு கூற முயற்சித்தேன். ம்ஹூம்! அடடா, இப்படி அல்பாயுசாக செத்துப் போகப் போகிறான் என்று தெரிந்திருந்தால் அவன் பேச்சை கவனித்திருக்கலாமே என்று தோன்றியது.

கணவன் இறந்த செய்தியை மனைவியிடம் அஞ்சல் செய்யும் பொறுப்பு வாழ்வில் மிக மிக அரிய சங்கடம். அதைச் சமாளிக்க எனக்கு அனுபவம் இல்லை.

மேலதிகாரி அனந்தாச்சாரி சொன்னார் : "மெல்ல சொல்லு. அவங்க மனைவி ஒர்ர்ஜ" வேட்னு பர்சனல் ரிக்கார்ட்ஸ்லருந்து தெரியுது. அப்ளிகேஷன் போட்டா நம்ம ஆபீஸ்லயே ஒரு வருஷத்துக்குள்ள

வேலை கெடைக்கும்னு சொல்லு. இராச்கட்டி, ப்ராவிடெண்ட் ஃபண்டு எல்லா பணத்தையும் ஒண்ணாம் தேதி கொடுத்து விடுவோம்னு சொல்லு."

**சு**தாகர் எங்கள் ஆபீசில் செலக்ஷன் க்ரேடு அட்மின் அசிஸ்டண்டாக இருக்கிறான் - மன்னிக்கவும் - இருந்தான். அடுத்த ப்ரமோஷனில் ஆபீசராகும் தகுதி பெற்றிருப்பான். வயது சுமார் முப்பத்தைந்து. இவ்வளவுதான் தெரியும். அவனை நான் ஆபீசுக்கு வெளியே இரண்டு முறை சந்தித்திருக்கிறேன். கல்யாணம் ஆனபோது, தீபாவளியில் நாங்கள் பிக்னிக் போனபோது. ஒரு ஓரத்தில், அலுமினிய நாற்காலி போட்டுக் கொண்டு காலை வேகமாக ஆட்டிக் கொண்டு, சுதாகர் புத்தகம் படித்துக் கொண்டிருக்க, இந்தப் பெண் அவனுக்கு எலுமிச்சை ரசம் கொடுத்தது ஞாபகம் இருக்கிறது. இறந்து போனவனைப் பற்றி சிறப்பாக நினைத்துப் பார்க்க எலுமிச்சை ரசம் போதுமா? அவன் பெயர் கூட ஞாபகமில்லை. அனந்தாச்சாரி கலபமாகச் சொல்லி விட்டார். ஆனால் துக்கச் செய்தி. சொல்வது எப்படி என்று யாரும் புத்தகம் எழுதியிருப்பதாகத் தெரியவில்லை. அந்த அதிர்ச்சியான செய்தியை எப்படி அவளிடம் சொல்வது?

## சுஜாதா

ப்ரெட்ரிக் சொன்னது போல் மயக்கம் போட்டு விழுந்து விட்டால்? அவளை கைத்தாங்கலாக ஏந்திக் கொள்வது ரசாபாசமாக இருக்குமே?

போன் பேசி முதலில் தெரிவித்து விடலாம் என்று நினைத்தேன். நேரில் சொல்வதுதான் முறை. உடனே மருத்துவ உதவி தேவையாக இருந்தால் ஆபீஸ் காரிலேயே அழைத்துச் செல்லலாம்.

**தே**னாம்பேட்டை சிக்னல் வழக்கம் போல வேலை செய்யாமல் வண்டிகள் குழப்பமாக கடந்து கொண்டிருக்க, முழுவதும் அடைத்திருந்தது. போலீஸ்காரர் எதிர் கடை நிழலில் இளைப்பாறிக் கொண்டிருந்தார். எல்லாம் ஒரே சமயத்தில் கடக்க முயற்சித்ததாலும் கிடைத்த சந்திலெல்லாம் இரு சக்கரிகள் மூக்கை நீட்டியதாலும் ஏற்பட்ட குழப்பம் நீங்க பத்து நிமிஷமாவது






— ஆர். ஆர். தமன்

ஆகும் போல இருந்தது. யோசித்தேன். செத்துப் போய்விட்ட செய்தியை அவளிடம் இப்போது சொல்ல வேண்டாம் என்று தீர்மானித்தேன்.

முதலில் அவள் அப்பா அம்மா எங்கிருக்கிறார்கள் என்று என்று கண்டுபிடித்து தந்தி கொடுத்து வரவழைத்துவிட்டு அவர்கள் முன்னிலையில் மரணச் செய்தியை சொல்லலாம் என்று தீர்மானித்தேன்.

அதுவரை?

'சுதாகரை ஆசுபத்திரியில் சேர்த்திருக்கிறோம்; கவலைப்படும்படியாக எதுவும் இல்லை; உங்களுக்கு தைரியம் சொல்லவே ஆபீசில் என்னை அனுப்பியிருக்கிறார்கள். துணைக்கு யாரும் இல்லையென்றால் எதற்கும் உங்கள் அப்பா அம்மாவை வரவழைப்பது நல்லது. அவன் ஆஸ்பத்திரியிலிருந்து வரக் கொஞ்ச நாளாகும்...' இப்படி சமாளிக்கலாம் என்று தோன்றியது.

சுதாகரின் வீடு பாலாஜி நகரில் ஒரு ராட்சச வளாகத்தில் இருந்தது. முன்னேற்கவே இருந்த ஃப்ளாட். வாசலில் கோலம் ஒட்ட வைத்திருந்தது. 'வெல்கம்' என்று மணிக்கூழாய்கள் வரவேற்றன. ஆர். சுதாகர் இன்-அவுட் என்று பழைய பாணி பலகையைப் பார்த்ததும் 'திக்'கென்றது.

கதவு திறந்தவள் கல்யாணத்திலும் பிக்னிக்கிலும் பார்த்ததிலிருந்து இரட்டிப்பு வேகத்தில் வயசு கூடியிருந்தாள். புறக்கணித்த நரைக்கீற்று, கலைந்த கூந்தல். புடைவைத் தலைப்பால் கன்னத்தை ஒத்திக் கொண்டு, "அவர் இல்லையே நீங்க யாரு?"

"எம்பேரு ரங்கநாதன்மா! சுதாகரோட கலீக்"

"அவர் ஆபீஸ்தானே போயிருக்கார்?"

"தெரியும்! மிஸஸ் சுதாகர், உக்காந்துக்கங்க. ஒரு சின்ன அதிர்ச்சி தரக்கூடிய சேதி. பயப்படாதீங்க. உக்காருங்க முதல்ல" எதற்கு உட்காரச் சொல்கிறேன்!

"அவருக்கு ஏதாவது ஆய்டுத்தா?"

"ஒரு சாலை விபத்தில் அடிபட்டு ஆஸ்பத்திரில சேர்த்திருக்கோம். பயப்படாதீங்க. உங்ககிட்ட சொல்லிட்டு வரச் சொன்னார்."

"அவருக்கு ஒண்ணும் இல்லையே? பெரிசா அடி கிடி எதும் இல்லையே."

"இ.... இல்லைதான்."

"கண்ணாடி மாத்திக்கங்கோன்னு எத்தனை தடவை சொல்லியாச்சு? கேட்டாதானே? எல்லாத்லயும் பிடிவாதம்! அதும் மனைவி சொல்லிட்டா கேக்கவே கூடாதுன்னு வைராக்கியம். உக்காருங்க. காப்பி சாப்பிடறீங்களா?"

"இல்லைம்மா! நான் உங்ககிட்ட சேதி சொல்லிட்டு உங்க ஒத்தாசைக்கு யாரும் இருக்காங்களான்னு பாத்துட்டு ஆபீசுக்கு போகணும்."

"ரொம்ப தாங்க்ஸ். எந்த ஆஸ்பத்திரி?"

"ராயபேட்டா."

"இப்ப உள்ள விடுவாளோ, போய்ப் பார்க்கலாமோ?"

எப்படிச் சொல்வேன்? "பார்வையாளர் நேரம்னு சாயங்காலம் அஞ்சு மணிக்கு. நானே வந்து அழைச்சுண்டு போறேன். அதுக்குள்ள தெரிஞ்சவா யாரையாவது..."

"பெரிசா அடிகிடி இல்லைதானே."

"இல்லை" என்றேன். எனக்கு கழுத்துப் பக்கம் வியர்த்தது.

"ப்ராக்சரா?"

"தெரியலை. நானே போய் இன்னும் டாக்டர்கிட்ட பேசலை." (பேசியாகி விட்டது. 'இந்தாளு அங்கேயே காலமாய்ட்டாருங்க. ஒரே ஒரு நல்ல விஷயம், அதிகம் ஸஃபர் பண்ணாம போய்ட்டார்') ஒரு பொய்யில் ஆரம்பித்து எத்தனை பொய்! டாக்டர் சரியாய்டும்னு சொன்னாராம். "உங்க அப்பா அம்மா எங்க இருக்காங்க மிஸஸ் சுதாகர்?"

"ஹைதராபாத்தில. ஏன்?"

"இல்லை. நீங்க தனியா இருக்கறதால உங்களுக்குத் துணையா அவங்களை போன் பண்ணி வரவழைக்கலாமேன்னு."

"அவா இதுக்கெல்லாம் வரமாட்டா."

"ஏன்?"

"சண்டை போட்டுட்டார்."

"........"

"ஒரு ஸ்கூட்டர் விஷயத்தில், அதெல்லாம் எதுக்கு? பகைச்சுண்டாச்சு. அவரால நானும் பகைச்சுண்டாச்சு. பிறந்தகத்தோட எல்லா உறவுகளையும் துண்டிச்சாச்சு. திரும்பிக் கூட பார்க்க மாட்டேன்னுட்டா."

"அப்படியா. சென்னைல இவருடைய உறவுக்காரங்க யாரும் இல்லையா?"

"இருக்காங்க. நாத்தனார் அடையார்ல இருக்கா. ஒரு அண்ணா அசோக்நகர்ல."

"அவங்களை கூட்டு வெச்சுக்கலாமே."

"எதுக்கு?"

"சும்மா ஒரு... ஒரு ஒத்தாசைக்குத்தான்."

"அப்படி ஒண்ணும் சொல்லிக் கொள்ளும் படியா இல்லை உறவு."

"அப்ப உங்களுக்கு ஒத்தாசைக்கு?"

"ஒத்தாசைன்னா நண்பர்கள்தான். இந்த பில்டிங்கில மொத்தம் இருபத்து நாலு ப்ளாட்டு. அதில் இருபதாம் நம்பர் கூட மட்டும்தான் கல்யாணம் கார்த்தின்னா கொஞ்சம் போக்குவரத்து. மற்றவாளோட இவருக்கு எதாவது ஒரு காரணத்தில சண்டை. ஸ்கூட்டரை நிறுத்தறதில சண்டை, பசங்க பந்து அடிக்கிறதில சண்டை. குப்பை போடறதில் சண்டை. தன்னைத் தவிர உலகமே மோசம் இவருக்கு. இப்ப கூட இவர் ஆக்சிடெண்ட் ஆயிருக்கோல்லியோ. போலீஸ்காரன் தப்பு; சரியா சிக்னல் காட்டலை. சைக்கிள்காரன், ஏன் எம்மேல கூட தப்பு சொன்னாலும் ஆச்சரியமில்லை. கார்த்தாலை சண்டை போட்டார். அதையே நினைச்சுண்டு போனேன்னு... இப்படித்தான் சொல்வாரே தவிர தான் சரியா ஓட்டலைன்னு ஒப்புக்கவே மாட்டார். நல்லவேளை, நான் பின்னால இல்லை. கொஞ்ச நாள் அடிபட்டு ஆஸ்பத்திரில இருந்தாலாவது புத்தி வராதா பார்க்கலாம். ஒரு நிமிஷம் இருங்க" என்று உள்ளே சென்றாள்.

"காப்பியெல்லாம் வேணாம்மா."

"சே சே! அவர் கோவிச்சுப்பாரே ஏன் காப்பி கொடுக்கலைன்னு."

**கோவிச்சுக்க மாட்டார்.**

திரையை மறுபடி திறந்து "இதில வேடிக்கை என்னன்னா காப்பி கொடுத்தாலும் சில வேளைல கோவிச்சுப்பார்."

அய்யோ தலையெழுத்து! எத்தனை மணி நேரம் இந்தப் பொய்யை நடத்த வேண்டி வரும்?

ஹாலில் மாட்டியிருந்த காலண்டர்களைப் பார்த்தேன். டீவி. மேல். சுவரில் எல்லாப் போட்டோக்களிலும் சுதாகரே இருந்தான். குளிர் பெட்டி மேல் சின்ன தொட்டியில் மீன்கள் சலனித்துக் கொண்டிருந்தன. அலமாரியில் கேஸ் கட்டுகள் அடுக்கியிருந்தன. மூலையில் ஒரு ஹாக்கி மட்டை இருந்தது. ஸ்கூட்டரின் டூல் பேக் அலமாரியில், கடிதங்களின் அருகில் இருந்தது. அவன் ஸ்கூட்டர் இன்னும் அங்கேயே கிடக்குமா இல்லை இழுத்துப் போட்டிருப்பார்களா? சாலையில் தெரிந்த ரத்தக் கறையை மனத்தில் அழித்துக் கொண்டேன். அவள் கோப்பையில் காப்பி கொண்டு வந்து முக்காலியை நகர்த்தி அதன் மேல் வைத்து, "டீவி போடலாம்னா அது ரிப்பேர். அதுக்குக் கூட நான்தான் காரணம். வெச்சு திருகிட்டேனாம். நிம்மதியா இருக்குன்னு பதினஞ்சு நாளா ரிப்பேருக்குக் கொடுக்காம வச்சிருக்கார்."

"உங்க கணவர் பக்கம் உறவுக்காரங்க மெட்ராஸ்லதான் இருக்காங்க இல்லை?"

"ஆமா ஒரு அக்கா ஒரு அண்ணா இருக்கா."

"அவங்கள்ல யாரையாவது உங்களுக்குத் துணையா வரச் சொல்லிடுங்களேன்."

"ரெண்டு பேரோடயும் சண்டைன்னு சொன்னனே."

"அப்படியா?"

"அண்ணா ஸ்வீகாரம் போய்ட்டார். அவருக்கு சொத்து பிரிக்கிறதில... என்ன பெரிய சொத்து. ஒரு ஓட்டை வீடு... அதுக்கு கோர்ட்டுக்கு, நடையா நடந்தாச்சு. தனக்கு நெறைய எடுத்துண்டு இவருக்கு நாமம் போட்டான்னு என்னவோ... நான் இதையெல்லாம் கேக்கறதே இல்லை. நான் உண்டு, குழந்தைகள் உண்டு. ரெண்டையும் முனைஞ்சு படிக்க வெச்சுட்டம்னா கடமை முடிஞ்சுது. உங்களை ஒண்ணு கேக்கணும் எனக்கு. ஆபீஸ்ல கூட இப்படித்தான் இருப்பாரோ எப்பப் பார்த்தாலும் கோவிச்சுண்டு?"

"இல்லைம்மா. அவர் வேலையை ஒழுங்கா செஞ்சுருவார். அதிகம் பேச மாட்டார் அவ்வளவுதான்."

"யாருமே வேண்டாம் அவருக்கு. உறவு வேண்டாம், சிநேகிதம் வேண்டாம் மணிக்கணக்கா மீனைப் பாத்துண்டிருப்பார்."

**சை**க்கிள் ரிக்ஷாக்காரன் மணியை சப்தமிட, உள்ளே அந்தப் பெண் ஓடி வந்தாள்.

---

"செயலாளர்கிட்ட வந்து தலைவர் கையை கட்டிக்கிட்டு தலையை சொறியறாரே... என்ன விஷயம்?"

"வீட்டு கரெண்ட் பில் கட்ட கட்சிப் பணத்துல கடன் வேணுமாம்!"

-எஸ்.எஸ். பூங்கதிர்





"நாவலாசிரியரைக் காதலிச்சு கல்யாணம் செஞ்சிட்டது தப்பாப் போச்சுடி..."

"ஏன்?"

"இரவில் என்னைக் கொஞ்சினவர், திடீர்னு நிறுத்திட்டு, 'அடுத்த வாரம் தொடரும்'ன்னு சொல்லிட்டு தூங்கிட்டாருடி...!"

– நெய்வேலி உதஸ்

---

"என்னடி? இதான் மஞ்சு, மாமாக்கு அலோ சொல்லு."

"மம்மீ எனக்கு இன்னிக்கு கட்டி."

"எதுக்குடி?"

"யாரோ செத்துப் போய்ட்டா" என்று கை கொட்டிச் சிரித்தாள்.

"செத்துப் போனதுக்கு சிரிக்கக்கூடாது கண்ணு!"

"அழணுமா?"

"மாமாக்கு ரைம்ஸ் சொல்லு."

"மாமா யாரு?"

"அப்பாவோட ப்ரெண்டு. ஆபீஸ்ல வேலை செய்யறவர். உங்க பேரைக் கூட கேட்டு வெச்சுக்கலை, என்னவோ சொன்னீங்களே."

"ரங்கநாதன்."

அந்தப் பெண் சுருக்கமாக இரட்டைப் பின்னல் பின்னி, உப்பலான கன்னத்துடன் நெற்றியில் பொட்டுடன் கடவுளின் அடையாளங்கள் இன்னும் பாக்கியிருந்தன. அய்யோ, எப்படி இவள் இந்த செய்தியை தாங்கிக் கொள்ளப் போகிறாள்?

"உங்களுக்குக் கல்யாணம் ஆச்சா" என்றாள் மனைவி.

"இல்லைம்மா! தங்கைக்கு கல்யாணம் தள்ளிண்டு போறது."

"நிம்மதி. கல்யாணம் பண்ணிக்காதீங்கோ. நாங்கள்லாம் லோல்படறது போறும். ரொம்பப் பாடு. பிள்ளைகளை வளர்க்கறதும் மாத்தி மாத்தி அவாளுக்கு உடம்புக்கு வரதும். அப்புறம் எதுக்கு கோவிச்சுப்பார்? எதுக்கு கோவிச்சுக்க மாட்டார்னு இவரோட பதிமூணு வருஷம் குடித்தனம் பண்ணிருக்கேன். இன்னும் எனக்குப் புடிபடலை. இதெல்லாம் அவர்கிட்ட சொல்லிடாதீங்க. ஏற்கெனவே முன் கோபம். அப்புறம் ஒரு மாசம் பேச மாட்டார்."

நான் காப்பி அருந்திவிட்டு புறப்படத் தயாரானேன்.

"**சா**யங்காலம் ஆஸ்பத்திரிக்கு வரணுமா? டிஸ்சார்ஜ் பண்ணிடுவாளா? நான் வந்தா, நீ ஏன் வந்தே. ஆசாமி செத்துத்தான் போய்ட்டானான்னு கத்துவார்."

செத்துத்தான் போய்ட்டான் என்று இவளிடம் சொல்லும் பொறுப்பை ஏன் ஒத்திப் போடுகிறேன். தனியாக ஒரு துயர மனைவியை சமாளிக்கும் அனுபவம் இல்லாததாலா? தைரியமில்லாததாலா? தயக்கமா?

"ஆஸ்பத்திரிலருந்து சாயங்காலத்துக்குள்ள வரமாட்டார். அதனால யாராவது உறவுக்காரங்களை கூட்டு வெச்சுக்கறதுதான் நல்லது. அவர் பிரதர் அட்ரஸ் சொல்லுங்க."

**முட்டாள் பெண்ணே உனக்கு உள்ளுணர்வில் தெரியவில்லையா?**

"பிரதர் அட்ரஸ் இல்லை. பரவால்லை. நான் ரோகிணியை இருபதாம் நம்பர்லருந்து கூட்டி வெச்சுக்கறேன். நீங்க என்னைப் பத்தி கவலைப்படாதீங்க. அவரை கவனிங்க."

"அப்ப ஒண்ணு பண்றேன் நான். ஆஸ்பத்திரி போய்ட்டு..."

"நாங்க வந்து பார்க்கலாமான்னு கேட்டுருங்க."

மற்றவன் மனைவியிடம் துக்கச் செய்தியை சொல்லும்போது மற்றொரு பெண் இருக்க வேண்டும். கட்டியணைத்து அழ ஒரு மார்பு வேண்டும். ஆபீசிலிருந்து மாலதி, சுதா யாரையாவது போய் அழைத்து வந்து விடலாம். அதுதான் சரி. அதனால்தான் இன்னும் சொல்லாமல் மென்று முழுங்குகிறேன்.

புறப்படும்போது மூலையில் இருந்த அந்த ஹாக்கி மட்டையை மறுபடி பார்த்தேன். "சுதாகர் ஹாக்கி ஆடுவாரா" என்றேன்.

"எப்பவோ ஆடிருக்கார். இப்ப நாய் பூனையெல்லாம் அடிக்கறதுக்காக வெச்சிருக்கார்."

அந்தப் பெண் "இதால அம்மாவையும் அடிப்பா, என்னையும் அடிப்பா அப்பா" என்றாள்.

மஞ்சு தன் மேல் சட்டையை உயர்த்தி திரும்பி "அம்மா அந்த தழும்பு காமி, மாமாக்கு முதுகுல."

"ஏய் பொய்யி... இவ ஏதோ சொல்றா" என்று என்னை அவசரமாகப் பார்த்து அவள் சட்டையைச் சரிப்படுத்தினாள்.

நான் புறப்பட்டு ஆபீஸ் காருக்குள் ஏறினேன். வாசல் வரை வந்து இருவரும் நிற்க, அந்தப் பெண் சின்ன விரல்களை விரித்து டாட்டா காட்டினாள்.

"போலாங்களா?"

"கொஞ்சம் இருப்பா."

காரை விட்டு இறங்கி மீண்டும் அவளருகில் சென்றேன்.

"மன்னிச்சுக்கங்க. நான் உங்ககிட்ட உண்மையை மறைச்சேன். உங்க கணவர் சுதாகர் ஆக்சிடெண்டில செத்துப் போய்ட்டார். பாடியை மார்ச்சுவரில வெச்சிருக்காங்க" என்றேன்.

## படித்ததில் பிடித்தது



# வெப்பமான பெண் குரல்!

நகரங்களில் வாழும், மத்தியதர மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் பதினெட்டுச் சிறுகதைகளை ஆர். சூடாமணியின் 'காவலை மீறி' என்னும் தலைப்புடைய இத்தொகுப்பில் காண முடிகிறது. பாத்திரங்கள், சம்பவங்கள் ஆகியவற்றை இயக்கும் வாழ்க்கை முரண்பாடுகளும், போராட்டங்களும் அழுத்தமாகவும் அழகாகவும் கதைகளில் பதிவாகியுள்ளன.

வீடு, தன்மகன் பெயரில் எழுதி வைக்கப்பட்டிருக்கும் காரணத்தால், திருமணமான அவன், எங்கே தன்னைக் கைவிட்டு விடுவானோ என்கிற கவலையிலும் அச்சத்திலும் அவனுக்கு அடிமையாகி அவதிப்படும் அவனுடைய தாய் சாரதா காணும் விடுமுறையில் கூட, சமூகக் கொடுமை ஓய்வெடுக்காமல் மனிதரை வேட்டையாடுவதையே 'விடுமுறை' கதையில் நாம் பார்க்க முடிகிறது.

வரதட்சிணைக் கொடுமையை எதிர்த்து ஸ்வாதி கிளர்ந்தெழுவது நமக்கு வரவேற்கத்தக்க பெண்மைத் துணிச்சலாகத் தோன்றினாலும், அத்துணிச்சலை அவள் பெறுவதற்காக அவளுடைய அக்கா அதே கொடுமைக்குத் தன்னைப் பலி கொடுப்பது தேவையாவதை 'உயிர்ப்பலி' கதை உணர்வு கொப்பளிக்க உணர்த்துகிறது. ஸ்வாதியின் அக்கா ஜெயாவின் மரணம் வீண் போகவில்லை என்று அவளுடைய தோழி நந்தினி ஆறுதல் காண முற்பட்டாலும், நந்தினி, ஜெயா, ஸ்வாதி எல்லாருமாகப் போராடி, மரணத்தின் மீதான இலாபமாக இல்லாமல் வாழ்க்கையை வென்றெடுத்திருக்கக் கூடாதா என்கிற வேதனை நிரம்பிய கேள்வி நம்முன் விளைகிறது.

பெண் சிசுக் கொலை பற்றிய கவலையும் அச்சமும் நம் உள்ளங்களை உலுக்கி வரும் இந்நாளில் இரண்டு பையன்களைப் பெற்ற பெற்றோர்கள் அனாதை இல்லத்திலிருந்து ஒரு பெண் குழந்தையைத் தத்தெடுத்துத் தங்கள் குடும்ப உறுப்பினராக்கிக் கொள்ளும் பரிவு 'வைரமணிக்' கதையாக நம்முன் சுடர் வெள்ளம் பாய்ச்சுகிறது.

யதார்த்தத்தை மீறிய பார்வையாக இக்கதை வளர்ந்திருந்தாலும் வரவேற்கத்தக்க மானுடக்கனவும் கனிவுமாக நாம் இதனை ஏற்கலாம். இக்கதைக்கு எதிர் மறையான திசையில், யதார்த்தபூர்வமாகப் படைக்கப்பட்டிருக்கும் கதை 'ஆஸ்பத்திரியில் ஒரு புதிய டாக்டர்!' ஆண் ஒன்றும் பெண் ஒன்றுமாக இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்த பெற்றோர்கள் வறுமை காரணமாக இரண்டு குழந்தைகளையும் வளர்க்க முடியாது என்கிற கவலையில் மூழ்கிக் கண்டெடுத்த முடிவால், தங்கள் பெண் குழந்தையைப் பிரிகின்றனர். அம்முடிவும் தாயின் ஒப்புதல் இல்லாத தந்தையின் முடிவாக அமைய-அனாதை இல்லத்தில் அக்குழந்தை சேர்க்கப்படுகிறது.

அடங்கிக் கிடந்து துயரங்களை அனுபவிக்கும் காந்திமதி மாமி, காவலை மீறிக் கிளம்பும் தன் மூன்று புதல்விகளுக்கும் கதவு திறந்து விடும் போது, புதிய நம்பிக்கைகள் நமக்குள் புறப்பட்டு விடுகின்றன. நிச்சயமாக, அந்தப் புதல்விகள், காந்திமதியின் வாரிசாக ஆணாதிக்க ஆணவத்துக்குத் தீனி போடமாட்டார்கள் என்று நாம் எதிர்பார்க்கிறோம். 'சகோதரச் சுவை'-கதை ஒரு புதிய பரிமாணத்தைக் காட்டினாலும் கதையின் மீது செலுத்தப்பட்ட படைப்பாளியின் வற்புறுத்தலாகவே அது தோன்றுகிறது.

'மூன்றாவது நபர்' என்னும் கதையிலும் முப்பதாயிரம் ரூபாய் கேட்டு வாங்கிவரப் பிறந்தகத்துக்குத் தன் மனைவியை முடுக்கி விடும் ராஜு, திடீரென்று, மனம் மாறுவது ஏற்கத்தக்க வகையில் படைக்கப்படவில்லை.

எனினும் இத்தொகுப்பில் உள்ள எல்லா கதைகளிலும் ஆர். சூடாமணியின் சமூக அக்கறையை, நாம் காண முடிகிறது. சமூகச் சிக்கல்கள் கலை வல்லமையோடு சொல்லப்பட்டிருக்கும் இக்கதைகளின் ஊடே பெண்ணினத்திற்கென ஒரு பெண்ணின் வெப்பமான குரல் மேலோங்கி ஒலிக்கிறது. நம்மையும் வெதுப்புகிறது.

- தமிழன்பன்

(காவலை மீறி/ஆர். சூடாமணி/இமயப் பதிப்பகம், 8.நீலா தெற்கு வீதி, நாகைப்பட்டிணம் - 611 001/ரூ. 35.00.)

இந்திரா சௌந்தர்ராஜன்

**துணி வகையில் பட்டுக்கு மாத்திரம் உயிர் உண்டு! கிட்டத்தட்ட அது ஒரு ஜீவனைப் போலத்தான். விஞ்ஞானப் பார்வையில் அது பட்டுப் பூச்சியின் இன்னொரு வார்ப்பு மட்டுமே. ஆனால் அதற்கு ஆன்மீகப் பார்வையில் ஒரு விசித்திர மதிப்பு. அது செல்வத்தை ஆகர்ஷிக்கவல்லது. உடுத்துபவர்களுக்கு மேன்மை தரவல்லது. சுக்கிர அம்சம் என்றெல்லாம் மந்தா கூறுவாள். கூடவே அதை உருவாக்குபவன் மட்டும் என்றும் தரித்திரனாக இருக்கிறானே ஏன்? என்றும் கேட்பாள்.**

சுசிலாவை அங்கு மோகன்ராம் துளியும் எதிர்பார்க்கவில்லை. அவளைப் பார்க்கவும் வழக்கமாய் அவனை அணுகும் வெறுப்பும் நெருடலும் கூச்சமும் கலந்த ஒரு விஷயம், அவன் தலையை வேறு பக்கம் திருப்பு கிறது. உடம்பைக்கூட மனது வெளியே இழுத்துச் செல்லப் பார்க்கிறது.

"நில்லு... எங்க கிளம்பிட்டே?" - சுசிலாவோ அவனைத் தடுக்கிறாள்.

"நான் உன் கூடல்லாம் பேச மாட்டேன்னு தெரியும்தானே?" மோகன்ராமின் பதிலைக் கேட்டு இப்போது துளி எகத்தாள சிரிப்பு அவளிடம்.

"தெரியும்டா... நீ என் கூட பேச மட்டுமில்லடா - எதையும் சரியா புரிஞ்சுக்கவும் மாட்டேன்னு எனக்கு நல்லா தெரியும்" - அழுத்தமான ஒரு வளைப்போடு பேச்சைத் தொடங்குகிறாள்.

"எதைப் புரிஞ்சுக்கணும்?" - மோகன்ராம் உறுத்துப் போன உத்தரத்தில் ஊஞ்சலாடிக் கொண்டிருக்கும் சிலந்தியைப் பார்த்தபடி கேட்கிறான்.

"ஆமா... ஏன்டா என்னைக் கண்டாலே உனக்கு ஆக மாட்டேங்குது. நான் விபசாரி தான். ஒப்புக்கறேன். ஆனா உன் வரைல ஒரு அக்காவாதானே நடந்துக்கறேன்? என் மேல ஏன் இத்தனை வெறுப்பு?"

"என் அக்கா அக்காவா மட்டும்தான் இருக்க முடியும். ஒரு விபசாரியால்லாம் இருக்க முடியாது. அக்கான்னு இல்ல; எந்தப் பொண்ணும் விபசாரியா இருக்கவும் கூடாது..."

"நானா விரும்பி இப்படி ஆகலைடா..."

"தெரியும். ஒவ்வொரு விபசாரி பின்னாடியும் ஒரு கதை இருக்கு. ஆனா அதைக் கேட்டு உன் தப்பை நான் ஒத்துக்கத் தயாரில்லை. என் வரைல நீ கெட்டுப் போன அன்னிக்கே செத்துப் போயிருந்தா என் மதிப்புல எவ்வளவோ உயர்ந்திருப்பே. இந்த அசிங்கத்தை வாழ்க்கையாவே ஒத்துக்கிட்டே பாரு - அதனாலதான் எனக்கு உன்னைப் பிடிக்கலை."

"அப்ப நான் செத்துடணும்கிறியா?" -



உடைந்து போய்க் கேட்கிறாள் சுசீலா.

"என் வாயால நான் அதை சொல்லணு மாக்கும்? நான் வரேன்" - பேசிய ஜோரில் வெளிக்கிளம்பி விட்டவனை சுசீலா மட்டு மில்லை; பானுவும் கூட விக்கித்துப் போய்த் தான் பார்க்கிறாள்.

கிழவியிடம் இப்போது சுரிசனம்.

"அடியே சுசி. மோகன் பேசிட்டான்னு எதையாவது செய்துக்கிடாதடி. அவனுக்கு இன்னும் மனசு பாத்து பேசற பக்குவம் வரலை. அது வாழ்க்கைல அடிபட அடிபடத் தான் வரும். இளரத்தம் இல்லியா? இப்படித் தான் துடிக்கும். நாமதான் புரிஞ்சு காத்துக் கிடணும். போகட்டும். இனியாவது மானத் தோடு வாழ முயற்சிக்கப்படாதா நீ?"

"போ கிழவி... எல்லாம் தெரிஞ்சும் நீ கேக்கற கேள்வியா இது...? என்ன வாழ்க்கை ச்சை! சமயத்துல எதுக்கு வாழறேன்னே தெரி யலை." - கரிய அவளது விழிகளில் கண்ணீர் மணி திரள, சுசீலா பொருமத் தொடங்கிய தைப் பார்த்து பானு அவளை நெருங்கி சற்று அணைப்பாக நின்று கொண்டு பேசுகிறாள்.

அப்படியே வாசல் பக்கமாக வந்தபடி...

"அக்கா எனக்கு பயமா இருக்குக்கா..."

"எதுக்கு பயப்படறே நீ?"

"அந்த நாமு என்னை குறிவெச் சுட்ட மாதிரி தெரியுது."

- சுசீலாவிடமும் இப்போது பயத் தின் தொற்றுதல்.

"ஆமா... நான் கூடக் கேள்விப்பட் டேன். அவன் இங்க வந்தான், உன் கூட பேசிக்கிட்டிருந்தான்னு. என்ன பேசி னான்?"

"சுருக்கமா சொல்றேன். இந்த பானுவும் இ. ரனொரு சுசீலாவா...." - பானு பேசி முடிக்கு முன் வாயைப் பொத்தினாள் சுசீலா.

"அப்படிச் சொன்னானா அந்த நாய்?"

"சொல்லலை. சவாலே விட்டான்."

"ஆமாம் இவன் பெரிய சத்யசந்தன். சவால் விட்டா ஜெயிக்க."

"பயமா இருக்குக்கா. மோகனும் என்னை திரும்பிக் கூடப் பாக்க மாட்டேங்குது. பாட் டிக்கும் இப்படி ஆயிடிச்சு. எல்லா கதவை யும் சாத்தி இருட்டு அறைக்குள்ள விட்ட மாதிரி இருக்கு என் நிலை."

"கவலைப்படாதேடி. கவலைப்படாதே. ஒரு சுசீலா போதும். என் கண் எதுக்க நான் இன்னொருத்தி உருவாகறத பாத்துகிட்டு இருப்பேனா?"

"அக்கா எனக்கு நீ இருக்கற தைரியம் தான்."

# 6

# ஆசை நெசவு

பானு சொல்லும்



போதே வாசற்புறம் குதிரை வண்டி வந்து நிற்கும் சப்தம்! – யார்?

உள்ளிருந்து ஒரு கோஷா உருவம் இறங்கு கிறது!

'ஹக்!' – சுசிலா விழிகள் திகைத்து விரிய முகத்திறப்பை புறந்தள்ளியபடி ஒரு முஸ்லிம் பெண்மணி முன்வருகிறாள்.

"வா பாத்திமா..." – சுசிலாவிடம் மட்டும் வரவேற்பு. வீதியிடம் கூட சற்று கூர்மையான பார்வை.

பட்டு நாற்பாவை நீட்டி உலர்த்திக் கொண் டிருக்கும் சிலரிலிருந்து, வாசல்படி மேல் நின்று சருவாளியால் கூந்தலைக் கோதிப் பேன் பிடித்தபடி இருக்கும் பலர் வரைக்கும் பார்க்க, அந்தப் பாத்திமா எனும் பெண் உள் நுழை கிறாள். பானு குளித்து எழுந்து துவட்டாமல் வந்த மாதிரி வியர்வை ஈரம் பூக்கக் கிடக் கிறாள்.

"எப்படி இருக்கீங்க?" – உள் நுழையும் பாத்திமாவிடம் விசாரணையான கேள்வி. கேள்வியோடு கூடிக் கொண்டு வந்திருந்த வயர் கூடையில் இருந்து ஹார்லிக்ஸ் வாழைப் பழம் என்று வெளிப்படும் வரிசைகள்.

"யாரு... யார் வந்திருக்கிறது?" – ஊடே நுழைகிறது மந்தாவின் பதட்டமான கேள்வி.

"பாத்திமா... அதாவது செத்துட்ட உங்க மருமகனோட தங்கச்சி."

– சுசிலாவின் பதிலில் மந்தா முகம் உரு மாறுகிறது.

"நான் எத்தினி தடவை சொல்லியிருப் பேன். அவன் என் மருமகன் கிடையாது. அவங்கள்லாம் இந்த வீட்டுக்கும் வரக் கூடா துன்னு..."

"ஏ மந்தா நானே வரலாம்... அவங்க வரக் கூடாதா?"

"கூடாது... கூடாதுன்னா கூடாது. போகச் சொல்லு அவளை."

– கிழவி புலம்ப ஆரம்பிக்க, இதெல்லாம் சகஜம் என்பது போல அதைப் புறந்தள்ளிக் கொண்டு பாத்திமா என்னும் அந்தப் பெண் மணி பானுவை நெருங்கி வாஞ்சையாக அவள் கரம் பற்றுகிறாள்.

"எப்படிம்மா இருக்கே... பாட்டிக்குத்தான் இப்படி ஆயிடிச்சு."

"ஆமா உங்களுக்கெப்படி தெரியும் இந்த விஷயம்?" – இது சுசிலா.

"தெரியும் சுசிலா. நம்ம இரண்டு குடும் பத்துல எது நடந்தாலும் அதை தந்தி போல எடுத்து வந்து சொல்ல நிறைய பேர் இருக் காங்க. இந்த சமூகத்துல ரொம்பப் பேர் பொழுதே அப்படித்தானே போகுது?"

"தெரியுதுல்ல... அப்புறம் எதுக்கு வீட்டுக்கு வந்து என் மானத்தை வாங்கறே. நான் என் மகளைத்தான் இழந்தேன். மானத்தை இழக் கலை..." – மந்தாவிடம் படபடவென்று புலம் பல்.

"ஐயோ கிழவி, கொஞ்சம் சும்மா இருக் கியா... நீங்க உக்காருங்க."

– சுசிலா பேசியபடியே பாயை எடுத்து விரிக்கிறாள்.

"சந்தோஷம்மா. பாட்டிய பாத்துட்டு ஒரு முக்கிய விஷயத்தை சொல்லிட்டுப் போக லாம்னு வந்தேன். நான் இங்க வந்தது என் வாப்பாக்குத் தெரிஞ்சா நிச்சயம் வெட்டிப் போட்டுடுவார். இருந்தாலும் அண்ணனுக்காக வந்தேன். இன்னிக்குத்தான் அண்ணன் நம்மை யெல்லாம் விட்டுப் பிரிஞ்ச நாள்."

– பாத்திமா சொன்ன பிறகுதான் பானு வுக்கே உறைத்தது. புகை மூட்டத்துக்குள் தெரி யும் முகம் போல அவளுக்குள் இப்போது அவ ளது தகப்பன் முகம் முண்டுகிறது. டாக்சி டிரை வராக வாழ்ந்ததும் டாக்சியிலேயே தன்னை யும் அம்மாவையும் மேட்டூர் கூட்டிப் போய் மேடை சுற்றிக் காட்டியதெல்லாமும் நினை வில் பொறிந்தெழுகிறது.

திரும்பும் போதுதான் அந்த விபத்து நடந் தது. அவர்கள் இருவரும் போய்ச் சேர, தான் மட்டும் தப்பிப் பிழைத்ததும் இன்று தத்தளிப் பாக நிற்பதையும் ஒரு வினாடி யோசித்துப் பார்க்கிறாள்.

அன்றே அவர்களுடன் போயிருந்தால் எவ் வளவு நன்றாயிருந்திருக்கும்?

'எனக்கு வேண்டாம் அந்த சனியன்' என்று ராவுத்தர் தாத்தா அவளை ஒதுக்கித் தள்ள, அள்ளி அணைத்துக் கொண்டவள் மந்தா கிழவிதான். பாசம் விடவில்லை.

காலப்போக்கில் துப்புரவாக தகப்பன் வழி நினைப்பும் தொடர்பும் பட்டுப் போய் அந்த இடத்தில் புல்லும் கூட முளைத்து விட்டாலும் அவ்வப்போது அதன் மேல் நடந்து வந்து ஒரு சிலிர்ப்பை உருவாக்கிச் செல்வாள் அத்தை பாத்திமா!

என்ன இருந்தாலும் அண்ணன் மகள் என்று பாசம் காட்டுவாள். அந்த ரகசியப் பாசத்திற்கு அச்சாரமாக பனாரஸ் பட்டு, வெள்ளிக் கொலுசு என்று சில சாட்சிப் பொருட்களும் கூட உண்டு.

இன்று?

பாத்திமா ஒரு தங்கச் சங்கிலியை எடுத்து நீட்டுகிறாள்.

"எதுக்குங்க இது...?" சுசிலாதான் கேட் கிறாள்.

"நான் குவைத் போயிடப் போறேன். சேலம்

---

**''கனவில அடிக்கடி ஒளியும் ஒலியும் வருது டாக்டர்.''**

**''பார்த்து சந்தோஷப்படவேண்டியதுதானே?''**

**''கூடவே விளம்பரம் சேர்ந்து வருதே டாக்டர்!''**

**– குடந்தை கே.ஆர். ரவிக்குமார்**



திரும்பறதுங்கறது இனி எப்போன்னு அல்லாக்குதான் தெரியும். பானுக்கும் கல்யாண வயசு. அந்தை எதையாச்சும் செய்தாத்தானே நல்லாருக்கும்? இந்த சங்கிலி அண்ணன் எனக்குப் போட்டது. அதைத்தான் நான் இப்ப அதுக்குக் கொடுக்கறேன். வா... வந்து வாங்கிக்க..."

– பாத்திமா சங்கிலிக் கையோடு அவளை விட்டு விலகிப் போன பானு பக்கம் திரும்புகிறாள். அவளிடம் அசைவில்லை.

"வேண்டாம். எதுவும் வேண்டாம். வெளிய போனா போதும்..." மந்தாவிடம் அலறல்.

"மந்தா கொஞ்சம் சும்மா இருக்கியா?" – சுசிலா அதட்டி அடக்குகிறாள். "பானு வாங்கிக்கம்மா..." என்று பானுவையும் தூண்டி விடுகிறாள்.

பானு தயங்கித் தயங்கி கையை நீட்ட அந்தக் கரத்தை இழுத்துத் தன் மார்போடு அணைத்துக் கொள்கிறாள் பாத்திமா. கண்கள் கசிகிறாள்.

"பானு... நா உன் அத்தை – ஆனா இது வரை ஒரு தடவை கூட என்னை நீ அத்தைன்னு கூப்பிட்டதில்லை. இன்னிக்காவது கூப்பிடேன்" – உடைந்த குரலில் பாத்திமாவிடம் கேவல். ஆனால் இறுதிவரை அந்தக் குதிரை வண்டி ஏறி வீதி முக்கில் அவள் திரும்பும் வரை பானுவால் அப்படிச் சொல்ல முடியவில்லை.

சுசிலாவிடம் மட்டும் இனம்புரியாத நெகிழ்ச்சி.

இப்படித் தன் மேல் பாசம் காட்ட ஒருவர் கூட இல்லையே...

நினைக்கும்போதே நெஞ்சை வலிக்கிறது. மோகன்ராமின் ஆவேசமான புறக்கணிப்பு வேறு முள்ளாய்க் குத்தத் தொடங்குகிறது. புடவைத் தலைப்பால் முகம் துடைத்தபடி வாசல் பக்கமாய் வெளிக்கிளம்ப ஆரம்பித்தவள், திரும்பி புழக்கடை வழியாக செல்ல ஆயத்தமாகிறாள்.

"பானு... நீ எதுக்கும் வெளிய போகாதே. எதுக்கு வந்தா உன் அத்தைன்னு கேட்டு வீதி உன்னை தோண்டித் துருவும். நான் ராத்திரி ஊர் அடங்கின பிறகு வரேன். மருந்து மாத்திரையை மட்டும் கிழவிக்கு நேரம் தவறாம கொடுத்துடு."

– போய் விட்டாள் சுசிலா.

தறிமேடையில் இருந்தான் மோகன்ராம். பட்டுத் தகட்டால் நெய்த அளவிலான பட்டுத் துணி மேல் ஒரு அழுத்தமான தேய்ப்பு கொடுத்துக் கொண்டிருந்தான். கிச்சுவீச்சு என்று நான்கைந்து எலிகள் கூடி விளையாடுகிற மாதிரி சப்தமெல்லாம் கேட்டது.

தேய்க்கத் தேய்க்கத்தான் பட்டு பளபளக்கும். கெண்டை நூலுக்கும் பாவுக்கும் உருவான இணைப்பில் ஒருவகை சொரசொரப்பு இருக்கும். அதுவும் போகும். உடுத்தும் போது வெண்ணையோ, எண்ணெயோ உடம்பில் ஓடுவது போல, உரசுவது போல இருக்கும்.

அந்த கிச்சு வீச்சு சப்தம் கேட்டு பக்கத்து வீட்டு முகுந்தன் எட்டிப் பார்க்கிறான்.

முகுந்தன் ஒரு தினுசான பாத்திரம். சேலத்து அழுக்குச் சந்தில் இருந்து கொண்டு அமெரிக்கக் கனவு காணுபவன். பத்து தமிழ் வார்த்தைக்கு ஒரு இங்கிலீஷ் வார்த்தை அவன் பேச்சில் கட்டாயம் இருக்கும். எல்லோரும் கமல் ரஜினி என்று உருகிக் கொண்டிருக்க, இவன் மட்டும் ஸ்டாலோன், செகால், எடிமர்பி என்று உளறிக் கொண்டிருப்பான். நெய்வது கூட சுத்தப் பட்டு இல்லை; பாரிஸ் பட்டுதான். அசப்பட்டு போல இருக்கும் போலி அது.

"என்ன மோகன் அதுக்குள்ள தறி ஏறிட்டே?"– கேட்டபடியே அவன் தறிமேடை ஓரம் அமருகிறான்.

"ஏறாம... அதான் வெயில்தான் நல்லா அடிக்குதுல்ல."

"இல்ல, படத்துக்கு எதுவும் போகலையான்னு கேட்டேன்."

"நான் என்னிக்குடா படத்துக்கெல்லாம் போயிருக்கேன்?" – எரிச்சலான பதில் கேள்வி மோகன்ராமிடம். கையும் காலும் 'டக்டக்' என்கிற தாள கதி மாறாத பட்டு நெய்தலில்...

"அப்புறம்...?"

"என்ன அப்புறம்... நீ தறிக்குப் போகலையா?"

"சங்கீத்ல ராக்கி போட்டுருக்கான். ஷல் வி கோ?"

– மோகன்ராம் பார்வை தறிநெய்வதைக் கூட நிறுத்திவிட்டு இப்போது முகுந்தனை ஆழமாகப் பார்க்கிறது. அதில் கணிசமான கோபம். பின் ஒரு கேலிச் சிரிப்பின் வழிசல்.

"எதுக்கு சிரிக்கறே?"

"சிரிக்காம... நம்மாளுங்க ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கிட்டா முதல்ல கேட்டுக்கற கேள்வியே என்ன படம் பார்த்தே? – எத்தனை நாள் ஓடும்கறதுதான். ஏண்டா நான் எப்படி இருக்கேன்... நம்ம வாழ்க்கை எப்படி ஓடும்னுல்லாம் கேக்கவே யாருக்கும் தெரியாதா?"

– அதைக் கேட்டு பதில் சிரிப்பு சிரிக்கிறான் முகுந்தன்.

"நாம மோசமா இருக்கோம். இதைக் கேட்டுத் தெரிஞ்சுக்க வேண்டிய அவசியம் இல்லை. நம்ம வாழ்க்கை ஒரு தேங்கி நிற்கற குட்டை. காவிரியே ஓட முடியாத பூமியில

படிக்கப் படிக்க இனிமை!
பாதுகாத்தால் பெருமை!

கோகுலம்

மார்ச் இதழில்...

♦ ராக்கொக்கின் கால் என்ன நிறம்?

♦ பூனை ராஜா!

– வண்ணப்படக்கதை



+

போட்டி, பேட்டி, கதைகள், நாடகம் அத்தனையும்

முழுமையான சிறுவர் இதழ்

கோகுலம், ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.


குட்டை தானா ஓடப் போகுது? ஆகையால வி டோண்ட் வான்ட் டு ஆஸ்க் திஸ் கொஸ்சன் ஆல்ஸோ... அப்புறம்?"

"அப்புறம் என்னடா அப்புறம்? இதை எல்லாம் மாத்த முயற்சிக்க வேண்டாமா?"

"முடியாது மோகன். முடியலே முடியாது. தலைவலின்னா மாத்திரை சாப்பிடலாம். நம்ம நிலையோ கான்சருக்கும் மேல. ஹியர் ஈஸ் நோ மெடிசின்."

"அப்ப என்ன பண்ணலாம்கறே?"

"இப்போதைக்கு ராக்கி போய்ட்டு வருவோம்கறேன். கிளம்பு."

"திரும்ப சினிமாதானா?"

"அலுத்துக்காதே. நான் பி.ஏ. முடிக்கணும், கேட் பாஸ் பண்ணணும். யு.எஸ். போகணும். எம்.எஸ். பண்ணணும்னு எவ்வளவோ கனவு கண்டேன். முடியலை. இப்போ அபிப்ராயத்தை மாத்திக்கிட்டேன்."

"எப்படி?"

"கோடம்பாக்கம் போகணும். பாலசந்தர் கால்லையாவது அகத்தியன் கால்லையாவது விழணும். ஸ்டார் ஆகணும். எலெக்‌ஷன்ல நிக்கணும். மினிஸ்டர் ஆகணும்..."

– மோகன்ராம் கடகடவென்று சிரிக்கத் தொடங்கி விட்டான். அவன் இப்படிச் சிரித்து நெடுநாள் ஆகிவிட்டது. ஆச்சரியமாக கிழங்கு அவித்துக் கொண்டிருந்த மகாலட்சுமி கூட நிமிர்ந்து பார்க்கிறாள்.

"என்னடா சிரிக்கறே... நீ வேணா பார் இது நடக்கத்தான் போகுது."

"டேய் நீ விரக்தியில பேசறே..."

"என்னடா பண்ணச் சொல்றே... யுக்தி இங்க ஜெயிக்க மாட்டேங்குதே..?"

"ஜெயிக்கும்டா... பொறுமை வேணும்!"

"டேய்... நாமெல்லாம் எருமையே வெட்கப்படற பொறுமைசாலிகள். தெரிஞ்சுமா இப்படிச் சொல்றே?"

"இதோ பார் முகுந்தன். பீ பாசிடிவ். என்னை நானும் உன்னை மாதிரி இங்கிலீஷ் பேசறேனேன்னு பாக்கறியா. பேசணும். நான் மட்டுமில்ல. நம்ம சமூகமே பேசணும். அந்த அளவு அறிவு வளரணும். நீயும் உன் லட்சியத்துல கரை ஏறணும். தயவுசெய்து உன் எம்.எஸ். கனவை கோடம்பாக்கம் கனவா கன்வர்ட் பண்ணிடாதே. ப்ளீஸ். உனக்கு என்ன உதவி வேணும் –கேள். என்னால முடிஞ்சதை செய்யறேன்."

முகுந்தன் அதைக் கேட்டு கண்கள் பனிக்க மோகன்ராமின் கையைப் பிடித்துக் கொண்டான்.

"நீ இப்படி சொன்னதே போதும்டா.." என்றபோது குமட்டலாய் இருவரையும் ஊடுருவியது சாராய நாற்றம்.

திரும்பவும் கூடையில் சாராய டின்னோடு வீதியில் காளியப்பன்!

(தொடரும்)

காவல்துறை கசமுசா!

# மீண்டும் எட்டிப் பார்க்கிறதா ஊழல் பூதம்?



“நல்லாட்சி தர முயலும் கலைஞர் ஆட்சிக்கு முழு ஒத்துழைப்புத் தர வேண்டிய அதிகாரிகளே கரண்டலில் இறங்கினால் அரசியல்வாதிகளுக்கு எப்படி ஸ்பீட் பிரேக்கர் போட முடியும்?” என்று நம்மிடம் கேட்டார் தி.மு.க. அனுதாபியான காவல் துறைத் தோழர் ஒருவர்.

சென்னை நகரக் காவல் துறை தலைமைக் காவலர்களிடையே இப்போது புயல் வீசிக் கொண்டிருக்கிறது. பலர் கொதிப்படைந்து போயிருக்கிறார்கள். பலர் சலிப்படைந்து நொந்து போயிருக்கிறார்கள்.

விவகாரம் என்ன?

சென்ற வருடம் அக்டோபர், நவம்பர் மாதங்களில், தலைமைக் காவலர்களில் இருந்து, சப்-இன்ஸ்பெக்டர் பதவிக்கு உயர்வு பெற எழுத்துத் தேர்வும், நேர்முகமும் நடந்தன. மொத்தம் கலந்து கொண்ட 431 பேர்களில் 175 பேர் பதவி உயர்வுக்குத் தகுதி பெற்றவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 'மெரிட் லிஸ்ட்' போடப்பட்டது. “ஆஹா நமக்கு பிரமோஷன் வந்து விட்டது” என்று ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்த அந்த 175 பேரில், 115 பேரைக் கலங்கடிக்கும்விதமாக முதல் 60 நபர்களுக்கு மட்டும் பிரமோஷன் ஆர்டர் போடப்பட்டது.

அந்த லிஸ்டைப் பார்த்ததும் பலருக்கு அடிவயிறு பற்றி எரிந்தது.

ஆர்டலிகள் (அதிகாரணம், போலீஸ் ஸ்டேஷனில் பணி புரிந்த அனுபவமே இல்லாத

காரிகள் வீட்டில் வேலை செய்பவர்கள்), டிரை வர்கள் ஆகியோர் அந்த 60 பேரில் கணிசமா கக் காணப்பட்டார்கள்!

"உயர் போலீஸ் அதிகாரிகள் செய்த வேலை இது. தங்கள் வீட்டில் வருடக் கணக் காக வேலை செய்யும் டிரைவர், ஆர்டர் லிகளுக்கு பலமாக சிபாரிசு செய்து லிஸ்ட்டில் நுழைத்து விட்டார்கள். இது தவிர முதல்வர் அலுவலகம், உள்துறை இலாகா ஆகியவற்றில் இருந்து வேறு, பல சிபாரிசுகள். சில அதி காரிகள் இந்த போஸ்டிங்கில் ஆயிரக்கணக்கில் சுருட்டி விட்டார்கள். இத்தனைக்கும் 236 காலி இடங்கள் இருக்கின்றன. தேர்வு பெற்ற 175 பேருக்கும் பிரமோஷன் கொடுத்திருக்கலாம்" என்று சொன்னார் தேர்ச்சி பெற்றும் போஸ்டிங் கிடைக்காத ஸ்டேஷன் தலைமைக் காவலர் ஒருவர்.

**ச**ரி, அப்புறம் என்ன ஆயிற்று?

பாதிக்கப்பட்ட தலைமைக் காவலர் ஒருவர் கோர்ட்டில் ரிட் மனு போட, மிரண்டு போன இலாகா, எந்த வில்லங்கமும் இல்லாமல் பார்த் துக் கொள்வதற்காக திறமையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட 175 பெயர்கள் கொண்ட லிஸ்டை, திறமை - கம்- சீனியாரிட்டி என்ற அடிப்படையில் மாற் றித் தயாரித்து இரண்டாவதாக ஒரு லிஸ்ட் போட்டது. இந்த இரண்டாவது லிஸ்ட் படி மீண்டும் முதல் 60 பேர்களுக்கு பிரமோஷன் போடப்பட்டது. இந்தக் களேபரத்தில், முதலில் நியாயமாக பிரமோஷன் கிடைக்கப் பெற்ற சிலர் விடுபட்டுப் போக, ஒரே கசமுசா.

**இ**ந்த விவகாரத்தின் முழுப் பரிமாணத் தையும் தெரிந்து கொள்வதற்காக காவல் துறை அமைச்சுப் பணி அதிகாரி (Ministerial Service) ஒருவரைச் சந்தித்தோம். வேலை நியமனம், பிரமோஷன், மாற்றல் போன்றவற்றை கவனிப் பவர்கள் இவர்கள்தான்.

"சப்-இன்ஸ்பெக்டர் பிரமோஷன் விவ காரத்தில் 'பணம்' விளையாடியிருக்கிறது என்பது கொஞ்சம் கூடச் சரியல்ல. சிபாரிசுகள் உண்டு. தன்னிடம் வருடக்கணக்காக வேலை செய்யும் ஆர்டலிக்கும், டிரைவருக்கும் அதிகாரி சிபாரிசு செய்வது இயல்பு. மேலும் அவர்கள் கிட்டத்தட்ட 15, 20 வருடங்கள் சர்வீஸ் போட்டிருப்பார்கள். காலி இடங்கள் இருக்கும்போது, தேர்ச்சி பெற்ற 175 பேருக்கும் பிரமோஷன் கொடுத்திருக்கலாம் என்ற வாத மும் சரியல்ல. சப்-இன்ஸ்பெக்டர் பதவிக்கு, ஆட்களை இருவிதங்களில் நிரப்புகிறோம். பதவி உயர்வின் மூலமாக 25 சதவீதமும், நேரடி யாக மீதி இடங்களும் நிரப்பப்படும். ஆகவே காலியாக உள்ள எல்லா இடங்களையும் பதவி உயர்வில் நிரப்ப முடியாது. Rosterபடிதான் முடியும். இது தவிர, சப்-இன்ஸ்பெக்டர் பயிற் சிக் கல்லூரிகளில் உள்ள இட வசதிக்கேற்ப ஆட்களை ரிலீஸ் செய்ய வேண்டும். மேலும் மெரிட்-கம்-ஸீனியாரிட்டிபடிதான் பதவி உயர்வு போட வேண்டும். முதலில் போட்ட தேர்ச்சி லிஸ்ட் மெரிட்படி போட்டது. பிறகு, பிரமோஷனுக்கென்று ஸீனியாரிட்டி-கம்-மெரிட் அடிப்படையில் லிஸ்ட் தயாரிக்கப் பட்டு, அதில் முதலாவதாக உள்ள 60 பேர் களுக்கு பிரமோஷன் போடப்பட்டது. மற்றவர்களுக்கும் காலப்போக்கில் கிடைக்கும்" என்றார் அவர்.

"இப்போது பதவி உயர்வு கொடுக்கப்பட்ட பலருக்கும் குற்ற இயல் சட்டங்களைப் பற்றி ஏதும் தெரியாது. எழுத்துத் தேர்வில் 'சொல்லிக் கொடுக்க'ப்பட்டு பாஸ் செய்தவர்கள். இவர் களால் ஸ்டேஷன்களில் வேலை செய்ய முடியாது" என்றார் நேரடியாகத் தேர்ந்தெடுக் கப்பட்ட எஸ்.ஐ. ஒருவர்.

"பிரமோஷன் கிடைக்காத பலர் சகட்டு மேனிக்குப் பேசிக் கொண்டும், வதந்திகளைப் பரப்பிக் கொண்டும் இருக்கிறார்கள். பயிற்சி யில், சப்-இன்ஸ்பெக்டர் பணி பற்றி எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்ளலாம். அப்படியும் பிரயோஜனமில்லாத பலரை போஸ்டிங் போடவா இடமில்லை? அமைச் சர்களின் கார் கதவைத் திறந்து விடும் பாது காப்பு அதிகாரிகள், விமான நிலைய அத் வானத்தில் பாதுகாப்பு, வி.ஐ.பி. பாதுகாப்பு போன்றவற்றிற்கும் ஆட்கள் தேவைப்படுகிறார் களே, அங்கே போட்டு விட்டுப் போகிறோம்!" என்றார் ஒரு போலீஸ் அதிகாரி.

"எழுத்துத் தேர்விலும், நேர்முகத்திலும் பெற்ற மார்க்குகளின் அடிப்படையிலும், ரகசிய பணிக்குறிப்புகள், மற்றும் பிஸிகல் ஸ்டாண்டர்ட் ஆகியவற்றை மட்டுமே கண் டிப்பாகக் கருதி, லிஸ்ட் தயாரித்து இருந்தால் இப்போது தேர்ச்சி பெற்ற பலர் அடிபட்டுப் போயிருப்பார்கள். ஆகவே முதல்வர் பார பட்சமற்ற வேறு துறை அதிகாரிகளைக் கொண்டு விசாரணைக்கு உத்தரவிட வேண்டும்" என்று சொன்னார் தலைமைக் காவலர் ஒருவர்.

- ப்ரியன்

**ச**மீபத்தில் சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பிற்காக மூடச் சொல்லி உச்சநீதி மன்றம் உத்தரவிட்ட தொழிற்சாலைகளின் கணக்கு, மாநிலவாரியாகப் பின்வருமாறு:

மத்தியப் பிரதேசம் 1, ஆந்திரா 2, மேற்கு வங்காளம் 38, பீகார் 43, ஹரியானா 45, இமாச்சலப் பிரதேசம் 54, உத்திரப் பிரதேசம் 152, டெல்லி 168. தமிழ்நாடு— மூர்ச்சை அடையாதீர்கள்! 485

ஆதாரம்: தீ வீக், தகவல் : ஆர். சந்திரசேகரன்.

**சென்ற 2.2.97 இதழில் வெளிவந்த 'ஆட்டோ அட்டூழியம்'– புள்ளி விவரக்கணக்குக்கு தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் ஆட்டோ ஓட்டுநர்கள் ரியாக்ட் செய்திருந்தனர். சில கடிதங்கள்:**



# நாங்களா அடாவடி?

தாங்கள் குறிப்பிட்டுள்ளதுபோல் ஆட்டோவின் விலை 56,600தான். ஆனால் காத்திருப்போர் பட்டியல் ஆயிரக் கணக்கில் உண்டு. இடைத்தரகர்களாக உள்ளவர்கள் கலபமாகப் பெற்று, எங்கள் கைக்கு வந்து சேரும்போது பகடி மற்றும் வரிகள் உட்பட 74,500 ரூபாய் ஆகிறது. அதன் பிறகு பெயிண்ட், வண்டியைச் சீராக்குதல் போன்ற பணிக்கு குறைந்தது 5,000 ரூபாய் செலவாகிறது. ஆட்டோவை தவணை முறையில் வாங்கும்போது எக்கச்சக்கமாக வட்டி செலுத்துகிறோம். இதனாலெல்லாம் வெறுத்துப் போய், கூப்பிட்ட இடத்துக்கு வருவதில்லை, மீட்டர் கட்டணத் தில்லுமுல்லு போன்றவற்றை சிலர் செய்கின்றனர். அது எங்கள் அனைவரையும் பாதிக்கிறது. கடந்த ஐந்து ஆண்டுகளாக வண்டி ஓட்டுகிறேன். மீட்டருக்கு மேலே கேட்டதில்லை. கூப்பிட்ட இடத்துக்கு வர மறுத்ததும் இல்லை. வண்டியில் தவறவிட்ட பொருட்களைக் கொண்டு சென்று கொடுத்துள்ளேன். பலர் பாராட்டியுள்ளனர். எனவே, அடிப்படைகளை அரசு முன்வந்து சீர் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**சென்னை - 81, கு. பழநி.**

திருச்சியில் நாள் ஒன்றுக்கு அதிகபட்சமாக ஆட்டோக்கள் இயங்குவது 50 கி.மீட்டரே அரிது. தமிழ்நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு திருச்சி பிரிவு கூறும் கணக்குப்படி ஒரு ஆட்டோ திருச்சி மாநகராட்சிக்குள் 100 கி.மீ தூரம் இயங்கும் என்று வைத்துக் கொண்டாலும் இதோ எங்களது புள்ளி விபரக் கணக்கு: (அதிகமாக ஆட்டோ ஓட்டுனர்கள் திருச்சி மாநகராட்சியில் வாடகை ஆட்டோக்களைத் தான் ஓட்டுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது):

நாள் ஒன்றுக்கு ஆட்டோ ஓடும் தூரம் 100 கி.மீ. பயணிகள் இல்லாமல் ஓடும் தூரம் 40கி.மீ., மீதம் 60கி.மீ.

வருமானம்: (ரூ.3.50×60கி.மீ.) = ரூ.210/-

ஆட்டோ வாடகை (சொந்தமாக வைத்து இருந்தாலும்) அதன் வங்கி அசல், வட்டி உட்பட ரூ.50/-

100 கி.மீ. பெட்ரோல் செலவு (பயணிகள் இல்லாமல் ஓடும் தூரத்தையும் சேர்த்து) ரூ.150/-. மொத்தம் ரூ.200/-

ஆக நாள் ஒன்றுக்குக் கிடைக்கும் நிகர லாபம் ரூ.10/-

சொந்த ஆட்டோ வைத்திருந்தால் ஒரு ஓட்டுனர்க்கு சம்பளம், தேய்மான செலவுகள், பராமரிப்பு, இதர செலவுகள் போக, கிடைக்கக்கூடிய வருமானம் ரூ.60/- மட்டுமே.

இதைக் கருத்தில் கொண்டு, நம்பர் 1, மாநகர ஆட்டோ ஓட்டுனர்கள் நல சங்கத்தில் உள்ள அனைத்து உறுப்பினர்களும் தங்களது ஆட்டோக்களை திருச்சி உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவுக்கு அவர்கள் வசமே சமர்ப்பிக்கின்றோம். அதை அவர்களே அனைத்து பராமரிப்புச் செலவுகள் செய்து, கல்கி வார இதழ் கூறியது போல் எங்களுக்கு ரூ.4000/- வேண்டாம், மாதம் ரூ.1500/- தந்தால் போதும். மீதித் தொகையை திருச்சி உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவுக்கு வளர்ச்சி நிதியாக வைத்துக் கொள்ளட்டும்!

**திருச்சி - 1, ஜெ. ஜெயகுமார், மாநகர ஆட்டோ ஓட்டுனர் நல சங்கம்.**

இங்கு சென்னையைப் போல் பஜாஜ் ஆட்டோ இல்லை; லேம்ரேட்டா வண்டிகளே. வண்டி 1 லிட்டர் பெட்ரோலுக்கு சுமார் 20 கிலோ மீட்டர் தூரம் வரை தான் செல்லும். வண்டியின் தினசரி வாடகை ரூ.50/- நாள் ஒன்றுக்கு ஒரு டிரைவரின் வருமானம் சுமார் 50 வரை மட்டுமே. இதில் வாடகை வீடு, குழந்தைகளின் கல்வி, உண்ண உணவு, உடுக்க உடை இவற்றுக்கெல்லாம் நாங்கள் என்ன செய்வோம்? கந்து வட்டிக்கு கடன் வாங்கி வாழ்க்கையை ஓட்டி வருகிறோம்.

**கோவை, நண்பர்கள் ஆட்டோ ஸ்டாண்டு.**

# நீங்கள் கேட்டவை – தராசு

● கே. எம். ஸ்வீட்முருகன்,
கரடிகொல்லப்பட்டி.

*? ரயில், விமானம், பஸ்... எதில் பயணம் செய்ய சுகமானது?*

! விமானம் நேரத்தை மிச்சப்படுத்துகிறது – குறிப்பாக நெடுந்தூரப் பயணத்தின் போது. ஆனால் கட்டி வராது. பஸ்ஸில் உட்கார்ந்தால், அவ்வளவுதான்! சிறைப்பட்ட மாதிரி ஏழெட்டு மணி நேரம்... அவதிதான். இரவு ரயில் – அதிலும் ஒரு ஸ்லீப்பர் ரிஸர்வ் பண்ணிவிட்டால் சுகம். பகல் பொழுதும் வீணாகாது; பயணமும் முடியும்!

● கே. பூனிலா சேகர், பெங்களூர் – 53.

*? 'அ.தி.மு.க. ஆட்சியில் நடந்த ஊழல்களுக்கு ஜெயலலிதா பொறுப்பு அல்ல. நாங்கள் நல்ல மீன்தான் வாங்கி வரச் சொன்னோம். அதிகாரிகள் கெட்ட மீனை வாங்கி வந்து விட்டார்கள்' என்று நெடுஞ்செழியன் கூறியிருப்பதைப் பற்றி...?*

! 'கெட்ட மீனை சில அதிகாரிகள் வாங்கி வந்தாலும் சமைத்து ஜெயலலிதாதானே? மற்ற அமைச்சர்கள்தானே! ஏன் தட்டிக் கேட்கவில்லை...?' என்று வீரப்பன் பதில் கூறியிருக்கிறார். தவிர, கெட்ட மீன் என்று எச்சரித்த அதிகாரிகளும் உண்டு. அவர்கள் பேச்சு அம்மையாரிடம் எடுபடவில்லை!

தயார் செய்து எழுதிப் படிப்பது எவ்வளவோ மேல்!

● வி. சத்தியப்பிரியன், சென்னை – 15.

*? கல்வி நிறுவனங்களில் 'ராகிங்' செய்தால் இரண்டு ஆண்டு ஜெயில் தண்டனை விதிக்கப்படும் என்ற தமிழக அரசின் புதிய சட்டம் பற்றி...?*



• சிறப்புச் சலுகை!

# அன்று வீரவணக்கம் சொன்னவர்

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

*? 'பேரவை உறுப்பினர்கள் எழுதி வைத்துப் படிக்காமல் குறிப்புகள் மட்டும் வைத்துக் கொண்டு பேச வேண்டும்' என்று முதல்வர் கூறுகிறாரே?*

! எல்லோருமே பேச்சாளர்களாகவோ சமயோசிதமாகப் பேசக் கூடியவர்களாகவோ இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. அனைத்து உறுப்பினர்களும் அவ்வாறு அமைய மாட்டார்கள். தப்பும் தவறுமாகப் பேசிவிட்டு பின்னர் பத்திரிகை செய்திகளுக்கு மறுப்பு விடுவதைக் காட்டிலும், நன்றாக யோசித்து,

> ❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
> எஸ். விஜயலதா.
> 131, சின்னக்கடைத் தெரு,
> தூத்துக்குடி - 628 001.

! வரவேற்கிறேன். இன்னொரு ஜான் டேவிடை நாடு தாங்காது என்பது ஒருபுறமிருக்க, ராகிங் என்கிற பெயரில் செய்யப்படும் சிறிய சிறிய அவமானங்கள் கூட மனிதாபிமானமற்றவை; மாணவனை சுயகௌரவம் இழந்து நிற்கச் செய்பவை.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? சேஷன் கார்டுக்கான படம் எடுப்பதற்கு எல்காட் நிறுவனமும் மாநகராட்சி அதிகாரிகளும் முதல்வர் வீட்டுக்கே போயிருக்கிறார்களே...? சட்டத்தின் முன்பு எல்லா வாக்காளர்களும் சமம் என்றால் இது எப்படி சரியாகும்?*

! கலைஞர் போன்றவர்கள் வாக்குச்சாவடிக்குப் போய்ப் படம் எடுத்துக் கொள்ளும்போது இதர வாக்காளர்களுக்கு இடைஞ்சலாகவே முடியக்கூடும் என்பதால் இருக்கலாம். இந்தச் சலுகை அவர் குடும்பத்தில் பிறருக்குக் காட்

டப்பட்டதா என்று தெரியவில்லை. காட்டக் கூடாது என்பது தெரியும்! மூப்பனார் வாக்குச் சாவடிக்குப் போய்த்தான் படம் எடுத்துக் கொண்டிருக்கிறார்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? 'வருமான வரி கட்டாமல் எத்தனையோ நடிகர்கள் இருக்கிறார்களே. அவர்களை ஏன் கைது செய்யவில்லை?' என்று நெடுஞ் செழியன் கேட்டிருக்கிறாரே?

! இப்படியெல்லாம் வக்காலத்து வாங்கும் நாவலரைப் போய், முன்பு 'உதிர்ந்த ரோமம்' என்று ஜெ. சொன்னாரே...! ஹூம்...!

● மஞ்சுதேவன், மும்பை – 86.

? மனநிறைவு, மன நிம்மதி – என்ன வித்தியாசம்?

! நிம்மதி – ஊழல் கட்சி தோற்றது என அறியும் போது ஏற்படுவது. நிறைவு – அடுத்த கட்டமாக, ஊழல் இல்லாத ஆட்சி தொடரும் போது உண்டாவது. கொடுப்பினை இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.

● கு. அருணாசலம், தென்காசி.

? விலைவாசி உயர்வுக்கு 'அரசு ஊழியர் சம்பள உயர்வு'தான் காரணம் என்று கிராமப்புறங்களில் பேசப்படுவது பற்றி...?

! அடடா! அப்படியா? விலைவாசி உயர்வுதான் அரசு ஊழியர்களின் சம்பள உயர்வுக்குக் காரணம் என்று அல்லவா நினைத்தேன்! தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்கு தொன்னை ஆதாரமா...? என்கிற கதைதான்!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? 'மணமேடையில் மாப்பிள்ளையாக அமர்ந்ததைத் தவிர வேறு எதுவும் தெரியாது' என்று சுதாகரன் போலீசில் கூறியிருப்பது பற்றி...?

! கையில் ஒரு கிலுகிலுப்பையும் வாயில் நிப்பிளும்தான் பாக்கி! அட போங்க சார்!

● எஸ். கலாசுப்பிரமணியன், முதலமடை.

? லஞ்சம் – ஊழல் – இதற்கு முக்கிய காரணம் அதிகாரிகளா? அரசியல்வாதிகளா? பொதுமக்களா...?

! அரசியல்வாதிகளையும் அதிகாரிகளையும்


• குவா! குவா!


• பிடிக்காத பழக்கம்

அணுக வேண்டிய நிர்பந்தத்துக்கு மக்களை ஆளாக்கும் ஆட்சி முறை!

● கே. சரவணன், ஈரோடு – 1.

? ஈரோடு அருகே, செந்தம்பாளையத்தில் காந்திக்கும் கஸ்தூரிபாவுக்கும் கோயில் கட்டப்பட்டிருக்கிறதே?

! காந்தி கோயில் என்பது புதிய விஷயமல்ல; ஆனால் காந்திஜி நிச்சயமாய் விரும்பாத விஷயம். எப்போதும் போல் கொள்கைகளைப் பறக்க விட்டுவிட்டு மனிதர்களை மட்டும் தெய்வங்களாக்கி வருகிறோம்.

● சிவாஜி, ரேக்களூர்.

? குறள், ராமாயணம், பாரதம் போன்றவற்றை இப்போது ஏன் படைக்க முடியவில்லை?

! காலத்தை வென்று நிற்கக்கூடிய இலக்கியங்கள், காவியங்கள் இன்றைக்குப் படைக்கப்படவில்லை என்பதை நீங்களும் நானும் எப்படி சொல்ல முடியும்? எதிர்காலம்தான் அதை நிர்ணயிக்கும்.

● மல்லிகை மன்னன், முடக்காத்தான்.

? 'ஊழல் கட்சி என்று உலகில் எந்தக் கட்சியுமே இல்லை' என்று நெடுஞ்செழியன் சொல்கிறாரே?

! 'வேறு எந்தக் கட்சியும் இல்லை' என்று சொல்ல வந்தவர், 'வேறு' என்ற வார்த்தையை விழுங்கியிருப்பார் என்று நினைக்கிறேன்.

● எஸ். விஜயலதா, தூத்துக்குடி – 1.

## இன்று எச்சரிக்கை விடுக்கிறாரே?

? அன்று வீரவணக்கம் சொன்னவர் இன்று எச்சரிக்கை விடுப்பது பற்றி...?

! 1. காலத்தின் கட்டாயம்.

2. அரசியல் முதிர்ச்சி.

3. அன்று வீர வணக்கத்துக்கு உள்ளானவர்கள் பின்னர் நடந்து கொண்டவிதம்.

● ச. சரண்யா தேவி, விருதுநகர்.

? தலைவர்களுக்குச் சிலை அமைப்பதனால் பயன் உண்டா?

! சிற்பிகளுக்குப் பயன்தானே! ஆனால் ஒன்று... சிலைகள் அமைப்பதில் நமது சிற்பிகள் கற்பனைத் திறன் காட்டுவதில்லை என்பதும் ஒரு சோகம். அதனால் ஓரிரு சிலைகள் தவிர மற்ற எல்லாம் 'டல்' அடிக்கின்றன. □


• சரியான பதில்!


• வலுவான வக்காலத்து!

# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும்

# வாரம் ஒரு சவரன்!

• சென்ற வருடம் ஏப்ரல் இரண்டாம் தேதி மாலை என் கணவர் இறந்து போனார். துக்கமும் வருத்தமுமாக நான் அழுது கொண்டு இருந்த நேரம். என் தோழி ராஜம் மெல்ல என் அருகே வந்து, "உன் கணவர் கண்தானம் செய்ய எழுதி வைத்திருந்தாரே, கண் வங்கிக்கு போன் செய்தாயா?" என்று தயங்கியபடி கேட்க, அப்போதுதான் நான் அந்த விஷயத்தையே மறந்து விட்டிருந்தது ஞாபகம் வந்தது. உடனே விரைந்து செயல்பட்டேன். மருத்துவர்கள் வந்து, அவர் கண்களை எடுத்துப் போனார்கள். தக்க நேரத்தில் என் தோழி ஞாபகப்படுத்தியதால் என் கணவரின் கண்கள், வேறு இருவருக்குக் கிடைத்ததை எண்ணி இன்றும் சந்தோஷப்படுகிறேன்.

ஸ்ரீரங்கம், என். சகுந்தலா.

• பாரதப் பிரதமர், அமெரிக்க அதிபர் போன்றவர்களுக்கும் உங்களுக்கும் சம அளவில், ஒரே செல்வம் - ஒரு நாளைக்கு 24 மணி நேரம்:

'நேரமே இல்லை' என்ற வாக்கியத்தின் பொருள், 'எனக்கு மனமில்லை' என்பதே:

விடியற்காலை எழுந்து விடுவது நல்லது. தூக்கம் வருகிறது என்று சொன்னால் அது பொய்:

எந்த வேலையையும் குறிப்பிட்ட நேரத்தில் முடிக்க வேண்டும் என்பதற்காகவே கடிகாரம் கண்டுபிடிக்கப்பட்டது.

- சமீபத்தில் ஒரு கட்டுரையில் இந்தப் பகுதியைப் படித்தபோது நேரத்தின் அருமை விளங்கியது.

சென்னை - 93. ராதா சுந்தரம்.

• எங்கள் நிறுவனத்துக்கு ஒரு இளம் பொறியியல் வல்லுநரைத் தேர்வு செய்ய, ஒரு பொறியியல் கல்லூரியில் இறுதியாண்டு மாணவர்களிடையே 'இன்டர்வியூ' நடத்தினோம். இன்டர்வியூ நடத்தவிருந்த மூவர் குழுவில் நானும் ஒருவன். ஆனால் விமானத் தாமதத்தால் நான் மூன்று மணி நேரம் தாமதமாகச் செல்ல நேரிட்டது. பேட்டியின்போது ஒரு மாணவன், "மூவரும் ஊரிலிருக்கும் நாளில் பேட்டி வைத்திருக்கலாமே! இவ்வளவு பேர் நேரம் வீணானதே!" என்றான். தலைவர் கோபத்தை மறைத்துக் கொண்டு, "அந்த மூன்று மணி நேரமும் நீ என்ன செய்தாய்?" என்றார். "உங்கள் மானே




ஜர் அனுமதியோடு, உங்கள் தொழிற்கூடத்தைச் சுற்றிப் பார்த்தேன். கல்லூரி சிலபஸுக்கும் நவீனத் தொழில் முறைகளுக்குமிடையே பெரிய இடைவெளி இருப்பது அப்போதுதான் புரிந்தது. புராஜெக்ட் ரிப்போர்ட்டுக்கு விஷயம் தேடிக்

இந்த வாரம் ஒரு சவரன் பரிசு பெறும் வாசகர்: **எஸ். சுகுமாரன்,**
Flat No. 4 - Block No.6, Skyline apartments, Nagarbhavi, Bangalore - 560 072.

# போட்டி -3/ நேரத்தின் அருமையை உணர்ந்தேன்/ தேர்வான துணுக்குகள்

கொண்டிருந்த எனக்கு ஓர் அருமையான சப்ஜெக்ட் கிடைத்து விட்டது'' என்றான்.

நேரத்தின் அருமையை உணர்ந்து, எங்களுக்கும் உணர்த்திய அந்த மாணவனுக்கே நாங்கள் மகிழ்ச்சியுடன் வேலை கொடுத்தோம்.

பெங்களூர் -72. எஸ். சுகுமாரன்.

• இன்டர்வியூவில் தேர்வாகி, எனக்கு அந்த வெள்ளைக்கார கம்பெனியில் வேலை கிடைத்த சமயம். முதல் நாள் வேலைக்குக் கிளம்பிய சமயம் என் வண்டி மக்கர் செய்ய, அதைச் சரி செய்து கிளம்ப, பதினைந்து நிமிடம் தாமதமாகி விட்டது. ஆங்கிலேய டைரக்டர் கோபம் கொண்டு, என் அப்பாயின்ட்மென்ட் ஆர்டரைக் கிழித்து எறிந்ததோடு மட்டுமல்லாமல் ''இந்தியர்களே இப்படித்தான்; நேரப்படி செய்ய எதற்கும் லாயக்கற்றவர்கள்'' என்று கத்தி விட்டுப் போய் விட்டார்.




பதினைந்து நிமிடத் தாமதத்தால் அந்த நல்ல வேலை போய், இன்றளவும் சரியான வேலை கிடைக்காமல் தவிக்கிறேன்.

நேரத்தின் அருமை பிறகு புரிந்தது. என்ன பிரயோஜனம்?

திருப்பூர். ப. சங்கர்.

• சமீபத்தில் காலமான கவிஞர் சேவற்கொடியோன் அவர்களை ஒரு பிற்பகலில் பார்க்கச் சென்றிருந்தேன். பேசிக் கொண்டிருந்த சமயம் அலாரம் அடித்தது. ''மூன்றரை மணிக்கு ஒருவரைப் பார்க்க வருவதாகக் கூறியிருந்தேன். புறப்பட்டுப் போகணும்'' என்றபடி எழுந்தார். நேரத்தைச் சரியாக, திட்டமிட்டுப் பயன்படுத்த வேண்டும் என்பதை அன்றுமுதல் நானும் கடைப்பிடித்து வருகிறேன்.

புன்செய்புளியம்பட்டி. ஆர். ரத்தினசாமி.

• சென்ற வருடம் ஆகஸ்ட் மாதம் - என் பிரசவ சமயம். என் கணவர் ஊரில் இல்லை. அன்று பார்த்து சரியான இடி, மழை! ஓர் ஆட்டோ, ரிக்‌ஷாகூடத் தெருவில் இல்லாத சமயம் எனக்கு வலி எடுத்தது. வேறு வழியில்லாமல் நடந்தே ஆஸ்பத்திரிக்குச் சென்றேன். சுமார் பதினைந்து நிமிட நடை! நான் ஆஸ்பத்திரிக்குள் நுழையவும் குழந்தையின் தலை வெளியே வரவும் சரியாக இருந்தது.



டாக்டர்களின் பெருமுயற்சியால் காப்பாற்றப் பட்டோம்!

## ஒரு நிமிடம் தாமதித்தால் உயிர் போயிருக்கும்!

அயர்லாந்து புரட்சிக்காரர்கள் இரண்டு பேர் ஒரு இடத்தில் குண்டு வைப்பதற்காக காரில் சென்று கொண்டிருந்தார்கள். அது டைம் பாம். குறித்த நேரத்தில் வெடிக்கக் கூடியது.

மடியில் அந்த குண்டை வைத்துக் கொண்டிருந்தவன் "மெதுவாகப் போ. குண்டு எந்த நிமிடமும் வெடித்து விடக் கூடும்" என்றான்.

வண்டியை ஓட்டியவன் சொன்னான். "அதைப் பற்றிக் கவலைப்படாதே. டிக்கியில் இன்னொரு குண்டு இருக்கிறது!"

— 'குஷ்வந்த்சிங்கின் நகைச்சுவை' நூலிருந்து
நெல்லை. வி. சிவா

சில வருடங்களுக்கு முன்பு சிசிலி நாட்டில் பாலெர்மோ நகரில், 56 வயது ஆன்டோனியோ பெர்செல்லி என்பவர் உடல் நலக்குறைவால் இறந்து போனார். அவரை ஒரு சவப்பெட்டியில் வைத்து கல்லறைக்குக் கொண்டு போனார்கள். குழிக்குள் அடக்கம் செய்தபோது ஆன்டோனியோ பெர்செல்லி உயிர் பிழைத்து விட்டார். ஆன்டோனியோ உயிர் பிழைத்த செய்தி கேட்டதும், அவரது மாமியார் திடுக்கிட்டு அதிர்ச்சியில் மரணமடைந்து விட்டார்!

ஜெர்மனியில் யார்க்ஷையர் டெர்னியர் என்னும் மினி நாய்க்குட்டி இனம் உள்ளது. இந்த நாய்க் குட்டியிடம் அப்படி என்ன அதிசயம் இருக்கிறது என்று தானே கேட்கிறீர்கள்? இதை ஒரு டீ கோப்பைக்குள் அடக்கிவிடலாம்! இந்த நாயின் விலை 50 ஆயிரம் ரூபாய்க்கும் அதிகம்!

— பழங்கூர் மீரா. முருகன்

சென்ற வாரம் தஞ்சை சென்றிருந்தபோது, பள்ளியக்ரஹாரம், கருந்தாட்டாங்குடி ஆகிய ஊர்களில் வழி நெடுக, 'கமல் ரசிகர் கைது' என்று கொட்டை எழுத்தில் நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்தது. என்ன, ஏது என உற்றுப் பார்த்ததில், 'ரொம்ப நாளாகப் பிடிபடாமல் இருந்த கமல் ரசிகரான இராமலிங்கம் என்பவரை, புவனேஸ்வரி என்பவர் கைது செய்கிறார்' என அச்சிடப்பட்டிருந்தது. கடைசியில்தான் தெரிந்தது. அது ஒரு திருமண வாழ்த்து(?)மடல் என்று.

— டி.என். பாலகிருஷ்ணன்.

தமிழ்நாடு சட்டமன்றத்தில் ஒரு முறை காங்கிரஸ் முதல் அமைச்சர் "ஆளுவதற்கு உரிய தகுதியை தி.மு.க பெற்றிருக்கவில்லை" என்பதை வலியுறுத்திக் கூறினார். பிறகு, "எங்களை எந்தக் காலத்திலும் பதவியிலிருந்து அசைக்க முடியாது" என்றார் அவர்.

அதற்கு பதில் அளிக்கும் முறையில் அறிஞர் அண்ணா "செஞ்சிக்கோட்டைக்கு மதிப்பு ஒரு காலத்தில் இருந்து வந்தது. அந்த மதிப்புக்குக் காரணம் தேசிங்கு ராஜன். அவன் செஞ்சிக் கோட்டைக்கு அதிபதியாக இருந்தவரைதான் அதெல்லாம்.

இப்பொழுது அதே செஞ்சிக் கோட்டையில் இடையர்கள் ஆடு, மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களால் செஞ்சிக் கோட்டைக்கு மதிப்பு என்று சொல்லி விட முடியுமா? அப்படித்தான் இருக்கிறது உங்களுடைய 'அசைக்க முடியாது' என்ற பேச்சு!" என்றார்.

ஆதாரம்: 'அண்ணா உதிர்த்த முத்துக்கள்'
திராவிடமணி மேகநாதன்

"ஒரு நிமிடம் தாமதித்திருந்தாலும் இரு உயிரும் போயிருக்கும். தாமதிக்காமல் நடந்தே வந்ததைப் பாராட்டுகிறோம்" என்று அவர்கள் சொன்னபோது சந்தோஷமாக இருந்தது.

விஜயவாடா-10. சாயீஸ்வரி குட்டிசேகர்.

• *என் பெண்ணுக்கு 22 வயதாக இருந்தபோது, நிறைய ஜாதகங்கள் வந்தன. "நல்ல நேரம் வந்திருக்கிறது, திருமணத்தை சீக்கிரம் முடித்து விடுங்கள்" என்று ஜோசியர் சொன்னார். ஆனால், 'அதற்குள் என்ன அவசரம்' என்று நினைத்தோம். இப்போது 32 வயதாகியும் அவளுக்குத் திருமணம் இன்னும் கைகூடவில்லை. அவள் ஜாதகத்தைப் பார்க்கும் ஜோசியர்கள், "இந்த ஜாதகருக்கு 7-8 வருடங்கள் முன்பே திருமணம் ஆகியிருக்க வேண்டுமே" என்கிறார்கள். 'அப்போதே வந்தவற்றைத் தவற விடாதிருந்தால் இப்போது பேரன், பேத்திகளைப் பார்த்திருக்கலாமே' என்று எண்ணி வருந்தாத நாளே இல்லை!*

*பெங்களூர் - 29. கங்கா நாராயணன்.*

• ஒருவேலையில் சேர, தாலுகா ஆபீஸில் சில சான்றிதழ்கள் வாங்க வேண்டியிருந்தது. 'நாளை போகலாம்' என்று ஒருநாள் விட்டு விட்டேன். எம்.ஜி.ஆர் இறந்துவிட, அலுவலகங்களுக்கு விடுமுறை!

பரிதவித்து விட்டேன். கடைசி தேதி வெகு அருகில் என்பதால் பலர் காலில் விழுந்து, அடித்துப் பிடித்து, நிறையப் பணம் 'செலவு' செய்து, அலைந்து திரிந்து எப்படியோ வாங்கி, வேலையில் சேர்ந்ததும் தான் மூச்சு விட்டேன். இன்று நல்ல வேலையில் இருக்கிறேன். இந்த ஜென்மத்துக்கு இது போதும். நேரம் பொன் போன்றது என்பதை உறுதி செய்ய!

கீரனூர், சக்தி. முத்துகிருஷ்ணன்.

# கூடை கூடையாக கூப்பன்கள்!

**'உ**ள்ளே வரலாமா?' தொடரை எழுதியவர் யார் என்று கண்டுபிடிப்பதில் நம் வாசகர்கள் போட்டி போட்டுக்கொண்டு ஆயிரக்கணக்கில் கூப்பன்கள் அனுப்பித் திணறடித்து விட்டார்கள்!

தேவிபாலா என்றும் அனுராதா ரமணன் என்றும் நிறையப் பேர் எழுதியிருக்கிறார்கள்.

யூகத்தில் இரண்டாவது ராங்க் - ம.வே. சிவகுமார், கி. ராஜேந்திரன், பட்டுக்கோட்டை பிரபாகர்.

**உண்மையில் தொடரை எழுதியவர் - நம் கல்கி ஆசிரியர் சீதா ரவி!**

ரெகுலரான தொடர்கதை வாசகர்களுக்குக் கொஞ்சம் 'க்ளூ' மாதிரி உதவலாமே என்றுதான் இத்தொடர் ஆரம்பிப்பதற்கு முன் சில வாரங்களில் ஆசிரியரை ஒருசில சிறுகதைகள் எழுதச் சொல்லி, வெளியிட்டோம் - வாசகர்கள் 'நடை'யை அடையாளம் கண்டுகொள்ள.

பலர் சரியாகவே கணித்து எழுதியிருந்தார்கள்! அத்தனை பேருக்கும் பாராட்டுக்கள்.

இந்தப் போட்டி விவரம் தெரிந்தவுடனேயே, **"ரூ.12000/- மதிப்புள்ள தங்கநகையை நாங்கள் வழங்குகிறோம்!"** என்று உற்சாகமாக முன்வந்தார் **லலிதா ஜுவல்லரி** சுகுமாரன்.

சரியான விடை எழுதியவர்களுள் குலுக்கல் முறையில் தேர்வாகி, **லலிதா ஜுவல்லரி** வழங்கும் தங்க நகையைப் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி வாசகர்:

**ராஜீவி நரசிம்மன்**
21, 'Belvedere',
(Central Govt. Qrts.,)
Bhulabhai Desai Road,
Mumbai - 400 026.

**வாழ்த்துக்கள்!**

–ஆசிரியர் குழு



**கல்கியுடன் லலிதா ஜுவல்லரி இணைந்து வழங்கும் பரிசு!**

Lalitha

சக்கரம் இல்லாமலே பஸ் ஓடி சாதனை படைத்திருக்கிறது! சென்னை அண்ணா சாலையில் பி.ஆர்.அண்டு சன்ஸ் என்று பழைமையான ஒரு கடிகாரக் கடை உள்ளது. அதன் எதிரேதான் புராதனமான நமது பல்லவன் பஸ்ஸின் சக்கரம் உடைந்து, தனியே உருண்டு ஓடிவிட்டது! ஆனாலும் பஸ் நிற்க வில்லை! டிரைவர் அதை நிறுத்த அரும்பாடு பட்டு, வெகு தூரம் சென்று, சாலையை இடம் வலமாகப் பிரிக்கும் கம்பி வேலி மீது முட்டி மோதி, அதை ஒருநிலைக்குக் கொண்டு வந்திருக்கிறார்.

பஸ்ஸை விட்டு இறங்கிய 29 பயணிகளும் தாங்கள் உயிர் தப்பியதை நினைத்து அக மகிழ்ந்து போனார்கள். ஒருவரை ஒருவர் கட்டிப்பிடித்துக்கொண்டு 'உயிரோடுதான் இருக்கிறோம்' என்பதை உறுதிப்படுத்திக் கொண்டார்கள். அப்போது அந்தப் பக்கம் சென்ற ம.தி.மு.க. பேச்சாளர் ஒருவருக்கு, உற்சாகம் கரை புரண்டது. அந்த இடத்திலேயே பஸ் கூரையை மேடையாக்கி ஏறினார்!

"இதுவே ஒரு விமானமாக இருந்திருந்தால், தரை இறங்கும் சமயம் சக்கரம் கீழிறங்காமல் முரண்டு பண்ணியிருந்தால், விமானத்தை சோப்பு நுரை மீது வழுக்கலாக பைலட் பத்திரமாக இறக்கியிருந்தால் எவ்வளவு பாராட்டுக்கள் குவியும்? ஆனால் பஸ் ஏழைகளின் வாகனம்தானே என்பதால் மைய அரசும் அதிலே அங்கம் வகிக்கும் தி.மு.க. வும் கருணாநிதி அரசும் அலட்சியப் படுத்துகின்றன! உண்மையில் அந்த விமானியை விட நமது பஸ் ஓட்டுனர் ஒளிவண்ணனின் சாமர்த்தியம்தான் அதிகம்! ஒரு சக்கரம் கழன்று போன பிறகும் பஸ் குடைசாயாமல் சமாளித்துச் செலுத்தியிருக்கிறார். வலப்புறமாகச் சென்று, சாலையைப் பிரிக்கும் இரும்புக் கம்பிகள் மீது மோதுவதற்குப் பதில், இடப்புறமாகச் சென்று நடைபாதை மேல் ஏறியிருந்தால் விளைவை நினைத்துப் பார்க்கவே நடுக்கமாக இருக்கிறது! எனவே, ஓட்டுனர் ஒளிவண்ணனின் சமயோசிதத்தைப் பாராட்டி அவருக்கு "நடைபாதைக் காவலர்" என்று எங்கள் தலைவர் வைகோ. சார்பில் பட்டம் சூட்டுகிறேன்" என்றதும் எல்லோரும் கைதட்டி ஆமோதித்தனர்.

பெரும் கூட்டம் சேர்ந்துவிட்டது. ஒரு டிராஃபிக் போலீஸ்காரர் 'வாக்கிடாக்கி' பயன்படுத்த, விஷயம் வெகு சீக்கிரம் கமிஷனர், ஐ.ஜி. என்று துள்ளிக் குதித்துக் கொண்டு முதல்வர் காதுகளை எட்டியது. அவர், "நான் இன்னும் ராமதாஸ் அளித்த ஏமாற்றத்திலிருந்தே விடுபடலை; பொன்முடியைக் கூப்பிட்டுச் சொல்லுங்க" என்றார். அடுத்த சில நிமிஷங்களுக்குள் சிவப்பு விளக்கு சுழன்று எரிய, பொன்முடி காரில் விரைந்தார்.

இதற்குள் கம்யூனிஸ்டு சார்புள்ள அடுத்த பேச்சாளர் பஸ் மேடை ஏறி, தமது திறமையைக் காட்ட ஆரம்பித்திருந்தார். "விமானத்தில் ஒரு திடீர் கோளாறு என்றால் அதைப் பயணிகளுக்குத் தெரிவிக்காமல் சாமர்த்தியமாக நடந்து கொண்ட உபசரணைப் பெண்ணை (ஏர்ஹோஸ்டஸ்) ஆகா ஓகோ என்று ஏகமாகப் பாராட்டுவார்கள். ஆனால்

செம்பியன்



நமது நடத்துனர் நடராஜனை வாழ்த்து வாரில்லை. உழைப்பாளரின் உயிர்நாடி அறிந்த எங்களுக்குத்தான் அவர் ஆற்றல் புரியும். இந்த ஓட்டை பஸ்ஸில் உள்ள சகல விதமான கோளாறுகள் பற்றியும் நடத்துனர் நடராஜனுக்கு ஏற்கெனவே தெரியும்! என்றாலும் பயணிகள் பதற்றமடைந்து விடக் கூடாதே என்பதால் மௌனமாக, அமைதியாக இருந்திருக்கிறார். எனவே இவருக்கு "நடத்துனர் திலகங்களின் சிகரம்" என்ற விருது வழங்குவதில் பெருமைப்படுகிறேன்."

இந்தச் சமயத்தில் அமைச்சர் பொன் முடி ஸைரன் ஒலிக்க அங்கு வந்து சேர்ந்தார். பஸ்ஸின் கூரை மீது ஏறினார் : "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே உருவானது நமது தமிழர் நாகரிகம் என்பதை உணர்த்துவதே போன்ற பழங்கால பல்லவன் பஸ்கள் இவை. இவை ஏன் ஜெ. ஆட்சிக் காலத்தில் புதுப்பிக்கப்படவில்லை? பணத்தைச் சுருட்டத்தான் எல்லாரும் தயாராக இருந்தார்களேயொழிய, பஸ்களைப் புதுப்பிக்கவில்லை. அதனால்தான் ஜெ. ஆட்சி கவிழ்ந்ததும் போட்டி அ.தி.மு.க. பிரிந்தது போல் இந்த பஸ்ஸின் சக்கரமும் பிரிந்து போய் விட்டது! இனி கலைஞர் ஆட்சியில் புதிதாக 4321 பஸ்களுக்கு ஆர்டர் தந்திருக்கிறோம். அவை கி.பி. 2005-ம் ஆண்டு ஓட ஆரம்பிக்கும்போது இப்படி பஸ் கூரையைப் பொதுக் கூட்ட மேடையாக்க அவசியம் இராது. கலைஞரைப் பாராட்ட பஸ்ஸுக்குள்ளேயே மேடை அமைத்து, மைக் வசதியும் செய்து தரப்படும்!"

செய்தி கேள்விப்பட்டதும் மூப்பனாரால் விரட்டப்பட்டு சொக்கர் அவசரம் அவசரமாக வந்து சேர்ந்தார். தோழமைக் கட்சிக்காரருக்குக் கைகொடுத்து பொன் முடி, பஸ் கூரை மீது அவரை ஏற்றி விட்டார்.

"பஸ்ஸுக்கு பிரேக் போல ஆட்சிக்கு எதிர்க் கட்சி, பத்திரிகை ... என்ற பிரேக் இல்லாத அரசு என்ன ஆகும் என்பதைத்தான் மோதி நிற்கும் இந்த பஸ் உணர்த்துகிறது. ஜெ. அரசுக்கு இந்த கதிதான் நேர்ந்தது. எனவேதான் தி.மு.க. ஆட்சியில் நாங்கள் தோழமைக் கட்சியானாலும் எதிர்க் கட்சியாகவும் இயங்கி பிரேக் போடுகிறோம். பிரேக்கில் 'டைடன் பிரேக்' ஒரு ரகம். அது மூப்பனாருக்கே கைவந்த கலை! அதனால்தான் அவர் ஐ.மு.வுடன் காங்கிரஸ் தேர்தல் கூட்டணி அமைக்க திடீர் அழைப்பு விடுக்கிறார்...

பஸ்ஸில் பயணப்பட்டு இப்போது வீதியில் நின்ற பயணிகள் சிலருக்கு பசிக்க ஆரம்பிக்கவும் வீட்டு நினைவு வந்து விட்டது. தைரியத்தைத் திரட்டிக்கொண்டு ஒருவர், "சொற்பொழிவுகள் போதும்; மாற்று பஸ் வந்து, நடத்துனர் டிக்கெட்டில் கையெழுத்துப் போட்டு எங்களை ஏற்றிவிட்டால் வீடு போய்ச் சேர்வோம்" என்றார்.

அடுத்தகணம் அங்கே அரசியல் தலைவர்களைக் காணோம்! சொல்லாமல் கொள்ளாமல் கார்களில் ஏறி நழுவிவிட்டார்கள். பயணிகள் பஸ்ஸுக்குத் தவமிருக்கத் தொடங்கினார்கள்.



# சக்கரம் இல்லாத பஸ்!

## SUPER PAIN KILLER







A PROPRIETARY AYURVEDIC MEDICINE

ஆக்டிவ்

மூட்டு வலி, முதுகுவலி, சுளுக்கு இவைகளிலிருந்து உடனடி நிவாரணம்

Promoted by:

**India Plus Marketing**
**3, Ayya St., Chennai -3.**
**Ph: 5354738**

**Available at all medical shops**



## MAGNETIC MEMORY TALISMAN

Whatever you desire could be yours... Now nothing is impossible.

Once again by popular demand we are selling a limited number of these superb Talisman. They were in sensation in the 1970's and now they are available again.

To get success in any examinations to get results, to improve your Memory Power, to get promotional aspects in your job career, to get confidence with your educational / job career, use this wonderful Fortune Talisman prepared by Divine Astrologer/Occultist. **Thetiyur V. Mahadevan.**

Made from semi - precious object, each one is an example of Mother Nature's own, superbly creative skills - joy to see and a delight to hold.

Write your Name, Date, Time and place of birth and your Address with **DD payable at Chennai Rs. 750/-. Overseas Members Send 300 Percent extra.**



**Swayamvaralaya**
18, Station Road, West Mambalam,
Chennai - 600 033, Phone : 425822,
4846427 India.






ESTD : 1955 ஸ்ரீ Ph : 706823
PH : 704312

## 15 நாட்கள் பஞ்சதுவாரகை யாத்திரை

9.3.97 தேதி சென்னையிலிருந்து ஆரம்பமாகிறது. கட்டணம் ரூ. 3975 சென்னை, அகமதாபாத், கோமதி, துவாரகை, பேட்டி துவாரகை, நாகேஷ்வர், மூலதுவாரகை, போர்பந்தர், விர்பூர், அம்பாஜி. சோமநாத், டாக்கூர், துவாரகை, நாத்துவாரகை, காங்ரோலி துவாரகை, அஜ்மீர், ஜெய்ப்பூர், புஷ்கரம், உதயபூர், மவுண்ட் அபு மற்றும் பல க்ஷேத்திரங்கள்.

இந்த யாத்திரையில் திருவெண்காடு சுவாமி. திரு. அகோரமூர்த்தி லோகாம்பாள் தம்பதியர் திரு. தேவராஜுலு பாலசரோஜா தம்பதியர் திரு. பாலதேசிகன் பேபி தம்பதியர் திரு. பாபு சகுந்தலா தம்பதியர் திரு முனுசாமி பாஞ்சாலை தம்பதியர் திரு. பாலசுந்தரம் பிரேமா தம்பதியர் திருமதிகள். சுந்தரியம்மாள், ராம்பாய் அம்மாள் கமலாம்மாள் ரெங்கநாயகி அம்மாள் காஞ்சி திரு. பாலகிருஷ்ணன் திரு. சிவப்பிரகாசம் திரு. கணேசன் திரு. மணிக்கண்ணன் அவர்களும் கடலூர் திரு. நட்ராஜ பிள்ளை கஸ்தூரிபாய் தம்பதியர் திரு. நாராயணமூர்த்தி பானுமதி தம்பதியர் திரு. ராமச்சந்திரன் கோமேதகவல்லி தம்பதியர் திரு. ஆறுமுகம் லோகநாயகி தம்பதியர். திருமதி. ஜெயலெட்சுமி, கரூர் வைஸ்யா பேங்க் திரு. லெக்ஷ்மிநரசிம்மன் பிரேமகுமாரி தம்பதியர் கும்பகோணம் கமலா அரக்கோணம் பிரேமா மாம்பலம் பட்டம்மாள் சேலம் திரு. தொட்டண்ணன், திருச்சி திரு. கசமுத்து தம்பதியர் முதலானோர்கள் சேர்ந்துள்ளனர். இன்னும் 9-வது ரோவில் 5 இடங்களே உள்ளன.

**22, 33 நாட்கள் கொண்ட பத்ரிநாத், கேதார்நாத், நேபாள், காசியாத்திரை** 29.3.97, 11.5.97 ஆகிய தேதிகளில் திருச்சி சென்னையிலிருந்து ஆரம்பமாகிறது.

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,**
34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.
K.E. NAMPILLAI N.K. SEKAR PH : 704312



## கவிஞர் எஸ். வைத்தீஸ்வரன்



• வைத்தீஸ்வரன்

# "பாட்டில் மயங்கி காதலிக்க முடியுமா?"

### மூழ்காத ஷிப்:

லயோலா கல்லூரி. பி.எஸ்ஸி., காலாண்டுத் தேர்வு எழுதிக் கொண்டிருந்தேன். எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்து தேர்வு எழுதிக் கொண்டிருந்தவன் கணேசன். ஒரே வகுப்பு என்றாலும் நாங்கள் ஓரிரு வார்த்தைகளுக்கு மேல் பேசிக் கொண்டதில்லை.

அந்தக் கணிதத் தேர்வில் என் பேனாவை மேஜையின் மீது ஒருகணம் வைக்க, அது தவறிப் போய்க் கீழே விழுந்து விட்டது. அதன் நிப்பும் உடைந்து விட்டது. வேறு பேனாவும் கைவசமில்லாத நான் கவலைப்பட, பார்த்துக் கொண்டிருந்த கணேசன், சட்டென்று தன் பேனாவை என்னிடம் கொடுத்தான். அவனிடமும் மாற்றுப் பேனா இல்லை.

வெளியில் வந்தபோது இதுபற்றி விசாரிக்க, "பாஸாகும் அளவுக்கு நான் எழுதிட்டேன். பேனா இல்லாததால் நீ பெயிலாகக் கூடாது இல்லையா? இந்த ஒரே பேனாவுக்கு நம்ம ரெண்டு பேரை பாஸ் பண்ண வச்ச புண்ணியம் கிடைச்சுடுச்சு" என்று சிரித்தான். சோடா புட்டி கண்ணாடி, பெரிய மூக்கு, அகலமான முகத்துக்குப் பொருந்தாத மிக ஒல்லியான உடல்வாகு, மிக ஏழைமையான பொருளாதாரப் பின்னணி போன்ற காரணங்களால் பலரும் பழகுவதில் ஆர்வம் காட்டியிராத கணேசன், எனக்கு உயிர்த் தோழன் ஆனான்.

படிப்பில் ரொம்ப கெட்டிக்காரன். பாடங்களில் சந்தேகம் கேட்டால் ஓரளவு விளக்கி விட்டு, "இது போதும். நம் வாழ்க்கையிலே படிப்புக்கு ஓரளவு இடம் ஒதுக்கினா போதும்" என்பான். கவிதைகளிலும் கதைகளிலும் அவனுக்கு நிறைய ஆர்வம் உண்டு! "கல்கியின் சிவகாமியின் சபதம் படிச்சிருக்கியா? காண்டேகரின் நாவல் ஒன்று மொழிபெயர்ப்பாகி வந்திருக்கே?" என்றெல்லாம் என்னைக் கேட்டு, கதைகளில் எனக்கு ஈடுபாட்டை உண்டாக்கியவன் கணேசன்தான்.

கணேசன் வீட்டுக்குப் பக்கத்திலேயே 'ஸ்டார்' தியேட்டர். அங்கு பெரும்பாலும் அப்போது இந்திப் படங்கள்தான் திரையிடுவார்கள். அவற்றிற்கான விளம்பர போர்டுகள் கணேசனின் வீட்டு வாசலில் மாட்டியிருப்பார்கள். இதற்காக மாதத்துக்கு ரெண்டு இலவச பாஸ் உண்டு. தவறாமல் என்னை அழைத்துப் போவான். நௌஷத் இசையின் மீது அவனுக்கு ரொம்பப் பிரியம். சைகல் போலவே பாடல்களைப் பாடுவான். இந்தி தெரியாத நான் அதே ட்யூனுக்குத் தமிழில் வரிகளைப் போடுவேன். என் கவிதை விதை இப்படித்தான் தூவப்பட்டது. கல்லூரி நாடகங்களில் நான் எழுதிய பாடல்களை அவன் பாடுவான். நல்ல வரவேற்பு. இறுதித் தேர்வில் மிக நல்ல ராங்க்கில் பாஸ் செய்தான். இருவருமே வேலை தேடிக் கொண்டிருந்த அந்தச் சமயத்தில் பீச்சுக்கு அடிக்கடி போவோம். ஒரு










நான் "கடற்கரைக்கும் வேர்க்கடலைக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டுவிட்டு "நாம் பார்ப்பதும் கடலை. தின்பதும் கடலை" என்று கூறிச் சிரித்தான்.

அவனுடைய குடும்பப் பின்னணி பரிதாபமானது. அப்பா வீட்டை விட்டு ஓடிப் போய்விட, அதற்குப் பிறகு யாரையுமே நம்ப முடியாமல் போய், எடுத்ததற்கெல்லாம் கோபம் கொண்டாள் அவனது அம்மா. இரு அண்ணாக்களில் ஒருவனுக்கு உடல் ஊனம். இந்தச் சூழலில் வேலையும் கிடைக்காத நிலையில், நிராசையான முகமும் விரக்திப் பேச்சுமாக மாறிப் போனான் அவன்.

ஒருநாள் "பாட்டைக் கேட்டு மயங்கி ஒருத்தி காதலிக்க முடியுமா?" என்று கேட்டான். "என்னடா, எவளாவது பக்கத்து வீட்டுப் பெண் உன் பாட்டிலே மயங்கி உன்னை லவ் பண்ணுவான்னு நினைக்கிறியா?" என்று நான் கலாட்டா செய்ய, அவன் சில நிமிடங்கள் மௌனமாக இருந்தான். பிறகு "அதெல்லாம் நடக்காதுடா. சினிமாவில் மட்டும்தான் இது சாத்தியம்" என்றான். அவன் தோற்றத்தைப் பற்றிய தாழ்வு மனப்பான்மை என்று நினைத்துக் கொண்டேன்.

ஒரு மாதம் சென்றிருக்கும். அன்று என் வீட்டுக்கு வந்தவன், இரவு எட்டரை மணியாகியும் கிளம்பவில்லை. பக்கத்து வீட்டுப் பெண்ணுக்கு அன்று ஜானவாசம் என்றான் மெல்லிய குரலில். எங்கள் வீட்டிலேயே சாப்பிடச் சொன்னேன். சாப்பிட்டான். அவன் கிளம்பும்போது "புதன் கிழமை மறுபடியும் சந்திக்கலாம்" என்றேன். "எந்த புதன்கிழமை?" என்று கேட்டு விட்டு வேகமாக நகர்ந்து விட்டான்.

ஒரு வாரம் கழித்து ஒருநாள் இரவு பத்தரை மணிக்கு கணேசனின் அண்ணா என் வீட்டுக்கு வந்தார். "கணேசனை மூன்று நாட்களாகக் காணோம். இங்கு வந்தானா?" என்றார். பதறிப் போய் எனக்குத் தெரிந்த இடங்களில் எல்லாம் தேடிப் பார்த்தேன். பலனில்லை.

அடுத்த நாள் அவன் வீட்டுக்கு சென்றிருந்த போது ஓவென்று ஓலம். தன் மீது ரயில் ஏறி, கணேசன் இறந்து விட்டிருந்தான். அவன் உடல் மார்ச்சுவரியில் கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. இது தானாக நேர்ந்த விபத்தா? அல்லது இவனாகத் தேடிக் கொண்ட முடிவா? குடும்பத்தில் பிரச்னைகள் உண்டு என்றாலும் ஒரு வேலை கிடைத்துவிட்டிருந்த அந்தக் கால கட்டத்தில் இவனுக்கு ஏன் இந்த முடிவு?

எனக்குள் பல கேள்விகள். வாழ்வின் பாஸிடிவான பல கோணங்களை எனக்குக் காட்டியவனுக்கு ஏன் அப்படியொரு நெகடிவ் க்ளைமாக்ஸ் அமைந்தது என்பதுதான் புரியவில்லை.

பேட்டி: அருண்சரண்யா






உன் கூந்தல் ஏறி தவழும் பூ
கோடி ரூபாய்...

- அதிக முடி உதிர்வை தடுக்கிறது
- அடர்த்தியான முடி வளர தூண்டுகிறது
- பொடுகை எதிர்க்கிறது
- இள நரையை தடுக்கிறது

அதிக மூலிகை அதிக சக்தி

தூய தேங்காய் எண்ணெயில் தயாரிக்கப்பட்டது.

எரிகா

ஹெர்பல் ஹேர் டானிக்

ERRICA
HERBAL HAIR TONIC
Very Effective

A Quality Product from:




DALE CARE

Brindavan, Pondicherry - 605 013.
M.R.P. 100 ml Rs. 29.50 - 200 ml Rs. 54.50 Available at all medical shops and General Stores in Tamilnadu and Pondicherry

LAYAM/ER/319/97



JAI BADRI VISHAL

சாளகிராம்–பத்ரி–கேதார்நாத்–யாத்திரைகள்–1997

**BADRI TOURIST**

*Smt. KALARAJAN*

249-D, Pocket C, Mayur Vihar Ph - II, New Delhi - 110091. Ph. : 2471779, 2476567.

1. சாளகிராம்–முக்திநாத்–காட்மண்டு–பசுபதிநாத் – **12 days** (21வது தடவை)
   புறப்படும் தினம் **9-4-97.** Fare Rs. 4,500/- (Flight charge extra).
2. காசி–கயா–அலகாபாத்–புஷ்கர்–ஜெய்பூர்–13 நாட்கள்
   புறப்படும் தினம் **25-4-97** Rs. 4000/- பத்ரி சேர்த்து Rs. 5,300/-.
3. பத்ரிநாத் மட்டும் ஹரிதுவார்–ரிஷிகேஷ் உட்பட – 7 நாட்கள்
   புறப்படும் தினங்கள் **1. 7.5.97 2. 18-5-97 3. 3-6-97** Fare Rs. 1,600/-
4. பத்ரி–கேதார்நாத்–ஹரிதுவார்–ரிஷிகேஷ் உட்பட – 10 நாட்கள்
   புறப்படும் தினங்கள் **(1) 7-5-97 (2) 18-5-97 (3) 3-6-97** Fare Rs. 2,200/-
5. பத்ரி–கேதார்நாத்–யமுனோத்ரி–கங்கோத்ரி–14 நாட்கள
   புறப்படும் தினம் **18-5-97** Fare Rs. 3,800/-
6. பஞ்சபத்ரி–சிம்லா–குல்லு–மணாலி யாத்திரிரைகளும் நடத்துகிறோம்.
   மேற்படி யாத்திரைகள் டில்லியிலிருந்து வசதியான பஸ், தென்னிந்திய பிராமணர்களால் தயாரிக்கப்படும் உணவு, தங்கும் வசதி (Dormitory) உட்பட யாத்திரைகளை டெல்லியிலிருந்து கலாராஜன் நடத்துகிறார்கள்.
   யாத்திரைப் பற்றி கீழ் கண்ட முகவரியிலும் தொடர்பு கொள்ளலாம்.

1. **Sh. R. Srinivasan, No - 5, 1st Floor, 2nd St., K.V. Colony, West Mambalam, Chennai - 33, Ph : 4894442 (R) 8546278 (O)**
2. **Sh. S. Rajagopalan, Flat No. 8, 6th Main Road, Nanganallur, Chennai - 600 061, Ph : 2342099**
3. **S. R. Somasundaram, "Vasanth", 604/68th Cross Road, Kumaraswamy Layout - 1, Bangalore - 560 078. Ph : 6637843**

# ஆயிரம்


இப்படி திருந்து வந்து கல்யாணம் ஆயாச்சுன்னு சொல்றியே... கல்யாணம் கூட ஆயிரம் காலத்து பயிர்டா...


கல்யாணப் பரிசு என்ன வேணும்?
சுவர் கடிகாரம் தவிர்த்து எதும் ஓ.கே.
அது மட்டும் ஏன் வேணாம்?
நிறைய பேர் அதான் கொடுக்க றாங்க...
அப்ப எனக்கு வந்த கடிகாரங்களை நான் என்னதான் பண்றது?


நம்ம தலைவரோட வீக்னஸ் நல்லா தெரிஞ்சும் அவரை திருமணத்துக்கு தலைமை தாங்க கூப்பிட்டது தப்பு...
ஏன் என்ன ஆச்சு?
தாலியை எடுத்து மாப்பிள்ளை கையால் தராம தானே பொண்ணு கழுத்தில் கட்டிட்டாரு...



# காலத்துச் சிரிப்பு!

என் வாழ்த்தினை பத்திப் பேசும்போது மாப்பிள்ளை வெளியால எழுந்து போயிட்டாரு...
அவர் வெளியால இருந்து ஆதரவு தாராரு...

மாப்பிள்ளைக்கு ஒரு லட்சம் தர்றதா சொல்லிட்டு, இன்னைக்கு ஒரு கவர் தர்றீங் -களே?
உள்ள பாருங்க... லட்சம் ரூபா பரிசுச் சீட்டு...! பரிசு விழுந்தா உங்களுக்கே உங்களுக்குத்தான்...



# WE ACCEPT DEPOSITS

## முத்துவேல்'ஸ் கோல்டன் ஜூபிளி பெனிபிட் பண்ட் லிமிடெட்

(Incorporated under Companies Act 1956)
Regd. No. 181-7336




**அறனீனும் இன்பமும் ஈனுந் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள்** -குறள் 754

நல்ல வழியில், எவருக்கும் தீமை செய்யாமல்
தேடிய செல்வம், அறத்தையும் தரும்,
நல் இன்பத்தையும் கொடுக்கும்.

அப்படி தேடிய செல்வம் மென்மேலும் பெருக
நம்பிக்கையான நிறுவனங்களை தேர்ந்தெடுத்து
சேமிப்பதே சிறந்த வழி!

வர்த்தகப் பரிவர்த்தனை
உறுப்பினர்களுடன் மட்டுமே




ADMAVE/MBF/5357 A

Launched by
**MUTHUVEL INDUSTRIES**
Pioneers in File making since 1947

## MUTHUVEL'S GOLDEN JUBILEE BENEFIT FUND LIMITED

Regd. Office: 20-A, Race Course Road,
DINDIGUL-624 005
Phone: (O) 26850, 27637
(R) 26858, 27011



## நீங்கள்
## அன்பை வெளிப்படுத்தும் ஆடவராக இருந்தால்...




தங்க பஸ்பம் அடங்கியது. பத்தியம் ஏதுமில்லை.

ஆருயிர் வாழ்வை அன்புடன் நேசிக்கும் ஒருவன், அதற்காக எதையும் கொடுக்கத் தயாராக இருக்கிறான். கொடுத்துப் பெறுவதில் கிடைக்கும் மகிழ்ச்சிக்குத்தான் அளவே இல்லையே! அத்தகைய ஆடவருக்குத் தேவை... **கிரௌன் காயகல்பம் காப்சூல்.** ஆற்றல் சக்தியைத் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் இந்தக் காப்சூல், மதிப்பில் சிறந்த பல மருத்துவ மூலிகைகள் மற்றும் தங்க பஸ்பத்தின் நன்மைகளை எல்லாம் கொண்டுள்ளது. இவை உங்கள் உடலைக் கட்டுறுதியுடனும், ஆற்றல் சக்தியுடனும், அதிக ஆரோக்கியத்துடனும் வைத்திருக்கும். 60 வயது ஆனாலும் 20 வயது இளமைத் துடிப்பை நீங்கள் உணரலாம்.

லேகிய வடிவிலும் தொடர்ந்து கிடைக்கிறது

கிரௌன்
# காயகல்பம் காப்சூல்
**கிரௌன் ஹெர்பல் பிராடக்ட்ஸ்**
78, அஷ்டபுஜம் ரோடு, சூளை, சென்னை 600 112
போன் : 8520155, 5321414, 5321515. ஃபேக்ஸ் : 8551899

ஒவ்வொரு காப்சூலிலும் உன்னத சக்தி

# எழுத முடியாத இலக்கியம்

ஏதேதோ ஆசைவந்து என்மனச அடிவருட
காதோரம் காத்து வந்து காதல் கவிதைசொல்ல
மாந்தோப்பில் வரவழைச்சு மாமமக எனைஅணைச்சு
பொங்கிவந்த ஆசையெலாம் உதட்டோரம் தேக்கிவச்சு
குத்தால அருவியில குளிச்சுவந்த முழுசுகத்த
குத்தகைக்கு எடுத்ததுபோல் முத்தம்ஒண்ணு தந்தாளே!
கணப்பொழுதில் நான்கண்ட கனவுச் சுகத்தையெலாம்
கணக்கெடுத்துப் பார்த்தாக்கா காயிதத்தில் அடங்காதே!

கம்பனாரு கவிதையையும் பாரதியார் பாட்டினையும்
கரைச்சுக் குடிச்சுப்புட்டு கவியெழுத நினைச்சாலும்
எச்சில் அமுதத்தை எழுதிவைக்க முடியாதே!
உதட்டோடு உதடுவச்சு உயிரோடு உரசுகிற
உள்ளார்ந்த உணர்ச்சிக்கு உரையெழுத இயலாதே!
அன்புக்கு அர்த்தம்சொல்ல அகராதி கிடையாதே!
புல்லுக்கு ஒத்தடமா அவநடந்து போவாளே!
சொல்லுக்குள் சொர்க்கத்தை சுருக்கிவைக்க முடியாதே!

– ஸ்ரீ. சதீஷ்குமார்.

# சளைக்காமல் சங்கீதம்!

இந்த 47 வயதில் எனக்கு இப்படி ஒரு ஆசை திடீரென்று புயல் போல் கிளம்பும் என்று நானே எதிர்பார்க்கவில்லை. தொடர்ந்து சென்னையில் சங்கீதக் கச்சேரிகள் கேட்கக் கேட்க, இது நாள் வரையில் வீட்டுக்குள்ளேயே பாடிப் பாடி, அதையே பெரிய விஷயமாக எண்ணிக் கொண்டிருந்த என்னை, நானும் ஒரு பெரிய வித்வான் ஆக வேண்டும் என்ற (விபரீத?) ஆசை பிடித்து உலுக்க ஆரம்பித்து விட்டது. தவிரவும், "நீங்க நல்லா பாடறீங்களே... ஏன் ஒரு வித்வான் கிட்ட போயி டெவலப் பண்ணிக்கக் கூடாது?"- என்று சில பேர் பல வருஷங்களுக்கு முன்னால் கேட்டதும், அதில் உள்ள "நீங்க நல்லா பாடறீங்களே"- என்றவர்கள் என் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து போனதும் முக்கியமான காரணமாய் இருக்கலாம்!

சின்னப் பசங்களைப் போல் என்னைக் காதைப் பிடித்துத் திருகியும், அதட்டியும் சொல்லித் தருபவராக இல்லாத, ஒரு வாத்தியாரைத் தேடிப் பிடித்தேன்... அவர், ஒரு பாயை எடுத்து விரித்து, அதில் உட்காரச் சொன்னார்.... உட்கார்ந்தேன்... எடுத்த எடுப்பிலேயே என்னைப் பற்றி அவருக்கு ரொம்ப நல்ல அபிப்பிராயம் உண்டாக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன். நான் ஒரு versatile ability உள்ளவன் என்பதை அவர் உணரும்படிச் செய்துவிட்டால் ஆடிப்போய் விடுவார் என்று எண்ணிக் கொண்டு, "நான் அநேகமாய் எல்லா பெரிய வித்வான்களைப் போலவும் பாடிக் காட்டுவேன்"- என்று, பேச்சில் கொஞ்சம் விநயம் கலந்து கூறினேன்.

"அப்படியா?... எங்கே, கொஞ்சம் பாடிக் காட்டுங்கோ... பாப்போம்!"

கொஞ்சமேனும் கூச்சமின்றி, டி.கே. ஜெயராமன், சேஷகோபாலன், நெய்வேலி சந்தான கோபாலன், டி.கே. கோவிந்த ராவ் ஆகியோர் பாடியுள்ள சில கீர்த்தனங்களிலிருந்து சில வரிகளை அப்படியே பாடிக் காண்பித்தேன்.

இதைக் கேட்ட அந்த க்ஷணத்திலேயே அவர் என்னைப் பற்றி ஒரு தீர்மானம் செய்து விட்டார் என்பதையும், அவர் தன்னுடைய அபிப்பிராயங்களை ரொம்ப நாசூக்காகப் புரிய வைப்பவர் என்பதையும் நான் இந்தக் கதை முடியும் வரையில் உணராமல் போனது தெய்வ ஸங்கல்பம் போலும்!

அவர் சொன்னார்: "சார்! மூஞ்சியைத் தூக்கி மேலே விட்டத்தைப் பாத்துண்டும், மொளகாப் பொடிக்கு நல்லெண்ணெய் சேக்கற மாதிரி வலதுகை வெரலைக் குவிச்சுண்டும், சப்ளாங் கொட்டினபடியே, இருக்கற எடத்துலயே எம்பி எம்பிக் குதிச்சுண்டும், ரெண்டு கையாலயும் ஏந்திரத்தைப் பிடிச்சுண்டு மாவரைக்கறாப்ல பண்ணிண்டும், பலவித போஸ்ல நீங்க ஒடம்பை அவஸ்தைப்படுத்திண்டு பாடினேள்... இதுலேந்து எனக்கு ஒண்ணு நன்னாப் புரியறது. ஒங்களுக்கு சாரீர பாவங்களைவிட சரீர பாவங்கள் நன்னா அத்துபடியாயிருக்கு...!"- என்று சற்றே விஷமம் கலந்த பார்வையோடு சொல்லிவிட்டு, "அது சரி, இப்போ ஆபேரிலே அந்த வரி பாடினேனே... சுகராஜ தரணீது பரிவாரு... இதுல, ஸகரீ... நிஸகமபா... அந்த 'பா' வர தோல்யோ? அந்த நெரவல்ல மேல் பஞ்சமத்தைப் போய் எட்டிப் பிடிங்கோ பாக்கலாம்"- என்றார்.

எனக்கோ, இந்த பஞ்சமம், நிஷாதம் ரிஷபம் போன்ற பெயர்களைக் கேட்டாலே கொஞ்சம் வெட்கம் கலந்த சிரிப்பு வந்துவிடும். தவிரவும், அவர் கேட்கும் 'மேல் பஞ்சமத்தை எட்டிப் பிடிக்கப் போய், எனக்கு ஏதேனும் ஆகி, உறவினர்களுக்குச் சொல்லி அனுப்பும்படி ஆகிவிட்டால் என்ன பண்ணுவது என்ற கவலையோடு, எதுவும் செய்யத் தோன்றாது அப்படியே சிலைபோல அமர்ந்திருந்தேன். அவர் என்னை ரொம்ப ரஸித்தபடி ஒரு தரத்துக்கு 'வெத்தலை சீவல்' போட்டுக் கொண்டு, "இத பாருங்கோ, ஒங்களுக்கு நல்ல grasp இருக்கு... வாஸ்தவம்... ஆனா இந்த வயசுக்கு மேலே மொதல்லேந்து கத்துண்டு ஒரு

லெவலுக்கு வரதுக்குள்ள இப்போ இருக்கற கொரலும் போய்டும்... நாக்கும் சரியாப் பொரளாது.... ஆச்சா!... அதுனால இப்ப நான் சொல்றாப்ல பண்ணுங்கோ... பேசாமே வயலின் டிரை பண்ணிப் பாருங்கோ... எனக்கென்னமோ அதுதான் ஒங்களுக்கு நன்னா ஸூட் ஆகும்னு தோணறது''- என்று சொல்லி விட்டு எழுந்து போய் விட்டார்.

**நா**ன் அதை அப்படியே நம்பினேன். இரண்டே நாளில் வயலின் மாஸ்டர் ஒருவரைப் பிடித்தேன். அவர் ஒரு வயலினை என்னிடம் தந்தார். நான் அதை வாங்கி வைத்துக் கொண்ட அழகைப் பார்த்து அவர் மிரண்டு போய் என்னைப் பார்த்த அந்தக் காட்சியை இப்போது நினைத்தாலும் எனக்குச் சிரிப்பு வருகிறது.

''என்ன சார் இது? வயலினைத் தலகீழா வெச்சுப் பிடிச்சுண்டிருக்கீங்க?'' என்று இரைந்தார். நான் உடனே சுதாரித்துக் கொண்டு, ''ஹிஹி,ஸாரி'' என்று சொல்லிவிட்டு வயலின் பொஸிஷனை மாற்றிக் கொண்டேன். முதன் முதலாக வயலினைக் குழந்தை போல, இடது தோளுக்கும், இடது தாடைக்கும் இடையில் அழகாக அமுக்கிக் கொண்டு, வலது கையில் அந்த bow-வை ஸ்டைலாகப் பிடித்துக் கொண்டவுடனேயே, என் மனதுக்குள் குன்னக்குடியின் அந்தச் சிரிப்பும், குதூகலமும் சேர்ந்து வந்து விட்டது. இனி வரவேண்டியது அந்த வித்வத் மட்டும்தான்!




முதலில் bowபண்ணுவது எப்படி என்று சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார்.

''என்ன சார்?... சவுண்டே வரலயே?.... ஆரம்பத்துல அப்படித்தான் இருக்குமோ?!...'' என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

''நீங்க வயலின் தந்தி மேலயே படாம, வெட்ட வெளிலே இழுத்தா எங்கேர்ந்து சவுண்ட் வரும்?''- என்று காட்டமாகக் கேட்டார்.

உடனே தந்தி மேல் வைத்து இழுத்தேன். கிரீச், கிரீச் என்று வினோதமாகக் கேட்டது. ''இது என்ன, அபஸ்வரமா கேக்கறதே?''- என்றேன்.

''அபஸ்வரம் கூட, கொஞ்ச நாள் வாசிக்கக் கத்துண்ட அப்பறம் தான் வர ஆரம்பிக்கும்!... இப்போ உங்களுக்கு வரது வெறும் சத்தம் மட்டும் தான்!''- என்றவர், ''போகப் போக வாவது சரியாயிடணும்''- என்று மேலே பார்த்து, பிரார்த்தனை பண்ணுவது போல சொல்லிக் கொண்டார்.

பிறகு, என் இடது கை விரல்களை தந்தி மேல் வைத்து, எப்படி கீழும் மேலுமாக இழுக்க வேண்டும் என்பதைக் கற்றுத்தர ஆரம்பித்தார். எனக்கோ, சீக்கிரமே விரல்களில் நல்ல வலி கிளம்பி விட்டது.

''எடதுகை வெரலையெல்லாம் யூஸ் பண்ணாம வாசிக்கவே முடியாதா?''- என்று கொஞ்சம் பவ்யமாகக் கேட்டுப் பார்த்தேன்.

''பாடப் புஸ்தகத்தை வேணா அப்படி வாசிக்கலாம்''- என்று கடுப்புடன் சொன்னவர், ஒரு தீர்மானத்துக்கு வந்தவராக, ''சார்! ஒங்களுக்கு வெரல்ல 'ஆர்த்ரைட்டிஸ்' ப்ராப்ளம் இருக்கறாப்ல தெரியறது. இல்லேன்னா இப்படி வெரல்ல சிக்கரம் வலி வராது. மேலயும், ஒரு ஏஜுக்கு மேலே வெரல்லாம் நம்ம இஷ்டத்துக்கு வளைஞ்சு குடுக்காது. அதுனால, ஒங்களுக்கு ஈஸியா ஒத்து வராப்ல ஒண்ணு சொல்றேன்''- என்று ஒரு 'பாஸ்' கொடுத்து நிறுத்தினார்.

''என்ன?''

'நீங்க புல்லாங்குழல் கத்துங்கோ... அது சீக்கிரமாகவும் வரும், வெரலுக்கும் அதிக ஸ்ட்ரெயின் இருக்காது. சும்மா, லேசா அந்தந்த 'ஹோல்ல' வெரலால பொத்திண்டா போறும்''- என்று சொல்லிவிட்டு, மேற்கொண்டு வயலினைப் பத்தி நான் பேசாமலிருக்கும்படி செய்ய, கொஞ்சம் விரோத பாவத்துடன் பார்த்து... 'சரியா?' என்றார்.

**நா**னும் மனம் தளராமல் அதற்கும் ஒரு

**திருமை விஜி**

குருவைத் தேடிப் பிடித்தேன்! தொடர்ந்து நாலு நாட்கள் போய் ஊதி ஊதிப் பார்த்தேன்... என்ன சாபமோ தெரியவில்லை... நாம் பலூனை ஊதும் போது கேட்குமே, அது போன்ற காத்து சத்தத்துக்கு மேல் குழலில் ஒன்றும் கேட்கவில்லை.

"ஏன் சார்... நான் கொஞ்சம் அசந்தால் எல்லா ஓட்டைலயும் எல்லா வெரலயும் வெச்சு அடைச்சுண்டு ஊதறேள்? எப்படி நாதம் வெளிலே வரும்?... காலண்டர்ல எல்லாம் பாத்துருப்பேளே... பகவான் கிருஷ்ணன் நடு ரெண்டு வெரலால மட்டும் லேசா பொத்திண்டு புல்லாங்குழலை வாசிக்கறாப்பல... அந்த மாதிரி வாசிக்கக் கத்துக்கணும். சொன்னாலும் காதுல வாங்கிக்க மாட்டேங்கறேளே...."

எனக்கு, எப்போது நாம் ஃப்ளூட் மாலியைப் போல் "சின்னஞ்சிறு கிளியே" வாசிக்கப் போகிறோம் என்ற ஆசை இருந்தது போல், என் குருவுக்கும், எப்போது என் கன்னத்தைப் பிடித்துத் திருகி நாலு அறை விடுவோம் என்ற ஆசை இருந்திருக்க வேண்டும்!

"சார், நீங்க ஒரு வாரமா விடாம ஊதினதுக்கு, சென்னைல இருக்கற எல்லா சைக்கிளுக்கும் காத்தடிச்சு, நாலு காசாவது பாத்துருக்கலாம்.. இவ்வளவு காத்துப் போனதுல ஒங்களுக்கு வந்த ஒரே ஆதாயம்... தொப்பை கொறஞ்சு ட்ரிம் ஆயிட்டேள்! மத்தப்படிக்கு வேற ஒரு பிரயோஜனமுமில்லை!" என்றவர், மற்ற வித்வான்களைப் போலத் தானும் தப்பிக்க எண்ணியது போல்,

"ஒங்களுக்கு ஏஜ் தான் காரணம்னுட்டு நான் நெனக்கறேன். அதுனால தான் நன்னா "தம்" பிடிச்சு நாபிக்கமலத்துலேர்ந்து காத்தை regulate பண்ணி விட முடியல்லே... இந்த ஸ்டேஜுக்கு மேலே இதெல்லாம் "ரிஸ்க்" வேறே! அதுனால, நீங்க வேற ஏதானும் கடம், மோர்ஸிங்-னு கத்துக்கப் பாருங்கோ"– என்று சொல்லித் தப்பித்துக் கொண்டார்.

சின்னஞ்சிறுவனாய் நான் இருந்த காலத்தில், மோர்சிங்கின் காதுக்கு ரம்மியமான ஒலியானது என்னை ரொம்பவும் உற்சாகப் படுத்தியிருக்கிறது. ஒரு நாள் என் நண்பன் ஒருவன் என்னிடம், "டேய் விஜி!.. இந்த




வாத்யத்தை வாய்க்குள்ளே வெச்சுண்டு வாசிக்கறப்போ ஒத்தருக்கு நாக்கு துண்டாய்ப் போயிடுச்சாம். எங்க தாத்தாவே சொன்னாருடா!"– என்று நிர்த்தாரணமாய்ச் சொன்ன பிறகு, அதில் ஏற்பட்ட மரணபீதியால், அன்று முதல், நானே வெறும் நாக்கினால்.. 'டொய்ங்.. டொய்ங்... ஜிஜு'வு ஜொய்ங்..." என்று வாசித்துக் கொண்டு கொஞ்ச காலம் சந்தோஷமாக இருந்தேன்! இது போலவே, அந்தக் காலத்தில், கடம் வாசிக்கிற

வர் என்றால் அவருக்கு வயிறு பெரிசா கடம் போலவே இருக்கணும் என்று சாஸ்திரம் இருப்பதாகத் தோன்றியதாலும், மேடையில் நாம் மட்டும் நாகரீகமின்றி சபை எதிரே சட்டையை அகற்றிவிட்டுக் கொண்டு உட்கார்ந்து வாசிப்பதில் எனக்கு இருந்த லஜ்ஜையாலும், அதிலும் எனக்கு சிரத்தை ஏற்படவில்லை.

இருந்தாலும், ''முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்''- என்று நேராக ஒரு மிருதங்க வித்வானைப் பிடித்தேன்.

அவர், முதலில் என்னிடம், ''உமக்கு லயஞானம் இருக்கான்னு தெரிஞ்சுக்க ஆசைப்படறேன். கச்சேரியெல்லாம் நிறைய கேட்டிருக்கீங்களா?'' என்றார்.

''ஓ... எக்கச்சக்கமாய்!''- என்று பெருமிதத்தோடு சொன்னேன்.

''அப்ப ஒண்ணு கேக்கறேன்... தனியாவர்த்தனம் விடறானே., அது முடிவடையற நேரத்தை எப்படிக் கண்டு பிடிப்பேள்?''- என்றார்.

''அது ஒண்ணும் பெரிய பிரமாதமில்லியே''- என்றேன் குஷியாக! ''அந்த வயலினிஸ்ட் எப்போ, தான் தாளம் போடறதை நிறுத்திட்டு வேஷ்டியை அவசரமா சரி பண்ணிண்டு, வயலினை ரெடியா எடுத்து மடில வெச்சுக்கறாரோ, அப்ப தனியாவர்த்தனம் முடிஞ்சுடப் போறதுன்னு 'க்ளியர் கட்டா' வெச்சுக்கலாம்'' என்று சொல்லிவிட்டு, மந்தஹாசப் புன்னகையோடும், வெற்றிக் களிப்போடும் அவரைப் பார்த்தேன்.

ஆனால் அவரோ, சப்த நாடியும் ஒடுங்கினவராய், ஒரு முகூர்த்த காலம் ப்ரம்மத்தில் லயித்தவர் போலக் காணப்பட்டார். பிறகு இந்த உலகிற்கு மீண்டு வந்தவராய், தன் குரலைச் செருமிக் கொண்டு,

''உங்களுக்கு, தாளம் வேதாளம் தான்''... என்று உறுமிவிட்டு, ''வேணும்னா தம்பூரா கத்துக்க ட்ரை பண்ணுங்க'' என்று சொல்லி விரட்டாத குறையாக என்னை எழுப்பி அனுப்பிவிட்டார்.

கொஞ்சம் நிதானமாக யோசித்ததில், அதுவும் சரிதான் என்று உணர்ந்து, ஒரு வார காலம் தேடியலைந்து, நாற்பது வருடமாய்




தம்பூரா வாசித்து அனுபவம் வாய்ந்த ஒரு தாத்தாவிடம் போனேன்... அதிலும் ஒரு இடைஞ்சல் வந்தது...

''இப்பல்லாம் தம்பூராவுக்கு ஏது மவுசு.. கைக்கு அடக்கமா எத்தனையோ சுதிபாக்ஸ் வந்துடுத்து... எல்லாம் ஈஸியாப் போய்டுத்து... அது சரி, தம்பூராவுலயும் கத்துக்கறதுக்கு என்ன இருக்குன்னு இவ்வளவு ஆசையா வந்து நிக்கறேன்?... சின்னக் கொழந்தை கூட ரொட்டீனா வாசிச்சுடுமே?!''- என்று சொன்னவர், ''ஏன்... வாய்ப்பாட்டு, வயலின்னுட்டு ஏதானும் உருப்படியா போய்க் கத்துக்காமெ, அதிசயமா இதைக் கத்துக்க வந்து நிக்கறேளே?!''- என்றார்.

அவரிடம், இதற்கு எந்தவித பதிலும் சொல்லும் நிலைமையில் நான் இல்லை...

சோர்ந்த உள்ளமும் தொய்ந்த உடலுமாக என் வீட்டை நோக்கி நடந்தேன்...

வீட்டில் நுழைந்து மிகுந்த ஆயாசத்தோடு சோபாவில் அமர்ந்தேன்... உள்ளேயிருந்து வந்த வனஜா என் அருகே வந்து நின்று, மிகுந்த கரிசனத்தோடு,

''நீங்க 'ஓங்க பாட்டுக்கு', எப்பவும் போல, பாத்ரூம்லயும் கண்ணாடிக்கு எதுத்தாப்ல கம்பீரமா நின்னுண்டும், '...உனக்கும் எனக்கும், இசைந்த பொருத்தம், என்ன பொருத்தமோ...'ன்னு ஜாலியா பாடிண்டு இருக்கறதை வுட்டுட்டு, இப்படி அலைஞ்சு திரிஞ்சு துரும்பாப் போய்ட்டேளே!''- என்று மருகிவிட்டாள்.

கொஞ்சம் நிதானமாக யோசித்ததில் 'இதுவும் சரிதான்' என்றே தோன்றியது!

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.



"டைரக்டர் சார்... நான் டிரஸ்ஸே போடாம நடிக்கத் தயார்னுதான் ஒப்பந்தத்தில கையெழுத்து போட்டிருக்கேனே தவிர, நகையே போடாம நடிப்பேன்னு எழுதிக் குடுக்கலையே!"



"என் உடம்பு ஏன் இப்படி ஊதிப் போச்சு டாக்டர்?"

"நான் சொன்னா கேட்டீங்களா? உங்களுக்கு நகை 'அலர்ஜி' வியாதி. இப்படி இவ்வளவு நகை போட்டுக்கிட்டீங்கன்னா உடம்பு ஊதி டமால்னு வெடிச்சிடும்!"

# 'நகைச்' சுவை



"வாக்காளர் அடையாளச் சீட்டுக்குக் கூட இப்படி ஏராளமா நகை அணிந்து போட்டோ எடுத்துக்கணும்னு ஆசைப்படறது ஒரு புதுவித வியாதி. இதுக்கு நகையோமேனியான்னு பேர் வச்சிருக்கோம்...!"



"இந்த வட்டாரத்துல இவளுக்கு என்ன பேர் வெச்சிருக்காங்க தெரியுமா?"

"தெரியாதே...!"

"சேஃப்டி லாக்கர்!"



உதவி ஆசிரியர் : நம்மோட வைர நகை பரிசுத் திட்டத்துக்கு இந்த வாரம் ரொம்ப கஷ்டமான வாசகர் போட்டி தயாரிச்சிருக்கேன், ஸார்!

ஆசிரியர் : சொல்லு! சொல்லு!

உதவி ஆசிரியர் : தமிழர்கள் கடைசியாக சாப்பிடுவது சாம்பார் சாதம், ரசம் சாதம், மோர் சாதம். ஒன்றை 'டிக்' செய்க!

- கே. அனிதா, கோவை.

எனக்கு எய்ட்ஸ் வராது
ஏனெனில் நான் ஒரு டாக்டர்.





**எனக்கு எய்ட்ஸ் வராது.**
**ஏனெனில் நானும் என் வாழ்க்கைத் துணையும் ஒருவருக்கொருவர் உண்மையுள்ளவர்கள்.**

ஹெச்.ஐ.வி /எய்ட்ஸ் கிருமிகளுக்கு ஜாதி, மதம், ஆண், பெண் அல்லது தொழில் என்ற பாகுபாடு கிடையாது. அது யாரை வேண்டுமானாலும் தாக்கலாம். சமுகத்தின் பல மட்டங்களில் இருக்கும் சிலர் ஏற்கனவே எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டுள்ளார்கள். எனவே, நீங்களும் உங்கள் வாழ்க்கைத் துணையும் ஒருவருக்கொருவர் உண்மையுள்ளவராய் இருப்பதை எப்போதும் உறுதி செய்துகொள்ளுங்கள். எய்ட்ஸ் வராமல் தடுப்பதற்கு இதுவே மிகச்சிறந்த வழி.




மேலும் விவரங்களுக்கு:
தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு
417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை 600 008.
போன் : 8255261 / 8255467 / 8254917
24 மணிநேரமும் இயங்கும் ஹாட் லைன் :
8256882 / 8256864

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

# சுலபத் தவணையில் வீட்டு மனை

காசி குரூப் ஹவுசிங் பிளாட் ஸ்கீமில்

மாதத் தவணைகளாக

**ரூ.300/-** செலுத்தி **1,200** சதுர அடிகள்

**ரூ.450/-** செலுத்தி **1,800** சதுர அடிகள்

**ரூ.600/-** செலுத்தி **2,400** சதுர அடிகள்

உள்ள வீட்டு மனையை குலுக்கல் மூலம் தேர்ந்தெடுத்து சொந்தமாக்கி கொள்ளலாம்

**சிறப்பு அம்சங்கள் :**

* அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள். * சுவையான குடிநீர். * இரயில் நிலையம் மற்றும் நெடுஞ்சாலைக்கு அருகில் உள்ள மனைகள். * குறைந்த விலையில் நிறைந்த வசதிகள். * L.I.C., H.D.F.C., CANFIN Homes போன்ற நிதி நிறுவனங்கள் மூலமாக ரூ.1 இலட்சம் முதல் ரூ.5 இலட்சம் வரை குறைந்த வட்டியில் வீடு கட்ட கடன் வசதி பெறலாம்.

## சிறப்பு சலுகை

எங்களிடம் வீட்டுமனை பதிவு செய்பவர்களுக்கு

**2,400** சதுர அடிகள் - **40** கிராம் வெள்ளி நாணயம்

**1,800** சதுர அடிகள் - **30** கிராம் வெள்ளி நாணயம்

**1,200** சதுர அடிகள் - **20** கிராம் வெள்ளி நாணயம்

சிறப்பு சலுகையாக வழங்கப்படும்

வீட்டு மனை கிடைக்கும் இடங்கள் : தாம்பரம், பெருங்களத்தூர், மண்ணிவாக்கம், படப்பை, நெடுங்குன்றம், ஆலப்பாக்கம், ஊரப்பாக்கம், வண்டலூர், சிங்க பெருமாள் கோயில், கூடுவாஞ்சேரி, மறைமலை நகர், காட்டுப் பாக்கம், பெருங்குடி, சோழிங்கநல்லூர், ரெட் ஹில்ஸ், வில்லிவாக்கம், அம்பத்தூர், ஆவடி, பட்டாபிராம், திருநின்றவூர், செவ்வாய்பேட்டை, திருவள்ளூர், போரூர், குன்றத்தூர், மாங்காடு, மௌலிவாக்கம், பூந்தமல்லி, திருமழிசை, எண்ணூர், மீஞ்சூர், பொன்னேரி

## தவணை முறையில் சொந்த வீடு

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமில் ரூ.1,650/- முதல் ரூ.10,000/- வரை மாதத் தவணைகளாக செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1,000 சதுர அடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை வாடகை போல் வீட்டில் இருந்து கொண்டே செலுத்தலாம்.

**வீடு கிடைக்கும் இடங்கள்**

சென்னை : [illegible] ரூ.700/- [illegible] மதுரை : [illegible] ரூ.550/- [illegible] திருச்சி : [illegible] ரூ.550/- [illegible] கோவை : [illegible] ரூ.700/- [illegible] பெங்களூர் : [illegible] ரூ.1,000/- [illegible]

எங்களிடம் வைப்பு நிதிக்கு

**18%** முதல்

**27%**

ஞாயிறு அலுவலகம் உண்டு

**KGC**

**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்,**
**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

91-92, [illegible] காசி நிகேட்டன் காம்ப்ளக்ஸ், அசோக் நகர், சென்னை - 600 083. போன் 4892206, 4895506, 4891969, 4896373, 4896409. பேக்ஸ் 044-4895606 கிளைகள் சென்னை [illegible]: 13, [illegible] சென்னை-600 015. போன் 456464 • மயிலாப்பூர் :140, [illegible] மயிலாப்பூர், சென்னை - 600 004 • திருவான்மியூர்: கதவு எண் 10, [illegible] 64, [illegible] திருவான்மியூர், சென்னை - 600 041 • அம்பத்தூர்: எண் 11, [illegible] அம்பத்தூர், சென்னை - 600 053. போன் 682592 • மடிப்பாக்கம் : [illegible] மடிப்பாக்கம், சென்னை - 600 091 • கோவை : [illegible] 594/4, [illegible] கோவை - 641 002. போன் 439656 • கோவை : ஸ்ரீ [illegible] 209/8, [illegible] கோவை - 641 012. • திருத்தணி : [illegible] திருத்தணி - 631 213. போன் 88304 • திருச்சி : 5/8, 25, [illegible] திருச்சி - 620 001. போன் 466003 • திருச்சி : 32B/2, [illegible] திருச்சி - 620 001. போன் 466002. • மதுரை : 246A, [illegible] மதுரை - 625 001. போன் 741190 • பெங்களூர் : 33, 2வது மாடி, [illegible] பெங்களூர் - 560 003. போன் 3363351 • பெங்களூர் : 1532, 26வது மெயின், [illegible] பெங்களூர் - 560 041. போன் 6652480 • மைசூர் : 20, [illegible] மைசூர் - 570 001. போன் 435997 • குண்டூர் : 4-8-14 [illegible] குண்டூர் - 522 007. போன் 355257 • மும்பாய் : 203A, [illegible] மும்பாய் - 400 002. போன் 4082649 • புது டெல்லி : [illegible] 82E, POCKET -3, மயூர் விஹார், புது டெல்லி

Dubai : Nada Al Zuhoor Trading Est., P.Box No.27857, Dubai, U.A.E. Tel.: 00971 4 249354 Fax: 00971 4 221545